ணஞ் செய்துகொள்வதற்காகப் பார்க்க வந்தவர்களுக்கு அன்னமளிப்பதற்காக ரகசியமாக நெல்லைக் குத்தினள். அப்பொழுது அவள் கையில் அணிந்திருந்த வளைகள் மிகவும் சப்திதன. அதனைக் கேட்டு அந்தப் பெண் மிக்க வெட்கமடைந்து, சப்தம் உண்டாகாமல் இருப்பதற்காக ஒவ்வொன்றாக உடைத்தாள். ஒவ்வொரு கையிலும் இரண்டு வளைகள் மிஞ்சின. பின்பு முன்போல் நெல்லைக் குத்தும்பொழுது அவ்விரண்டு வளைகளும் ஒன்றோடொன்று சேர்ந்து சப்தித்தன. அப்பொழுது ஒரு வளையை உடைத்தாள்; ஒன்று எஞ்சியது. அதனால் சப்தமுண்டாகவில்லை. ஆனதால் உலகத்தின் உண்மையைத் தெரிந்துகொள்வதற்காகச் சஞ்சரித்த நான் இதை அந்தச் சிறு பெண்ணினிடமாகத் தெரிந்துகொண்டேன். அனேகர்கள் சேர்ந்து ஒரு இடத்தில் வசித்தால் சண்டைக்கு ஏதுவாகும். இருவர்களாக வசித்தால் வார்த்தைக்கு இடமாகும். ஆனதால் அந்தச் சிறுமியின் வளை போல் ஒருவனாகவே சஞ்சரிக்கவேண்டும்.)

(11—13. சுகமான ஆசனத்தில் உட்கார்ந்து சுவாசத்தை அடக்கி, பல விஷயங்களில் செல்லுகிற மனத்தை வைராக்கியத்தால் தடுத்து, அப்பியாச விசேஷத்தால் லட்சியத்தில் ஸ்திரமாகச் செலுத்தவேண்டும்.) லயம், விட்சேபம் இவைகளைச் சுபாவமாகக்கொண்ட மனமானது பகவானிடத்தில் செலுத்தப்பட்டு ஸ்திரப்படுமானால் கிரமமாகக் கர்மவாசனைகளை ஒழிக்கும்; (சத்வ குணம் விருத்தியாகும். அப்பொழுது ரஜோ குணமும், தமோ குணமும் நசிக்கும். அப்பொழுது எரிப்பதற்குக் கட்டையில்லாமல் அக்கினி சாந்தமாவதுபோல் மனத்திற்கு விருத்திகள் அற்றுப்போவதால் பிரம்மாகாரமாக இருந்து சாந்தி அடையும். அம்பைக் கோணலின்றி ருசுவாகச் செய்வதில் நோக்கமுள்ளவனுடைய அருகில் அரசன், பேரிகை-

முதலிய வாத்திய கோஷங்களுடன் சென்றாலும் அரசன் போகிறானென்பது எப்படி அவனுக்குத் தெரியாதோ அப்படி விருத்திகளற்று ஆத்மாகாரமாக இருக்கும் மன முள்ளவன் வெளியில் நடப்பதையாவது முன்னே நடந்ததையாவது ஒன்றையும் அறியாதவனாக இருப்பான்.

14–15. சர்ப்பம் எப்படி ஜனங்களிடம் பயந்து தனியாகச் சஞ்சரிக்கிறதோ, (யோகிகளானாலும் அநேகர்களுடன் வசிக்கக்கூடாதென்பது சிறுமியினிடமாக அப்யசிக்கப்பட்டது. (சாமான்ய ஜனங்களுடன் சேரக்கூடாதென்பது சர்ப்பத்தினிடம் கற்றுக்கொண்டேனென்று தாத்பரியம்.)) எப்படி ஸ்திரமாக வீட்டை வைத்துக்கொள்ளவில்லையோ, எப்பொழுதும் ஜாக்கிரதையாயிருக்கிறதோ, ரகசியமாகக் கண்டுபிடிக்கமுடியாததா யிருக்கிறதோ, (விஷமுள்ளதோ அல்லது விஷமில்லாததோவென்று) அப்படி முனியாக இருப்பவனும் இருக்கவேண்டும். அதிகமாகப் பேசக்கூடாது. சரீரம் ஸ்திரமில்லாததால் அதன் வாசத்திற்காக வீடு கட்டுவது துக்கத்தையே விளைவிக்கிறது. அதனால் பிரயோஜனமில்லை. சர்ப்பமானது பிறரால் செய்யப்பட்ட கிருகத்தில் பிரவேசித்துச் சுகமாக விருத்தியடைகிறதல்லவா?

16–21. பிரளய காலத்தில் நாராயணர் ஒருவரே முந்தித் தம்முடைய மாயையைக்கொண்டு சிருஷ்டிக்கப் பெற்ற இந்த உலகத்தைக் கால சக்தியைக்கொண்டு சங்கரித்துத் தாமொருவராக இருந்தார். அவர் ஸஜாதீய பேதமற்றவர்; விஜாதீய பேதமற்றவர்; சத்வம் முதலிய சக்திகள் ஸாம்யாவஸ்தையை அடைந்தபொழுது பிரதானம், புருஷன் இவைகளுக்கு அதிபதியாகத் தம்மைக் காட்டிலும் வேறு ஆதாரமற்றவராக இருந்தார். அவரே உபாதியற்றவர்; பரமானந்த சுரூபி; கைவல்யமென்ற சப்தத்தின் பொருள்; பிரும்மதேவர், முக்தர்கள் ஆகிய

இவர்களால் அடையக்கூடியவர்; பின்பு அவர் தம்முடைய மகிமையான காலத்தால் முக்குண சுரூபமாகிய மாயையைத் தூண்டி அதைக் கொண்டு மகத தத்துவத்தைப் படைக்கிருர். ஓ ஆசை முதலிய சத்துருக்களை ஜயித்தவரே! (சம்சாரத்திற்குக் காரணமான மகத தத்வத்தைச் சிருஷ்டிக்கிருர் என்பதைக் கேட்டுப் பயப்பட வேண்டாமென்று கருத்து.) அந்த மாயாகாரியமான மகத் தத்வப லவகையான உலகத்தை அகங்காரத்தின் வழியாகப் படைக்கிறதென்று பெரியோர்கள் சொல்லுகிருர்கள். அதனிடத்தில் இந்த உலகமானது கோர்க்கப்பட்டிருக்கிறது. அதனுல் ஜீவன் சம்சாரத்தை அடைகிருன். அந்தக் காரணத்தால் அதனை ஸூத்ராத்மாவென்கிருர்கள். பட்டுப்பூச்சியானது இருதயத்திலிருந்து உண்டான பட்டு நூல்களை முகத்தால் விஸ்தரித்து, அதனுல் விளையாடி, திரும்பவும் எப்படி விழுங்குகிறதோ அது போல மகேசுவரன் உலகத்தைப் படைத்துச் சங்கரிக்கிருர்.

22—23. குளவியானது புழுவைக் கூட்டிலடைத்து அதைச் சுற்றிச் சப்தித்துக்கொண்டிருக்கிறது. அதனைக் கேட்டு உள்ளிருக்கும் புழு மனத்தை அதிலேயே செலுத்தி முந்திய சுரூபத்தை விடாமலேயே குளவியாக ஆகிறதுபோல் சிநேகத்தாலாவது, துவேஷத்தாலாவது, பயத்தாலாவது ஜனங்கள் மனத்தை எவ்விடத்தில் ஸ்திரமாகச் செலுத்துகிருர்களோ, அவர்கள் அதன் சாரூப்யத்தை அடைவார்கள்.)

24—33. மேற்காட்டியவைகளிடமிருந்து மேற்காட்டிய குணங்களை எடுத்துக்கொண்டேன். இனி என்னுடைய தேகத்தினிடமாகத் தெரிந்துகொண்டதைச் சொல்கிறேன், கேளும். இந்தத் தேகமானது மிக்க துக்கத்தைக் கொடுக்கக்கூடிய ஜனன மரணங்களுள்ளது; அத-

னுல் வைராக்கியம், விவேகம் இவைகளுக்குக் காரணமாக உள்ளது; அதனுல் எனக்குக் குருவாயிற்று. இதனுல் உண்மையை ஆலோசித்து, பிந்தி இந்தச் சரீரத்தை நாய் முதலியவை பட்சிக்கப்போகின்றனவானதால் இது பிற ருடையது என்று நிச்சயித்து, அதில் அபிமானத்தை ஒழித்துச் சஞ்சரிக்கிறேன். மேலும், இந்தச் சரீரத்தின் உபயோகத்திற்காகவே மனைவி, மக்கள், பணம், பசுக்கள், வேலைக்காரர்கள், வீடு, பந்துக்கள் இவர்களைப் போஷிக் கிறார்கள். அதற்காகவே மிக்க சிரமப்பட்டுப் பணத்தை யும் சம்பாதிக்கிறார்கள். அப்படிப்பட்ட சரீரம் நசித்து விடுகிறது. பின்னும், அந்தத் தேகம் தான் நசிக்கும் பொழுது வேறு சரீரத்தைக் கொடுக்கக்கூடிய கர்மமாகிய விதையை உண்டுபண்ணிவைக்கிறது. (சரீரம் போன பிறகும் ஜீவனுக்குக் கஷ்டம் நிவர்த்தி அடையவில்லை.) மரமானது விதையை உற்பத்தி செய்துவிட்டு நசிக்க வில்லையா? மேலும், அநேகம் பெண்களை மணஞ்செய்து கொண்ட ஒரு புருஷனை ஒவ்வொரு ஸ்திரீயும் தனியாகப் பிடித்து இழுப்பதுபோல், மனிதனை நாக்கு ஒரு பக்கத்தி லிழுக்கிறது; ஒரு சமயம் தாகம் உபத்திரவிக்கிறது; மற்றொரு சமயம் சிச்னம் [ஆண் குறி], மற்றொரு வேளை தோலும், பின்னும் ஒரு சமயம் வயிறும், மற்றொரு சமயம் காதும், இன்னுமொரு சமயம் மூக்கும், சஞ்சலமான கண் அதன் விஷயமான ரூபத்திலும், மற்ற கர்மேந்திரியங் கள் அதன் விஷயங்களிலும் ஜீவனை அல்லது தேகத்தை இழுத்துக்கொண்டு செல்லுகின்றன. (அதனுல் தேகத் தைப் பார்த்து வைராக்கியம், விவேகம் இவைகளையடைய வேண்டுமென்று கருத்து.) மேலும், பரமேசுவரன் தம் முடைய சக்தியாகிய மாயையைக்கொண்டு மரங்கள், சர்ப் பங்கள், பசுக்கள், பறவைகள், கொசுக்கள், மீன்கள் முத லிய சரீரங்களைப் படைத்து, அதனுல் திருப்தியடையாமல் புருஷ சரீரத்தைப் படைத்துச் சந்தோஷித்தார். புருஷ

சரீரத்தில் பிரம்மத்தைத் தெரிந்துகொள்ளக்கூடிய புத்தி இருக்கிறது. இந்த மனித ஜன்மம் கிடைப்பது மிக்க அரிது. அநேக ஜன்மங்கள் எடுத்த பின் மனித ஜன்மம் கிடைக்கும். அப்படி துர்லபமான தேகத்தை அடைந்தும் அது அஸ்திரமானதால் அந்தச் சரீரம் நாசமடைவதற்கு முன்னமேயே க்ஷேமத்தை அடையும் உபாயத்தைச் செய்யவேண்டும். விஷய சுகத்தில் ஆசைப்படக்கூடாது. விஷய சுகம் தாழ்ந்த ஜன்மத்திலும் கிடைக்கிறது. இப்படி அநேக ஆசாரியர்களிடமாக ஞானோபதேசத்தை அடைந்து, ஆசையை யொழித்து, அகங்கார மற்று ஆத்ம சுரூபத்தில் ரமித்துக்கொண்டு இப் பூமியில் சஞ்சரிக்கிறேன். மகரிஷிகள் இந்தப் பிரம்மத்தைப் பிரபஞ்சமுள்ளதென்றும் பிரபஞ்சமற்றதென்றும், பல வகையாகச் சொல்லுகிறார்கள். ஆனதால் ஒரே குருவினிடமிருந்து பூர்ணமான ஞானமுண்டாகிறதில்லை' என்று அந்தப் பிராம்மணன் (தத்தாத்திரேயர்) யதுவை நோக்கிச் சொல்லி, அவரிடம் விடைபெற்று அரசனால் நமஸ்கரிக்கப்பெற்று, பூசிக்கப்பெற்று வந்த வழியே திரும்பிச் சென்றார். இம்மாதிரியான அவதாரருடைய வார்த்தையைக் கேட்டு நம்முடைய பெரியோர்களுக்குள் பெரியவரான யதுவானவர் சகல ஆசைகளையும் ஒழித்துச் சமபுத்தி உள்ளவராக ஆனார் என்று ஸ்ரீ கிருஷ்ணன் உத்தவருக்குச் சொன்னார்.

---

# அத்தியாயம் 10

## தத்துவ ஞான சாதனங்கள்

***1—11.*** ஸ்ரீ கிருஷ்ணன் உத்தவரை நோக்கி 'என்னால் சொல்லப்பட்ட பாஞ்சராத்ரம் முதலிய தர்மங்களுக்கு விரோதமின்றி என்னையே ஆசிரயித்து, தனது ஜாதிக்கும், ஆசிரமத்திற்கும், குலத்திற்கும் தகுதியான ஆசாரத்தை அனுஷ்டிக்கவேண்டும். தனக்குரிய தர்மத்தை அனுஷ்டிப்பதால் சித்தம் சுத்தமாகும். அப்பொழுது ஜனங்கள் விஷயங்களைச் சத்தியங்களென்று நினைத்துச் சகல காரியங்களையும் ஆரம்பிக்கிறார்கள். அவைகளின் பயனோ விபரீதமாக ஆகிறது' என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். மேலும், இந்திரியங்களால் பலவகையான காயனைகள் ஏற்படுகின்றன அல்லவா? அவைகள் பலவகையானதாலும், இந்திரியங்களால் உண்டானவையானதாலும் பயனற்றவை. மனத்தாலுண்டாகும் சொப்பனம், மனோரதம் ஆகிய இவைகளே அவைகளுக்கு உதாரணங்களாகின்றன. மோட்சத்தை விரும்பியவன் காம்ய கர்மங்களை அனுஷ்டிக்கவேண்டாம்; நித்ய நைமித்திகமான கர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும். மேலும், நன்றாக ஆத்ம விசாரம் செய்பவன் காமங்களைச் செய்யவேண்டுமென்ற விதியையும் ஆதரிக்கவேண்டாம்; பிறருக்கு இம்சை செய்யாமலிருப்பது முதலிய கர்மங்களை மிக்க ஆதரவுடன் எப்பொழுதும் அனுஷ்டிக்கவேண்டும். (சௌசம் முதலிய நியமங்களை ஆத்ம ஞானத்திற்கு விரோதமின்றி, தன்னுடைய சக்திக்குத் தக்கவாறு சில சமயம் அனுஷ்டிக்கவேண்டும்) (யமம், நியமம் இவைகளின் சுரூபமும் 19-வது அத்தியாயத்தில் காட்டப்பட்டிருக்கிறது.) பின்னும் என்னைத் தெரிந்துகொண்டவனும், என்னுடைய சுரூபியும், சாந்தனுமாகிய குருவை

மிக்க ஆதரவுடன் உபாசிக்கவேண்டும். ஆசாரியனை உபாசிப்பவன் எப்படி இருக்கவேண்டும் என்றால் அகங்காரமற்றவனாகவும், மாத்சரியமில்லாதவனாகவும், சோம்பலில்லாதவனாகவும், புத்திரன் முதலியவர்களிடத்தில் 'தன்னுடையது' என்ற மமதை இல்லாதவனாகவும், ஆசாரியனிடத்தில் நிரந்தரமான பிரீதி உள்ளவனாகவும், பரபரப்பு இல்லாதவனாகவும், விஷயத்தைத் தெரிந்து கொள்ளவேண்டுமென்ற விருப்பம் உள்ளவனாகவும், அசூயை அற்றவனாகவும் (குணங்களைத் தோஷமாகச் சொல்வது அசூயை), வீண் வார்த்தை பேசாதவனாகவும் இருக்கவேண்டும்.) மேலும், சகல தேகத்திலுமிருக்கும் ஆத்மா ஒருவரானதால் சகல சரீரங்களிலும் ஆத்மாவிற்கு சுகம் சமமானது. ஆனதால் புத்திரன், களத்திரம், வீடு, வயல், பந்துக்கள், பணம் இவைகளை மாத்திரம் என்னுடையவை என்று ஏன் நினைக்கவேண்டும் என்று எண்ணி அவைகளில் உதாசீனனாக இருக்கவேண்டும். எரிக்கும் அக்கினியானது தன்னால் எரிக்கத் தக்க கட்டையைக் காட்டிலும் எப்படி வேறானதோ, பிரகாசத்தை உண்டுபண்ணும் அக்கினி எப்படிப் பிரகாசிக்கும் வஸ்துக்களைக் காட்டிலும் வேறானதோ, அப்படி ஆத்மா எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருப்பதனால் பார்க்கப்படும் வஸ்துக்களைக் காட்டிலும் வேறானவர். பின்னும், ஆத்மா தாமாகப் பிரகாசிப்பவரானதால் ஜடங்களைக் காட்டிலும் விலட்சணர். ஆனதால் தூல, சூட்சுமங்களைக் காட்டிலும் ஆத்மா விலட்சணர். ஆனதால் தேக விலட்சணராகிய ஆத்மா எல்லாத் தேகங்களிலும் ஒருவரானதால் புத்திரன் முதலியவர்களிடத்தில் மமதை செய்யவேண்டாம். ஆத்மாவிற்கு நாசம், ஜனனம் இவைகளில்லை. ஆத்மா அணுவுமல்ல, பெரிதுமல்ல, அனேகமு

மல்ல. அவைகள் சரீர தர்மங்களேயாம். ஆனாலும் ஆத்மா சரீர சம்பந்தத்தை அடைந்து அந்தத் தர்மங்களுள்ளவர் போலத் தோன்றுகிறார். (நாசம், ஜனனம், அணுவாயிருப்பது, பெரிதாயிருப்பது, அனேகமாயிருப் இவையெல்லாம் சரீரத்தின் தர்மமானதால் அந்தந்த உபாதி சம்பந்தத்தால் ஆத்மாவிற்கும் அவைகளிருப்பதாகத் தோன்றுகிறதே ஒழிய உண்மையில் இல்லை.) ஈசுவரனுக்குச் சுவாதீனமான மாயையின் குணங்களால் இந்தச் சரீரம் உண்டுபண்ணப்பட்டிருக்கிறது, அதனை ஆத்மாவென்று நினைத்ததால் சம்ஸாரமேற்பட்டது. அது ஆத்ம ஞானத்தால் நிவர்த்தியாகவேண்டும். ஆனதால் ஆத்ம விசாரஞ்செய்து இந்தச் சரீரத்திலேயே பரமாத்மா இருப்பதாகத் தெரிந்துகொண்டு தூல சூட்சுமங்களை ஆத்மாவென்று நினைத்திருந்ததைக் கிரமமாக மாற்றிக் கொள்ளவேண்டும்.

12—13. மேல் அரணி, கீழ் அரணி இவைகளைச் சேர்த்துக் கடைவதாலுண்டான அக்னியானது சமித்துகளை எரித்து, சமித்து இல்லாதபொழுது சாந்தமாவது போல் ஆசாரியனால் சிஷ்யனுக்கு உபதேசிக்கப்பெற்ற வித்தை (ஞான) குணங்களாலுண்டான மாயையை நிவர்த்திக்கிறது. அப்பொழுது பரமானந்த சுரூபமாகிறான். ஆசாரியனே அதராரணி, சிஷ்யன் மேலரணி; அவர் சிஷ்யனுக்கு உபதேசிப்பதே அரணிகளுடைய சேர்க்கை. அதனால் உண்டாகும் வித்தையே அக்கினி. [சுத்தமானதால் அக்கினியென்று சொல்லப்பட்டது.]

14—20. (ஆத்மா தாமாகப் பிரகாசிப்பவர்; ஞான சுரூபி; நித்தியர்; ஒருவர்; அதைக்காட்டிலும் மற்றவை எல்லாம் அனித்தியங்கள்; மாயா காரியங்கள். ஆனதால் அவைகளில் ஆசைப்படாமல் ஆத்ம ஞானத்தை யடைந்தால் மோட்சத்தை அடைவாயென்ற வேதத்தின் தாத்

பரியம். மேற்காட்டிய சுலோகங்களால் காட்டப்பட்டது. இனி இதற்கு விரோதமாகச் சொல்லுபவர்களுடைய அபிப்பிராயத்தைக் காட்டி நிராகரிக்கப்படுகிறது.) கர்மங்களை அனுஷ்டிக்கும் ஜீவர்கள் அவைகளின் பயனுகிய சுக துக்கங்களை அனுபவிக்கிருர்கள். அவர்கள் அனேகர்கள்; சுவர்க்கம் முதலிய போகஸ்தானமாகிய லோகமும், அனுபவிக்கும் காலமும், அனுபவிப்பவர்களும் நித்தியர்களென்றும், புஷ்பமாலை, சந்தனம் முதலிய போக்கிய வஸ்துக்கள் பிரவாக நித்தியங்களென்றும், அவைகள் உண்மையானவைகளே யொழிய மாயாமயங்களல்ல; இது குடம், இது வஸ்திரம் என்று பலவகையாக ஞானமுண்டாகிறதனுல் ஆத்ம ஞானம் நித்தியமல்ல; ஒன்றல்லவென்றும் நினைக்கிருயா ? (நான் என்ற ஞானத்தால் அறியப்படுகிறதே ஆத்மா. ஒவ்வொரு சரீரத்திலும் ஒவ்வொரு ஆத்மா கர்மங்களை அனுஷ்டிப்பவனும் (கர்த்தா) சுகதுக்கங்களை அனுபவிப்பவனுமாக (போக்தா) இருக்கிருன். விகாரமற்று ஆத்மா ஒருவனுக இருக்கிருனென்பதில்லை. சுகங்களை அனுபவிக்கும் இடங்களாகிய சுவர்க்கம் முதலியவைகளும், அனுபவ காலமும், போக்தாவாகிய புருஷனும் நித்தியங்களே. போக்கிய வஸ்துக்களும் நித்தியங்களே. ஞானம் பலவகையாக உண்டாவதால் ஆத்ம ஞானம் ஒன்றல்ல. இந்த ஜகத்தைப் படைப்பவரான ஈசுவரன் ஒருவர் இருக்கிருரென்பதில்லை. இது சுதந்திரமானது என்று ஜைமினியின் அபிப்பிராயம்.) ஓ உத்தவ! மேற்காட்டிய மதத்தை ஒப்புக்கொண்டாலும் பிராணிகளுக்குத் தேக சம்பந்தத்தாலும், சம்வத்ஸரம் முதலிய காலத்தின் அவயவத்தாலும் ஜன்மம் முதலிய விகாரங்கள் ஏற்படுகின்றன. ஜீவர்களை சுதந்திரர்களென்று ஒப்புக்கொண்டால் துக்கத்தைக் கொடுக்கும் கர்மங்களை அனுஷ்டித்து துக்கத்தை

ஏன் அனுபவிக்கிறார்கள்? ஆனதால் கர்மங்களைச் செய்வதில் ஜீவர்களுக்கு சுவாதந்திரியம் இல்லை என்று காணப்படுகிறது. சுவாதந்திரியம் இல்லாதவனுக்கு என்ன புருஷார்த்தம் கிடைக்கும்? நல்ல கர்மங்களை அனுஷ்டித்து சுகத்தை அனுபவிக்கலாமென்ற ஞானம் இல்லாத மூடர்கள் துக்கத்தை அடைகிறார்கள் என்று சொல்வதும் பொருந்தாது. ஏனென்றால், எவன் வித்துவானோ அவன் சுகத்தை அடைகிறானென்பதில்லை. மூடன் துக்கத்தை அடைகிறான் என்பதுமில்லை. ஆனதால் நாம் நல்ல காரியத்தைச் செய்து சுகமாக இருக்கிறோமென்று நினைப்பது வீணான அகங்காரமேயாம். (ஈசுவரனுக்கு வசப்பட்டுக் கர்மங்களைச் செய்கிறார்கள் என்று கருத்து.) சுகத்தைச் சம்பாதித்துக்கொள்ளும் உபாயமும், துக்கத்தை வரவொட்டாமல் தடுப்பதற்கு உபாயமும் ஜீவர்களுக்குத் தெரியுமானால் மிருத்யுவை வரவொட்டாமல் தடுப்பதற்கும் உபாயமும் தெரிந்திருக்கலாம். (அப்படி இல்லையென்று கருத்து.) (கொலைக்களத்திற்குச்சென்றவனுக்கு மற்ற விஷயங்கள் சந்தோஷத்தை எப்படி உண்டுபண்ணுகிறதில்லையோ, அப்படி சமீபத்தில் மிருத்யு இருக்கும்பொழுது எதுதான் மனிதனுக்கு சந்தோஷத்தைக் கொடுக்கும்?) (ஆனதால் இவ்வுலகத்தில் சுகமே இல்லை.) சுவர்க்கத்தில் சுகமிருப்பதாகக் கேட்டிருந்தாலும் அது இவ்வுலகத்திய சுகம் போன்றதேயாம். ஏனென்றால் அவ்விடத்தில் பிறர் சுகப்படுவதைப் பார்த்துச் சகியாமலிருப்பது, குணங்களைத் தோஷமாகச் சொல்வது, குறைவு, நாசம் இவைகள் இருக்கின்றன. மேலும், அவைகளை அடைவதற்கு யாகத்தைச் செய்ய வேண்டும். அதற்குப் பலவகையான இடையூறுகள் இருக்கின்றன. ஆனதால் கிருஷிபோல் அதுவும் சுகமானதல்ல. இடையூறின்றி யாகம் முதலிய தர்மங்களை

அனுஷ்டித்து சுவர்க்கம் முதலிய லோகத்தைச் சம்பாதித்தாலும் அதன் சுகத்தைப்பற்றிச் சொல்லுகிறேன், கேளும். தீட்சிதர்கள் இவ்வுலகத்தில் யாகங்களைச் செய்து தேவதைகளைப் பூசித்து சுவர்க்க லோகத்திற்குச் செல்லுகிறார்கள். அவ்விடத்தில் தேவர்களைப்போல் தங்களுடைய கர்மத்தால் சம்பாதிக்கப்பெற்ற போகங்களை அனுபவிக்கிறார்கள். மேலும், சகல போக்கிய வஸ்துக்களுள்ள சுத்தமான விமானத்தில் கந்தர்வர்களால் கானஞ் செய்யப்பட்டு, தேவஸ்திரீகளின் நடுவில் அழகிய சரீரத்துடன் வசிக்கிறார்கள். மேலும், சலங்கை கட்டியதும் இஷ்டப்படி செல்லக்கூடியதுமான விமானத்தில் ஸ்திரீகளுடன் ஏறிக்கொண்டு நந்தவனம் முதலிய தோட்டங்களில் விளையாடுகிறார்கள். அப்பொழுது தாங்கள் பூமியில் விழப்போகிறதை நினைக்கிறதில்லை. புண்ணியம் இருக்கும் வரையில் சந்தோஷமாக இருப்பார்கள். புண்ணியம் குறைந்தவுடன் காலத்தால் தூண்டப்பட்டுப் பூமியில் விழுகிறார்கள். வேத விதியை மீறி எவன் அதர்மத்தில் விருப்பமுள்ளவனாகி அசத்துக்களுடன் சேர்ந்து இந்திரியங்களுக்கு வசப்பட்டு, போகங்களில் ஆசை கொண்டு ஸ்திரீ சுகத்தை விரும்பிப் பிராணிகளை இம்சிக்கிறானோ, பசுக்களைக் கொன்று பிரேதம், பூதகணம் ஆகிய இவைகளைப் பூஜிக்கிறானோ அவன் வெகுகாலம் நரகத்தையடைந்து தாவர ஜன்மத்தை அடைவான். இப்படி தேகத்தால் துக்கத்தைக் கொடுக்கக்கூடிய கர்மங்களைச் செய்து அதனால் திரும்பவும் தேகத்தை அடைகிறான். ஆனதால் மரண தர்மமுள்ளவனுக்கு சுகமேது? சுவர்க்கம் முதலிய லோகங்களுக்கு அதிபதிகளான இந்திரன் முதலியவர்களுக்கும் என்னிடமிருந்து பயமுண்டாகிறது. இரண்டு பரார்த்தம் வரையில் ஜீவிப்பவரான பிரம்ம தேவருக்கும் என்னிடமிருந்து பயமிருக்கிறது. (பிர

விருத்தி மார்க்கம் அனர்த்தத்தைக் கொடுக்கிறதான தால் அதில் வைராக்கியத்தை அடைவதே மேலானது என்று கருத்து.)

31—34. (இந்திரியங்கள் கர்மங்களைச் செய்கின்றன. சத்துவம் முதலிய குணங்கள் இந்திரியங்களைத் தூண்டுகின்றன. இந்திரியங்களுடன் சம்பந்தித்த ஜீவன் கர்மங்களின் பயனை அனுபவிக்கிறான்.) (ஆத்மா ஒன்றையும் செய்யவில்லை. பயனையனுபவிப்பதும் ஆத்மாவிற்கு உபாதியால் ஏற்பட்டதேயொழிய உண்மையிலில்லை என்றும் தாத்பரியம்.) குணங்களால் ஏற்படும் போகம், கர்மம் இவை எதுவரையிலிருக்கிறதோ, அதுவரையில் ஆத்மா அநேகன் என்று தோன்றும். எதுவரையில் ஆத்மா பலவென்று தோன்றுகிறதோ, அதுவரையில் பரதந்திரனாகத் தன்னை நினைத்துக்கொள்வான். எதுவரையில் பரதந்திரன் என்று நினைக்கிறானோ, அதுவரையில் ஈசுவரனிடமிருந்து பயமுண்டாகும். இப்படி இருப்பவர்கள் துக்கத்தை யடைந்து மோகிப்பார்கள். குண க்ஷோபம் உண்டாகும்பொழுது என்னைக் காலம், ஆத்மா, ஆகமம், லோகம், சுபாவம், தர்மம் என்று பலவகையாகச் சொல்லுகிறார்கள்" என்று சொன்னார்.

35—37 அதனைக் கேட்டு உத்தவர் பகவானை நோக்கி, "குணங்களாலுண்டான சரீர சம்பந்தமுள்ள புருஷனுக்குக் கர்மம், சுகம், துக்கம் முதலியவைகள் இல்லாமல் எப்படியிருக்கும்? அவைகளில் அகங்காரத்தை அடையாமலிருந்தால் அவைகள் பந்தங்களாகிறதில்லை என்றால் அப்படிப்பட்டவன் எப்படி இருப்பான்? எப்படி விளையாடுவான்? எந்த அடையாளங்கள் உள்ளவனாக இருப்பான்? எதனைப் புசிப்பான்? எதனை விடுவான்? எப்படிப் படுத்திருப்பான்? அல்லது உட்கார்ந்திருப்பானா? நடந்துபோவானா? ஓ அச்சுத! ஒருவனே

நித்திய பத்தனாகவும், நித்திய முக்தனாகவும் எப்படி இருக்கக்கூடுமென்று எனக்கு மயக்கம் உண்டாகிறது. கேள்விகளை அறிந்தவர்களுக்குள் சிறந்தவரான நீர் இதனைச் சொல்லவேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

## நோட்டு

**வீரராகவீயத்தில்:—** 15-வது சுலோகத்தில் தேவாதி சரீரங்கள் அனேகங்களானதாலும், காரியமானதாலும் அநித்தியங்களானதாலும், பிரவிருத்தி கர்மங்களை விட்டுவிடலாமென்றும், போக்ய வஸ்துக்கள் புருஷார்த்தமாகாததனால் அவைகளில் பிரியம் வைக்கக்கூடாதென்றும் பூர்வபட்சம் ஏற்படுகிறது. ஆனாலும், அது சரியல்ல. தேவாதி சரீரங்கள் அநித்தியங்களானாலும், அந்தச் சரீரத்தை அடைந்த ஜீவர்கள் நித்தியர்கள். விஷயங்களின் பரம்பரையும் நித்தியம். ஆனதால், பிரவிருத்தி தர்மம், பயனை அனுபவிக்கும் சுபாவமுள்ள ஜீவர்களுக்குப் புருஷார்த்த சாதனமாகிறது. அதனை விட்டுவிடக்கூடாது.

---

# அத்தியாயம் 11

## (பத்த முக்த லட்சணங்கள்)

பந்தன் (சம்சாரி) முக்தனென்ற விவகாரம் எனக்குச் சுவாதீனங்களான சத்வம் முதலிய குணங்களால் ஏற்படுகிறதே யொழிய உண்மையில் இல்லை. (உபாதிகளால் ஏற்பட்டதென்று கருத்து.) அந்தக் குணங்களுக்கு மாயை காரணமாக இருக்கிறது. ஆனதால் பந்தம் (கட்டு) என்பதுமில்லை; மோட்சம் என்பதுமில்லை. மேலும், சோகம், மோகம், சுகம், துக்கம், தேகம் ஆகிய இவைகள் மாயையால் ஏற்படுகின்றன. ஆனதால் சம்சாரமென்பது உண்மையிலில்லை. புத்தியின் வேறு அவஸ்தையே சொப்பனமாகிறதல்லவா? ஓ உத்தவ! வித்தியா என்றும், அவித்தியா என்றும் இரண்டு சக்திகள் மாயையைக்

கொண்டு என்றால் உண்டுபண்ணப்பட்டிருக்கின்றன. அவை பிராணிகளுக்கு முறையே மோட்சம், சம்ஸாரம் ஆகிய இவைகளைக் கொடுக்கின்றன) அவைகள் அநாதிகள். [எப்பொழுது அவித்தையைப் பரவச்செய்கிறேனே அப்பொழுது சம்ஸாரமும், வித்தையைப் பரவச்செய்யும் பொழுது மோட்சமும் தோன்றுகின்றனவென்று தாத்பரியம்.] மிக்க புத்திசாலியாகிய ஓ உத்தவ! ஜீவனுக்கும் எனக்கும் பேதமில்லை. ஜீவன் என்னுடைய அம்சமேயொழிய வேறில்லை. அப்படிப்பட்ட ஒருவனுக்கே அநாதியான அவித்தியா சம்பந்தத்தால் பந்தமும் (சம்சாரம்), வித்யா சம்பந்தத்தால் மோட்சமும் ஏற்படுகின்றன. சந்திரன் ஒருவனானாலும் ஜலத்தில் பிரதிபலித்தால் (பிம்பம் பிரதிபிம்பம் என்ற பேதம் எப்படி உபாதி சம்பந்தத்தால் ஏற்படுகிறதோ, (ஜலம் அசைந்தால் பிரதிபிம்பமும் அசைவதாக எப்படித் தோற்றுகிறதோ, அப்படி அவித்தையில் பிரதிபலித்த என்னுடைய அம்சமே ஜீவன். அவனுக்கு அவித்தையால் பந்தம் ஏற்படுகிறது. மேலும் ஜலம் நிறைந்த குடத்திலும், குளத்திலும் சந்திரன் பிரதிபலித்தால் அந்தப் பிரதிபிம்பம் உபாதி பேதத்தால் குடத்தில் தோன்றுவதைவிடக் குளத்தில் தோன்றுவது வேறென்று நினைக்கப்படுகிறதில்லவா? அப்படி ஜீவன் உபாதி சம்பந்தத்தால் அநேகனாகத் தோன்றுகிறானே ஒழிய உண்மையில் என்னுடைய அம்சமே. குடம் உடைக்கப்பட்டால் அதில் தோன்றிய சந்திர பிம்பம் உபாதி நாசத்தால் பிம்பத்துடன் ஒன்றாகிவிடுகிறது. ஆனாலும் குளத்திலுள்ள பிரதிபிம்பம் அப்படியேயிருக்கிறது. அதுபோல் ஒரு ஜீவன் உபாதி நாசத்தால் என்னை அடைந்தாலும் உபாதியுள்ளவன் சம்சாரியாக இருக்கிறான் என்று கருத்து.) ஓ உத்தவ! ஈசுவரன் முக்தன். ஜீவன் சம்சாரி. அவ்விருவர்களும் ஒரே சரீ

ரத்திலிருக்கிறார்கள். ஆனால் ஜீவன் ஈசுவரனுக்கு வசப் பட்டவனாகவும், ஈசுவரன் நியந்தாவாகவும் இருக்கிறார். ஜீவன் சோகமுள்ளவன்; ஈசுவரன் ஆனந்தமுள்ளவர்; ஆனதால் அவ்விருவர்களும் விருத்த தர்மமுள்ளவர்கள்; அவ்விருவர்களுக்குமுள்ள வித்தியாசத்தைச் சொல்லு கிறேன்.

6. இரண்டு பறவைகள் ஒரு மரத்தில் வசித்தாற் போல் தேகத்தில் அதைக் காட்டிலும் வேறாக ஜீவன், ஈசுவரனாகிய இருவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஒரு வருக்கொருவர் சமானர்கள் (சித்ரூபிகளானதால்); தோழர் கள் (பிரிந்திருக்கிறதில்லை; ஒரே மனமுள்ளவர்கள்). இம் மாதிரி என்று குறிப்பிட முடியாததான மாயையால் அநித்யமான சரீரத்தில் பறவைகள் மரத்தில் கூடுகட்டிக் கொண்டு வசிப்பதுபோல் இருக்கிறார்கள்; அவ்விருவர் களுக்குள் ஜீவன் சரீரமாகிய மரத்தில் பழுக்கும் பழமா கிய கர்ம பலனை அனுபவிக்கிறான். மற்றொருவனாகிய ஈசுவரன் அதனை அனுபவிக்கிறதில்லை. ஆனாலும் மிக்க ஆனந்தம், ஞான பலம் ஆகிய இவைகளுள்ளவனாக இருக்கிறான். (மேல் நோக்கிய வேர்களுள்ளதும், கீழ் நோக்கிய கிளைகளுள்ளதுமான "அசுவத்த மரம்" என்று சுருதியிலும், பகவத் கீதையிலும் சம்சாரத்தை விருட்ச மாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும், மேற்காட்டிய சுலோகத்தின் அர்த்தம் "த்வாசுபர்ணா" என்ற சுருதி யின் பொருளேயாம்.)

7. எவன் சரீரமாகிய மரத்தின் பழமான சுக துக் கங்களை அனுபவிக்கிறதில்லையோ, அந்த ஈசுவரன் நம் மையும் ஜீவனையும் நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறார். ஆனதால் அவர் வித்துவானெனப்படுகிறார். கர்மத் தின் பயனை அனுபவிப்பவனாகிய ஜீவன் தன்னுடைய சுரூபத்தையும், ஈசுவரனுடைய சுரூபத்தையும் அறியான்.

எவன் அவித்தையுடன் சேர்ந்திருக்கிருனே, அந்த ஜீவனே வெகுநாளாகப் பந்தனுகிருன் (சம்ஸாரியென்று கருத்து). எவன் அவித்தையின் சம்பந்தமற்று வித்தையை அடைகிருனே, அவனே நித்தியமுக்தனுகிருன்.

8. (தூங்கி விழித்தபின் சொப்பனத்தில் கண்டவைகளே மனத்தால் நினைக்கிருன். அப்பொழுதும் அவைகள் தோன்றுகின்றன. ஆனுலும் இது சொப்பனம், உண்மையல்லவென்று தெரிந்துவிட்டதனுல் அந்த சுக துக்கங்களே எப்படித் தூங்கி விழித்தவன் அனுபவிக்கிறதில்லேயோ, அப்படி ஆத்மாவிற்கு சரீரம் முதலியவைகளுக்கும் சம்பந்தமில்லே.) 'ஆத்மா எல்லாவற்றைக் காட்டிலும் விலட்சணன்'' என்ற ஞானமுள்ள வித்வான் முந்திய சம்ஸ்காரத்தால் தேகத்திலிருந்தாலும் அவன் தேகத்தில் இருப்பவனுகமாட்டான்.) (அஞ்ஞனுக இருக்கும்பொழுது சரீரம் முதலியவைகளில் அபிமானத்தை வைத்து அதன் சுக துக்கங்களேத் தன்னுடையதென்று அநுபவிக்கிருன். ஞானமுண்டான பின் அவித்தையில்லாததால் சரீர சம்பந்தமாகத் தோன்றினுலும் அதில் அவனுக்கு அபிநிவேசமில்லே அதனுல் சுகத்தையாவது துக்கத்தையாவது அடைகிறதில்லே. முக்தனுக்குச் சரீரமிருந்தாலும் அது பந்தகமாகிறதில்லே என்று கருத்து.) சொப்பனம் பொய்யானதால் அதிலுண்டாகும் சுக துக்கங்களால் ஆத்மாவிற்கு உண்மையில் யாதொரு பயனுமில்லே. ஆனுலும் அதனே உண்மையென்று நினைத்து அதிலுண்டான சுக துக்கங்களே அனுபவிப்பதுபோல் மூடன் தான் சரீரத்திலிருப்பதாகவும், அதன் சுக துக்கங்கள் தன்னேச் சார்ந்தவையென்றும் நினைக்கிருன். (பத்த ஜீவனுக்கும் முக்த ஜீவனுக்குமுள்ள பேதம் இது முதல் பத்து சுலோகங்களால் காட்டப்படுகிறது.)

*9—10.* எவன் ஞானமுள்ளவனோ, அவன் இந்திரியங்களின் விஷயங்களாகிய ரூபம் முதலியவைகளைக் கிரகித்தாலும், குணங்களால் குணங்கள் கிரகிக்கப்படும் பொழுதும் நான் பார்க்கிறேன் என்று அகங்காரத்தை அடையாமல் ஆசை, துவேஷம் இவைகளற்றிருப்பான். (ஓ அர்ச்சுனா ! குணங்கள், கர்மங்கள் இவைகளின் பிரிவினுடைய உண்மையை அறிந்தவன், இந்திரியங்கள் விஷயங்களைக் கிரகிக்கின்றன என்று நினைத்து அவைகளில் ஆசைப்படமாட்டான். — பகவத் கீதா.) மூடன் கர்மானைமான இந்தச் சரீரத்தில் வசிந்து இந்திரியங்களால் செய்யப்படும் கர்மங்களைத் தான் செய்வதாக நினைத்து ஸம்சாரத்தை அடைகிறான். ("பிரகிருதியின் குணங்களால் எல்லாக் கர்மங்களும் செய்யப்படுகின்றன. ஆனாலும் ஜீவன் அகங்காரத்தால் புத்திமயக்கமடைந்து அந்தக் கர்மங்களைத் தான் செய்ததாக நினைக்கிறான்"— **பகவத் கீதா 8, 9, 10** சுலோகங்களால் முக்தன் சரீரமுள்ளவனானாலும் அபிமானமற்று, சுக துக்கத்தில் சம்பந்தப் படாமல் இருப்பானென்று சொல்லப்பட்டது)

*11—12.* மேற்காட்டியபடி படுப்பது, உட்காருவது, சஞ்சரிப்பது, ஸ்நானஞ் செய்வது, பார்ப்பது, தொடுவது, மோப்பது, புசிப்பது, கேட்பது முதலியவைகளில் மூடன் எப்படி அபிநிவேசத்தை அடைகிறானோ, அப்படி வித்துவான் ஆசைப்படாமல் இந்திரியங்கள் விஷயத்தைப் புசிக்கும்பொழுது அதற்குச் சாட்சியாக இருப்பான் (தான் கிரகிப்பதில்லை). ஆகாயம் எங்கும் வியாபித்திருந்தாலும் எப்படி ஒன்றிலும் சம்பந்திக்கிறதில்லையோ, சூரியன் ஜலம் முதலியவைகளில் பிரதிபலித்தாலும் எப்படி அதன் குணங்களை அடைகிறதில்லையோ, வாயு எங்கும் சஞ்சரித்தாலும் எப்படி ஒன்றிலும் சம்பந்தத்தை யடைகிறதில்லையோ அப்படி ஞானி, பிரகிருதியின் காரிய

மான தேகத்திலிருந்தாலும் ஒன்றிலும் பற்றுதலை அடையமாட்டான். அந்த வைராக்கியமாகிய கூர்மையான கத்தியால் எல்லா சம்சயங்களையும் ஒழித்துப் பேத புத்தியை விட்டுவிடுவான். தூங்கி விழித்தவன் சொப்பனத்தில் கண்டவைகளை உண்மை அல்லவென்று தெரிந்துகொள்ளவில்லையா?

13. எவனுடைய பிராணன், இந்திரியங்கள், மனம், புத்தி இவைகளுடைய விருத்திகள் சங்கற்பமற்றிருக்கின்றனவோ, அவன் தேகத்திலிருப்பவனானாலும் அதன் குணங்களால் விடப்பட்டவனேயாம். (இதுவரையில் பத்தனுக்கும் முக்தனுக்கும் சொல்லப்பட்ட லட்சணங்கள் அவரவர்களால் அறியக்கூடியவை. பிறரால் அறியக்கூடிய லட்சணங்கள் பிந்திய சுலோகங்களால் காட்டப்படுகின்றன.)

14—24. துஷ்டர்களாலாவது, புலி முதலிய மிருகங்களாலாவது சரீரத்திற்கு உபத்திரவம் நேர்ந்தால் எவன் துக்கப்படாமலிருக்கிறானோ, தெய்வச் செயலாகப் பிறரால் பூஜிக்கப்படும்பொழுது எவன் சந்தோஷப்படவில்லையோ அவன் ஞானியாவான் ("எவன் குத்தி உபத்திரவிக்கிறானோ, எவன் சந்தனம் பூசுகிறானோ அவ்விருவர்களிடத்திலும் முறையே எவன் கோபியாமலும், சந்தோஷியாமலும் இருக்கிறானோ, அவனே சமபுத்தியுள்ளவன்" — யாஜ்ஞவல்கிய:). (எவன் தன்னை ஸ்தோத்திரஞ் செய்பவர்களையாவது, தனக்கு உபகாரம் செய்பவர்களையாவது துதிக்கிறதில்லையோ, தனக்கு அபகாரஞ் செய்பவர்களை நிந்திக்கிறதில்லையோ, எவன் பிறருடைய குணதோஷங்களைச் சொல்லுகிறதில்லையோ, எவன் எல்லாவற்றையும் சமமாகப் பார்க்கிறானோ அவன் ஞானியாவான்.) ஞானி நல்லது கெட்டது முதலிய ஒன்றையும் செய்யமாட்டான். ஒன்றையும் சொல்லவும்மாட்டான்.

ஒன்றையும் நினைக்கவும்மாட்டான். இப்படி லௌகிக வியவகாரத்தை மறந்து ஆத்மாவினிடத்தில் ரமித்து மூடன் போலச் சஞ்சரிப்பான். மேலும், எவன் சாஸ்திரங்களை முழுவதையும் படித்து அவைகளின் அர்த்தங்களை நன்ருகத் தெரிந்துகொண்டும் பரமாத்மாவைத் தியானஞ் செய்யவில்லையோ, அவனுடைய படிப்புப் பயனற்றது. அவன் மலடான பசுவைக் காப்பாற்றியவனுக்குச் சமானன். மேலும், கறவையில்லாத பசுவையும், காமத்துக்கு உபயோகப்படாத மனைவியையும், பிறருக்கு அதீதமான தேகத்தையும், அசத்தான புத்திரனையும், (எவனால் இவ்வுலகத்திய சுகமும் பரலோக சுகமும் கிடைக்கவில்லையோ அந்தப் புத்திரன் அசத்து எனப்படுகிருன்) அதிதிகளுக்கு உபயோகப்படுத்தாத பணத்தையும், என்னுடைய குணங்களை உச்சரிக்காத வாக்கையும் மிக்க சிரமப்பட்டு ஜனங்கள் ரட்சிக்கிருர்கள். (அதனுல் துக்கத்தை அடைவார்களென்று கருத்து.) இந்த உலகத்தைப் பரிபாலிப்பது, படைப்பது, சங்கரிப்பது ஆகிய எனது சரிதம் உலகத்தைப் பரிசுத்தப்படுத்தக்கூடியது. அந்தச் சரிதத்தை எவனுடைய வாக்கு உச்சரிக்கவில்லையோ, ஸ்ரீ ராமனுகவும், கிருஷ்ணனுகவும் அவதரித்த என்னுடைய அவதாரக் கதைகளை எவன் கானம் செய்யவில்லையோ, அவனுடைய வாக்குப் பயனற்றதேயாம். புத்திசாலியாயிருப்பவன் அப்படிப்பட்ட வாக்கை வைத்துக்கொள்ளக் கூடாது. இப்படி உண்மையை விசாரித்து, தேகம் முதலியவைகளை ஆத்மாவென்று நினைத்திருந்ததை (மயக்க ஞானத்தை) விட்டு, அதனுல் சுத்தமான மனத்தை எங்கும் வியாபித்திருக்கும் என்னிடத்தில் சமர்ப்பித்துச் சாந்தி யடையவேண்டும். பரப்பிரம்மத்தினிடத்தில் மனத்தைச் செலுத்தி ஸ்திரமாக வைத்துக்கொள்ள முடியாவிடில் பயனை விரும்பாமல் கர்மங்களை அனுஷ்

டித்து அவைகளை என்னிடம் சமர்ப்பணம் செய்யவேண்டும். ஓ உத்தவ! என்னுடைய சந்தோஷத்திற்காகத் தர்மம், காமம், அர்த்தம் இவைகளை அடைந்து என்னையே ஆசிரயித்து, மிக்க சிரத்தையுடன் என்னுடைய கதைகளைக் கேட்டுக்கொண்டிருக்கவேண்டும். அவைகள் மிக்க மங்களத்தைக் கொடுப்பவைகள்; உலகத்தைப் பரிசுத்தப்படுத்துபவைகள்; மேலும், என்னுடைய அவதாரக் கதைகளைக் கானம் செய்யவேண்டும். இப்படி அனுஷ்டித்து வந்தால் ஸநாதனனாகிய என்னிடத்தில் ஸ்திரமான பக்தி உண்டாகும். இப்படி சாதுக்களுடைய சேர்க்கையால் பக்தியை அடைந்து என்னைத் தியானிப்பான். அப்படி தியானம் செய்பவன் சாதுக்களால் காண்பிக்கப்பெற்ற என்னுடைய பதத்தை விரைவில் அடைவான்'' என்றார்.

25—27. அதனைக் கேட்ட உத்தவர் பகவானை நோக்கி, 'ஓ உத்தம சுலோக! சாதுக்களுடைய சங்கத்தால் பக்தியுண்டாகுமென்று சொன்னீரே, எப்படிப்பட்டவன் சாதுவென்று உம்முடைய அபிப்பிராயம்? அந்த சாதுக்கள் எதனைப் பக்தியென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்? எப்படிப்பட்ட பக்தி உம்மிடத்தில் உபயோகப்படும்? நீர் பிரகிருதி, புருஷன் ஆகிய இவர்களுக்கும் அதிபதியாக இருப்பவர்; ஆகாயம்போல் ஒன்றிலும் சேராதவர், பரப்பிரம்மம்; உமது இச்சையால் பலவகையான சரீரங்களை அங்கீகரித்துப் பூமியில் அவதரிக்கிறீர். ரகசியமான இந்த விஷயத்தை நீர் தான் சொல்லவேண்டும். உம்மை நான் சரணமடைகிறேன்'' என்று கேட்டுக்கொண்டார்.

28—32. அதனைக் கேட்ட பகவான் உத்தவரை நோக்கி, ''பிறர் துக்கத்தைப் பார்த்துச் சகியாமலிருப்பது, ஒருவருக்கும் துரோகம் செய்யாமலிருப்பது, பொறுமை

உள்ளவனாக இருப்பது, சத்துவ குணத்தையே ஆசிரயித்திருப்பது, அசூயை முதலியவை இல்லாமலிருப்பது, சுக துக்கங்களில் சமபுத்தியுள்ளவனாக இருப்பது, எல்லோருக்கும் உபகாரம் செய்வது, காமங்களால் மனம் கலங்காமல் இருப்பது, இந்திரியங்களை ஜயிப்பது, கல் நெஞ்சமுள்ளவனாக இல்லாமலிருப்பது, நல்லொழுக்கமுள்ளவனாக இருப்பது, ஒன்றிலும் பற்றுதலில்லாமல் இருப்பது, திருஷ்டமான பயன், அதிருஷ்டமான பயன் இவைகளில் ஆசையில்லாமலிருப்பது, சொற்பமான ஆகாரம் உள்ளவனாக இருப்பது, மனத்தை அடக்குவது, தனக்குரிய தர்மத்தை அனுஷ்டிப்பதில் ஸ்திர புத்தி, என்னையே ஆசிரயித்திருப்பது, முனியாகவிருப்பது, சாவதானனாக இருப்பது, விகாரமற்றிருப்பது, ஆபத்துக் காலத்திலும் தைரியத்தை விடாமலிருப்பது, பசி, தாகம், சோகம், மோகம், கிழத்தனம், மரணம் ஆகிய தோஷங்களை ஜயிப்பது மானத்தை அபேட்சியாமலிருப்பது, பிறருக்கு மானத்தைக் கொடுப்பது, பிறருக்கு ஞானத்தை உபதேசிக்க வல்லமையுள்ளவனாக இருப்பது, கபடமில்லாமல் இருப்பது, கருணையுள்ளவனாக இருப்பது ஆகிய குணங்களுள்ளவன் சாது வெனப்படுகிறான். மேலும், வேதமுகமாக என்னால் சொல்லப்பட்ட நல்ல கர்மங்களை அனுஷ்டிப்பதால் சித்த சுத்தி முதலியவையுண்டாகிறதென்றும், அதனைச் செய்யாவிடில் பாபமுண்டாகும் என்பதையும் தெரிந்துகொண்டும் ஈசுவரனிடத்தில் பக்தி செய்வதாலேயே சித்த சுத்தி முதலியவை உண்டாகின்றன என்றும் நினைத்து சகல தர்மங்களையும் விட்டு என்னிடத்தில் எவன் பக்தி செய்கிறானோ அவனும் சாதுக்களில் சிறந்தவனாகிறான். எவர்கள் என்னைக் காலதேசங்களால் அளவிடக்கூடாதவரென்றும், சகல சுரூபியென்றும், சத், சித், ஆனந்தம் இந்த சுரூபியென்றும் தெரிந்துகொண்டு

வேறொரு தேவதைகளையும் நினைக்காமல் என்னையே சேவிக்கிறார்களோ, அவர்கள் பக்தர்களுக்குள் சிறந்தவர்கள்.''

*33—48* என்னுடைய பிரதிமை, பக்தர்கள் இவர்களைத் தரிசிப்பது, தொடுவது, பூசிப்பது, சிசுருஷை செய்வது, தோத்திரஞ் செய்வது, வணங்குவது, அவைகளுடைய குணங்களையும் சரிதங்களையும் சொல்வது, என்னுடைய கதையைக் கேட்பதில் சிரத்தையுள்ளவனாக இருப்பது, என்னைத் தியானஞ் செய்வது, கிடைத்த வஸ்துவை எனக்கு அர்ப்பணம் செய்வது, தன்னை ஈசுவரனுக்குத் தாசனென்று நினைத்து ஆத்மாவை என்னிடம் சமர்ப்பிப்பது ஜன்மாஷ்டமி முதலிய தினங்களில் என்னுடைய அவதாரம், சரித்திரம் இவைகளைச் சொல்லிச் சந்தோஷிப்பது, தேவாலயத்தில் வாத்தியம், நர்த்தனம், கானம் இவைகளைச் செய்து உற்சவம் கொண்டாடுவது, சாதுர்மாஸ்யம், ஏகாதசி முதலிய தினங்களில் என்னுடைய பிரதிமைகளைப் புஷ்பங்களால் அலங்கரித்து வெளியில் தூக்கிக்கொண்டு செல்வது, வைதிகமாகவாவது, தாந்திரிகமாகவாவது தீட்சை செய்துகொண்டு என்னுடைய விரதத்தைத் தரிப்பது, என்னைப் பூஜிப்பதிலும், என்னுடைய பிரதிபிம்பத்தின் பிரதிஷ்டையிலும் சிரத்தை வைப்பது, புஷ்பத்தோட்டம், உபவனம் [பழங்களை முக்கியமாய் உடையது], விளையாடும் இடம், பட்டினம் முதலியவைகளைப் பிறருடன் சேர்ந்து ஏற்படுத்துவது, தேவாலயத்தில் குப்பையில்லாமல் பெருக்குவது, சாணத்தால் மெழுகுவது, ஜலம் தெளிப்பது, கோலம் போட்டு அலங்கரிப்பது முதலிய சிசுருஷையைக் கபடமில்லாமல் செய்வது, அகங்காரம், டம்பம் இவைகள் இல்லாமலிருப்பது, செய்ததைச் சொல்லாமலிருப்பது ஆகிய இவைகள் பக்தி எனப்படுகின்றன. மேலும், மற்ற தெய்வங்களுக்கு

உபயோகப்படுத்திய தீபம், அன்னம் முதலியவைகளை எனக்கு உபயோகிக்கக்கூடாது. எந்தெந்த வஸ்துக்களில் தனக்குப் பிரியமிருக்கிறதோ, அவைகளை எனக்கு நிவே தனம் செய்யவேண்டும், ஓ உத்தவ! (சூரியன், அக்னி, பிராம்மணன், பசு, விஷ்ணு பக்தன், ஆகாயம், வாயு, ஜலம், பூமி, ஆத்மா, சகல பிராணிகள் ஆகிய இவை களில் என்னைப் பூசிக்கலாம். சூரியனிடத்தில் வேதத் தால் தோத்திரஞ் செய்து என்னைப் பூசிக்கவேண்டும். அக்கினியில் நெய் முதலிய ஹவிஸை ஓமம் செய்து என் னைப் பூசிக்கவேண்டும். அன்னம் முதலியவைகளால் அதிதிகளைத் திருப்திசெய்து பிராம்மணர்களிடத்தில் என்னைப் பூசிக்கவேண்டும். புல் முதலிய ஆகாரங்களைப் பசுக்களுக்குக் கொடுத்து, அவைகளில் என்னைப் பூஜிக்க வேண்டும் விஷ்ணுபக்தனைப் பந்துக்களைப்போல் ஆத ரித்துப் பூசிக்கவேண்டும்.) இருதயாகாசத்தில் முக்கியப் பிராணனுகப் பாவித்து என்னை உபாசிக்கவேண்டும். ஜலத்தில் தர்ப்பணம் முதலியவைகளால் என்னை உபாசிக்கவேண்டும். பூமியில் ரகசிய மந்திரங்க ளுடைய யந்திரங்களை எழுதி என்னைத் தியானிக்க வேண்டும். ஆத்மாவிலோ என்றால், போகங்களால் என்னை உபாசிக்கவேண்டும். மேற்சொல்லிய ஸ்தானங் களில் என்னுடைய சுருபத்தைச் சங்கம், சக்கரம், கதா யுதம், தாமரை மலர் இவைகளை நான்கு கைகளில் தரித் தும் சாந்தமுமாக இருப்பதாகத் தியானம் செய்யவேண் டும். ஜ்யோதிஷ்டோமம் முதலிய இஷ்ட தர்மத்தாலும், குளம், கிணறு முதலியவைகளை வெட்டுவிப்பது முதலிய பூர்த்த தர்மங்களாலும் எவன் என்னை உபாசிக்கிருனே அவனுக்கு என்னிடத்தில் ஸ்திரமான பக்தி உண்டாகும். அந்தப் பக்தி சாதுக்களுடைய சேர்க்கையால் உண்டா

கிறது. ஓ உத்தவ! (சாதுக்கள் என்னை ஆசிரயித்திருப்பதால் சாதுக்களுடைய சேர்க்கையால் உண்டாகும் பக்தியே பெரும்பாலும் சம்சாரத்தை நிவர்த்திக்கும். அதைக் காட்டிலும் வேறு உபாயமில்லை.) இனி என்னால் சொல்லப்படும் விஷயம் மிகவும் ரகசியமானாலும் நீர் எனக்கு வேலைக்காரரும், பிரியமுள்ளவரும், அனுகூலத்தை விரும்பியவருமாக இருப்பதால் அதனைச் சொல்லுகிறேன், கேளும்.

---

# அத்தியாயம் 12

## (ஸாது சங்கத்தின் மகிமை)

1—15. ஓ உத்தவ! (சாதுக்களுடைய சங்கம் (சேர்க்கை) எல்லா ஆசைகளையும் நிவர்த்திக்கக்கூடியது.) அப்படிப்பட்ட சாதுக்களின் சங்கத்தால் நான் எவ்வளவு சந்தோஷமடைவேனோ, அவ்வளவு சந்தோஷத்தை யோக மார்க்கத்தால் அடையமாட்டேன். (வசப்படமாட்டேன்) மேலும், விவேகம், சாமான்ய தர்மம் வேதாத்தியயனம், தவம், சந்நியாசம், அக்கினிஹோத்திரம் முதலிய இஷ்ட தர்மங்கள், கிணறு, குளம் வெட்டுவிப்பது முதலிய பூர்த்த தர்மம், கொடுப்பது, ஏகாதசி முதலிய விரதங்களை அநுஷ்டிப்பது, தேவ பூஜை, ரகசிய மந்திரங்களை ஜபஞ்செய்வது, புண்ணிய தீர்த்தங்களில் நீராடச் செய்வது முதலியவை, நியமங்கள், யமங்கள் ஆகிய இவைகளால் எனக்கு அவ்வளவு சந்தோஷமுண்டாகிறதில்லை. பின்னும், திதியின் புத்திரர்களான அசுரர்கள், ராட்சதர்கள், பறவைகள், மிருகங்கள், கந்தர்வர்கள், அப்சரசுக்கள், நாகர்கள், சித்தர்கள், சாரணர்கள் குஹ்யர்கள், வித்தியாதரர்கள், மனுஷ்யர்களில் வைசியர்கள், சூத்திரர்கள், ஸ்திரிகள், சண்டாளன் முத

-லிய தாழ்ந்த ஜாதியார்கள், இன்னும் ரஜஸ், தமஸ் இந்த சுபாவமுள்ளவர்கள் ஆகிய இவர்கள் ஸாதுக்களுடைய சேர்க்கையால் ஒவ்வொரு யுகத்திலும் என்னுடைய பதத்தை அடைந்திருக்கிறார்கள். மேலும், விருத்திரன் பிரகலாதன் முதலியவர்கள், விருஷபர்வா, பலி, பாணன், மயன், விபீஷணன், சுக்ரீவன், ஹனுமான், ஜாம்பவான், யானை, ஜடாயு வியாபாரி (தராசு பிடிப்பவன்), தர்ம வியாதன், குப்ஜா (கூனி), கோகுலத்திலுள்ள கோபிகைகள், தீட்சித பத்தினிகள் ஆகிய இவர்கள் வேதங்களை அத்தியயனஞ் செய்யவில்லை. பெரியோர்களை உபாசிக்கவில்லை. விரதங்களை அனுஷ்டிக்கவில்லை; தவஞ் செய்யவில்லை; ஆனாலும் ஸாது சங்கம் செய்ததால் என்னை அடைந்தார்கள். பின்னும் கோபிகைகளும், பசுக்களும், மரங்களும் (யமளார்ஜுனம்), காளியன் முதலிய விவேகமில்லாத ஜந்துக்களும் ஸாதுக்களுடைய சங்கத்தால் என்னிடம் மனதைச் செலுத்திய காரணத்தால் மாத்திரம் கிருதார்த்தங்களாகி என்னை அடைந்தன. எந்தப் பதம் சாங்கியத்தாலும், யோகத்தாலும், தவத்தினாலும், தானத்தாலும், விரதங்களாலும், யாகங்களாலும், வேதாத்தியயனங்களாலும், ஸந்நியாசத்தாலும் அடைய முடியாததோ, அந்தப் பதத்தை மேற்காட்டிய கோபிகை முதலியவர்கள் அடைந்தார்கள். மேலும் நான் அக்ரூரரால் அழைக்கப்பட்டுப் பலராமனுடன் மதுரா நகரஞ் சென்றிருந்தபொழுதும் அந்தக் கோபிகைகள் என்னிடத்தில் மிக்க பிரியத்துடன் சித்தத்தைச் செலுத்தி என்னைவிட்டுப் பிரிந்ததால் துக்கத்தை யடைந்தார்கள். அப்பொழுது அவர்களுக்கு வேறு ஒரு வஸ்துவாலும் சுகம் உண்டாகவில்லை. மேலும், அவர்கள் பிருந்தாவனத்தில் ஒவ்வொரு இரவையும் மிக்க பிரியனாகிய என்னுடன் சேர்ந்து அரைக்ஷணம் போலக் கழித்த

வர்களானதால் என்னை விட்டுப் பிரிந்த காலத்தில் அவர்களுக்கு இரவுகள் கற்பங்கள்போல இருந்தன.) பின்னும் அவர்கள் சமுத்திரத்தில் சேர்ந்த நதியின் ஜலங்கள் நாம ரூபங்களை விட்டு ஒரே ஜலமாக ஆகிறதுபோலும், மகரிஷிகள் சமாதியில் இருக்கும்பொழுது உலகம் முழுவதும் பிரம்மத்தினிடம் சேர்ந்து நாம ரூபங்களைவிட்டு ஒன்றாக இருக்கிறது என்று தெரிந்துகொண்டு தங்களையாவது, உலகத்தையாவது பிரம்மத்தைக் காட்டிலும் வேறாக எப்படி நினைக்கிறதில்லையோ, அதுபோல அந்தக் கோபிகைகள் தங்களுடைய ஆத்மாவையும், உலகத்தையும் மறந்து என்னையே தியானஞ் செய்துகொண்டிருந்தார்கள்.) என்னுடைய சுரூபத்தின் உண்மையை அறியாத பெண்களாகிய அனேக கோபிகைகள், தங்களுடைய பர்த்தாவென்றும், ஜாரனென்றும் என்னையே தியானித்துப் பரப்பிரம்மமாகிய என்னை அடைந்தார்கள். ஆனதால் ஓ உத்தவ! நீரும் வேதத்திற் சொல்லிய விதி நிஷேதங்களைக் கவனியாமல் பிரவிருத்தி தர்மம், நிவிருத்தி தர்மம், கேட்கப்பட்டது, கேட்கவேண்டியது இவைகளை விட்டு, எல்லாப் பிராணிகளுக்கு ஆத்மாவாக இருக்கும் என்னை ஒருவனையே சரணமடையும். அதனால் எங்கும் பயமற்றவராக ஆய்விடுவீர்" என்று சொன்னார்.

16. அதனைக் கேட்ட உத்தவர் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி ' "ஓ யோகேசர்களுக்கும் அதிபதியே! (முந்தி சுதர்மத்தை அனுஷ்டிக்கவேண்டுமென்று சொன்னீர். பின்பு எல்லாத் தர்மங்களையும் விட்டு என்னைச் சரணம் அடை என்று சொல்லுகிறீர். அதனால் மனத்திலுள்ள சம்சயம் நிவர்த்தியடையவில்லை. (தர்மங்களை அனுஷ்டிக்க வேண்டுமா? வேண்டாமா? இம்மாதிரியான உம்முடைய வார்த்தையைக் கேட்டு மனம் மோகிக்கிறது. அதன் நிச்சயத்தைச் 'சொல்லும்" என்று கேட்டார்.

(இந்தக் கேள்விக்கு 8 சுலோகங்களால் பதில் சொல்லப் பட்டிருக்கிறது. எப்படியெனில்)

17—24. அதனைக் கேட்ட பகவான் உத்தவனை நோக்கி, "மாயையைச் சுவாதீனப்படுத்திக்கொண்ட பரமாத்மா ஜகத்சுரூபியாகப் பிரகாசிக்கிறார். ஜீவர்களுக்கு அஞ்ஞியாக அவித்தை உண்டாகியிருப்பதால் கர்த்தா, போக்தா என்ற சம்சாரம் ஏற்படுகிறது. அதனால் விதி நிஷேதங்களுக்கு ஜீவன் கட்டுப்படுகிறான். அந்த நிலைமையுள்ளவனுக்குச் சித்த சுத்தி உண்டாகவேண்டியதற்காகக் கர்மங்களை அனுஷ்டிக்கவேண்டுமென்று சொல்லப் பட்டது. சித்த சுத்தி உண்டாகுமானால் கர்மங்களிலுள்ள பிரீதியை விட்டு (பகவானை உபாசிப்பதற்குத் தடையாக இருப்பதால்) ஸ்திரமாகப் பக்தி செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது. ஞானமுண்டானால் ஒன்றுஞ் செய்ய வேண்டியதில்லை. (ஆனதால் அவஸ்தா பேதத்தை உத்தேசித்துச் சொல்லப்பட்டதென்று தாத்பரியம்.) இந்தப் பரமாத்மா ஆதாரம் முதலிய ஆறு சக்கரங்களில் பிரகாசிப்பவர். பரமென்ற நாதமுள்ள பிராணனுடன் ஆதார சக்கரத்தில் பிரவேசித்தார். அவர் மனோமயமான சூட்சும ரூபத்தை அடைந்து, பின்பு மத்திமமென்ற சுரூபத்துடன் மணிபூரகம், விசுத்தம் என்ற சக்கரங்களில் பிரவேசித்து, உதாத்தம் முதலிய ஸ்வரங்கள் உள்ளதும், ஹ்ரஸ்வம் முதலிய பேதங்களுள்ளதுமான அட்சர சுரூபியாகி தூல ரூபத்தை அடைகிறார். (ஆதாரம், மணிபந்தம், மணிபூரகம், அனுகதம், விசுத்தி, ஆக்ஞா என்று ஆறு சக்கரங்கள் தூல ரூபமென்றால் வேத சுரூபியாக ஆகிறார் என்று கருத்து. "வாக்குக்கு நான்கு இடங்கள். அவைகளை வித்வான்கள் அறிகிறார்கள். அவைகளில் மூன்று ஆதாரம் முதலியவை. மனிதர்கள் பேசுவதே நான்காவது"— சுருதி. "எது ஆதார சக்க

ரத்திலுண்டாகி, பிராணனுடைய சேர்க்கையால் அறுபத்து மூன்று அட்சரங்களை உண்டுபண்ணுகிறதோ, முதலில் பசியந்தி என்றும், பின்பு மத்தியம் என்றும், பின்பு வாக்கு என்றும் பெயரை அடைந்த அதனைச் சரணமடைகிறேன்.) கட்டையிலிருக்கும் இடுக்குகளில் அக்கினியானது உஷ்ண சுரூபமாக இருக்கிறது. பின்பு அது கடையப்பட்டு வாயுவின் ஒத்தாசையால் நெருப்புப் பொறியாகப் பிரகாசித்து, சமித்து நெய் முதலியவை களால் விருத்தியடைகிறது. அதுபோலவே இந்தச் சப்தமானது மேற்காட்டியபடி சூட்சும சுரூபமாயிருந்து பின்பு விருத்தியாகிறது. இம்மாதிரி பேசுவது என்ற வாக்கின் வியாபாரம் என்னுடையதேயாம். மேலும், கை கால், பாயு, உபஸ்தம் என்ற கர்மேந்திரியங்களுடைய வியாபாரமாகிய கர்மம், நடை, மூத்திரத்தை விடுவது, அமேத்தியத்தை விடுவது முதலியவையும் என்னுடை யவையேயாம். பின்னும், கிராணேந்திரியத்தின் வியாபார மான மோப்பதும், ரசனத்தின் வியாபாரமான ருசியும், கண்ணின் வியாபாரமான பார்ப்பதும், காதின் வியாபார மான கேட்பதும், ஸ்பரிசத்தின் வியாபாரமான தொடு வதும், மனத்தின் சங்கற்பமும், புத்தி, சித்தம் இவைகளு டைய விஞ்ஞானமும், அகங்காரத்தின் காரியமான அபி மானமும், பிரதானத்தின் காரியமான சூத்திரமும், சத்வம் முதலிய குணங்களுடைய விகாரமும் என்னுடையவையே யாம். இந்த ஜீவன் முதலில் அவ்யக்தனுகவும் ஒருவனுக வும் இருந்தான். சில காலம் சென்றபின் மாயாசக்தியால் வாக்கு முதலிய இந்திரிய சக்திகள் வெளிப்பட்டு, பல வகையாக இருப்பதுபோல் தோன்றுகிறுன். அந்த ஜீவனை முக்குணங்களுக்கு இருப்பிடமான பிரம்மதேவன். ஆனலும் வயலில் விதைக்கப்பட்ட விதை பலவகையாக ஆகிறதுபோலப் பலவகையாகத் தோற்றுகிறுன். (இந்த

உலகம் பரமாத்மாவின் காரியமானதால் அவரைவிட வேறில்லை.) (வஸ்திரமானது குறுக்கான நூல்களிலும் நீண்ட நூல்களிலும் சேர்ந்து எப்படி நூல்களில் இருக்கிறதோ, அதுபோல இந்த உலகமானது ஆத்மாவிடத்தில் இருக்கிறது. இந்த சம்சாரமாகிய மரம் அநாதியானது, பிரவர்த்தி சுபாவமுள்ளது. (இந்த விருட்சம் கர்மங்களையும், கர்ம பலன்களையும் உண்டுபண்ணுகிறது. இந்த மரத்திற்குப் புண்ணியம், பாபம் இரண்டும் விதைகள். அனேக வாசனைகளே வேர்கள். மூன்று குணங்களே நாளங்கள். ஐந்து பூதங்களே கிளைகள். சப்தம் முதலிய ஐந்து விஷயங்களே ரஸங்கள். பதினொரு இந்திரியங்களே சிறு கிளைகள். ஜீவாத்மா, பரமாத்மா என்ற இரண்டு பட்சிகள் இதில் கூடு கட்டிக்கொண்டிருக்கின்றன. வாதம், பித்தம், சிலேஷ்மம் ஆகிய இம் மூன்றும் இந்த மரத்திற்குப் பட்டைகளாக இருக்கின்றன. இந்த மரம் சூரியமண்டலம் வரையில் உயர்ந்திருக்கிறது. இந்த மரத்தின் ஒரு பழத்தை (துக்கத்தை)க் கிராமத்தில் சஞ்சரிக்கிற கழுகுகள் புசிக்கின்றன. (கிருகஸ்தர்களான காமிகள் துக்கத்தை அனுபவிக்கிறார்கள்.) வனத்தில் வசிக்கும் ஹம்சங்கள் (பரமஹம்சர்களான யோகிகள்) மற்றொரு பழத்தை (சுகத்தை)ப் புசிக்கின்றனர்.) எவர்கள் உத்தமர்களான ஆசாரியமுகமாக மாயாமயனாகிய பரமாத்மாவைத் தெரிந்துகொள்ளுகிறார்களோ, அவர்களே வேதத்தின் உண்மையான அர்த்தத்தைத் தெரிந்துகொண்டவர்களாகிறார்கள். ஆனதால் இம்மாதிரி ஆசாரியனுடைய உபதேசத்தால் உண்டான பக்தியாலும், ஞானமாகிய கோடரியாலும், லிங்கசரீரத்தை நிவர்த்தித்துக்கொண்டு பரமாத்மாவை அடைந்து அந்த சாதனங்களை விட்டுவிடும்'' என்றார்.

# அத்தியாயம் 13

## ஹம்ஸோபாக்கியானம்

1–3. (ஜீவனிடத்தில் தமஸ் முதலிய மூன்று குணங்களிருக்கின்றனவல்லவா? அவை வித்தையுண்டாவதற்குப் பிரதிபந்தகங்களல்லவா? எப்படி வித்தை யுண்டாகுமென்றால் அதன் விபரம் ஏழு சுலோகங்களால் சொல்லப்பட்டிருக்கிறது.) ஆனந்தம் முதலியவை எப்படி ஆத்மாவின் தர்மங்களோ, அப்படி சத்துவம் முதலிய குணங்கள் ஆத்மாவின் தர்மங்களாகளாயிருக்குமானால் அவைகளை நிவர்த்தித்துக்கொள்ளமுடியாது. (ஸத்வம், ரஜஸ், தமஸ் புத்தியின் குணங்களேயொழிய ஆத்மாவினுடையவையல்ல. ஆனதால் (சத்துவ குணத்தால் ரஜஸ், தமஸ் ஆகிய குணங்களை நிவர்த்தித்துக்கொள்ளவேண்டும்.) அந்த சத்துவ குணத்தை (சத்தியம் முதலியவை) உபசமசுரூபமான சத்துவத்தாலேயே அடக்கவேண்டும். என்னிடத்தில் பக்தி செய்வதாகிய தர்மம் சத்துவ குணத்தாலுண்டாகும்.) சத்துவ குணத்தைக் கொடுக்கும் வஸ்துக்களை உபயோகிப்பதால் விருத்தி யடையும்.) (அதனால்தான் மேற்காட்டிய தர்மமுண்டாகிறது.) மேற்காட்டிய தர்மம் ரஜஸ், தமஸ் ஆகிய குணங்களை நாசம் செய்யும். சத்துவம் விருத்தியானால் அது மிக்க மேலானது. ரஜோகுணம், தமோகுணம் ஆகிய இவ்விரண்டும் நசித்தால் அவைகளாலுண்டாகும் அதர்மம் நாசத்தை அடையும் (ராகம், துவேஷம் ரஜஸ்ஸின் காரியங்கள். தவறுதல், சோம்பல் இவைகள் தமஸ்ஸின் காரியங்கள்.))

4—7. சாஸ்திரம், ஜலம், பிரஜைகள், தேசம், காலம், கர்மம், ஜன்மம், தியானம், மந்திரம், ஸம்ஸ்காரம் ஆகிய பத்து வஸ்துக்களால் குணங்கள் விருத்தியடைகின்றன.

மேற்காட்டியவைகளில் எதைப் பெரியோர்கள் புகழ்கிறார்களோ, அவைகள் சத்துவ குணத்தை விருத்திசெய்கின்றன. எவைகளைக் கெட்டவையென்று பெரியோர்கள் நிந்திக்கிறார்களோ, அவை தமோகுணத்தை விருத்தி செய்கின்றன. எவைகளைப் பெரியோர்கள் நிந்திக்கவில்லையோ, துதிக்கவுமில்லையோ அவைகள் ரஜோகுணத்தை விருத்தி செய்யும். ஆனதால் சத்துவகுணத்தை விருத்தி செய்துகொள்ளுவதற்காக சாத்துவிகமானவைகளையே உபாசிக்கவேண்டும். (உபநிஷத் முதலியவை சாத்துவிக சாஸ்திரம். கர்மகாண்டம் ராஜஸம். பாஷண்டம் தாமஸம்.) கங்கா ஜலம் முதலியவை சாத்துவிக ஜலம். வாசனையுள்ள ஜலம் ராஜஸம். மத்தியம் முதலியவை தாமஸம். (சன்னியாசிகள் முதலியவர்கள் சாத்துவிகர்கள். கர்மங்களில் சிரத்தையுள்ளவர்கள் ராஜஸர்கள். அதர்மத்தைச் செய்பவர்கள் தாமஸர்கள்.) ஜனங்கள் இல்லாதிருக்குமிடம் சாத்துவிக தேசம். வீதி ராஜஸம். சொக்கட்டான் விளையாடுமிடம் தாமஸம். (பிராம்ம முகூர்த்தம் தியானத்திற்கு சாத்துவிக காலம். சாயங்காலம் ராஜஸம். அர்த்த ராத்திரி தாமஸம்.) நித்திய கர்மம் சாத்துவிகம். பயனை யுத்தேசித்துச் செய்யும் காம்ய கர்மம் ராஜஸம். சத்துருவைக் கொல்லுவது முதலியவைகளுக்காகச் செய்யப்படும் அபிசாரம் முதலியவை தாமஸம்.) வைஷ்ணவ தீட்சை, சைவதீட்சை முதலியவை சாத்துவிக ஜன்மம். சக்தி தீட்சை ராஜஸ ஜன்மம். அற்ப தேவதாதீட்சை தாமஸ ஜன்மம். ஸ்ரீ மகாவிஷ்ணுவைத் தியானஞ் செய்வது சாத்துவிகம். ஸ்திரீயை நினைப்பது ராஜஸம். சத்துருவைத் தியானிப்பது தாமஸம். பிரணவம் முதலிய மந்திரங்கள் சாத்துவிக மந்திரங்கள். காம்ய மந்திரங்கள் ராஜஸங்கள். அற்ப மந்திரங்கள் தாமஸங்கள். மனத்தைச் சுத்தப்படுத்தும்

ஸம்ஸ்காரம் சாத்துவிகம். தேகத்திற்கும் கிருகத்திற்கும் செய்துகொள்ளும் சம்ஸ்காரம் ராஜஸ தாமஸம். அதனால் தர்மமும், அதனால் ஞானமும் உண்டாகிறது. எதுவரையில் அபரோட்ச ஞானமும் குணங்களுடைய நாசமும் உண்டாகிறதோ, அப்பொழுது அந்த ஞானமுண்டாகிறது. மூங்கில்கள் ஒன்றோடொன்று உராய்ந்துகொள்வதால் அக்னி யுண்டாகிறது; அது வனம் முழுவதையும் எரித்துத் தானே அணைவதுபோலக் குணங்களுடைய சம்பந்தத்தாலுண்டாகிய தேகம் தன்னிடத்திலுண்டான ஞானத்தால் தனக்கு ஆசிரயமான குணங்களை நாசம் செய்து தானும் நாசமடைகிறது" என்றார்.

8. அதனைக் கேட்டு உத்தவர் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "ஓ கிருஷ்ண! சப்தம் முதலிய விஷயங்கள் பெரும்பாலும் ஆபத்தை விளைவிக்கின்றனவென்று மனிதர்கள் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். ஆனாலும் நாய்கள்போலும், கழுதைகள்போலும், ஆடுகள்போலும் விஷயங்களையே அநுபவிக்கிறார்களே; அதன் காரணமென்ன?" என்று கேட்டார். (நாய்கள் அதட்டப்பட்டாலும் பெண்நாயைப் பின்தொடருகின்றன, கழுதை பின்னங்கால்களால் உதைக்கப்பட்டாலும் பெண் கழுதையை விடுகிறதில்லை. ஆடுகள் கொல்லுவதற்காகக் கொண்டு வரப்பட்டிருக்கும்பொழுதும் காமவெறியையடைகின்றன.)

9—14. அதனைக் கேட்ட ஸ்ரீகிருஷ்ணன் உத்தவரை நோக்கி, "விவேகமில்லாதவன் சரீரத்தை 'நான்' என்று நினைக்கிறான். அந்த அபிநிவேசம் அவனுடைய இருதயத்தில் ஸ்திரமானால் துக்கத்தைக் கொடுக்கும். ரஜோ குணம் அவனுடைய மனத்தில் வியாபரிக்கிறது(உண்மையில் மனம் சத்துவ குணமுள்ளதானாலும்). மனத்தில் ரஜோ குணம் அதிகரித்தால் 'இதை இம்மாதிரி அநுபவிக்கவேண்டும்' என்ற சங்கற்பமுண்டாகும். அதன்பின்

ரூபம் முதலியவைகளின் பெருமையைத் தியானிப்பான். அதனால் காமம் பருத்து மனத்தால் தாங்கமுடியாத தாகும். அப்படிப்பட்ட மனமுள்ளவன் அற்ப புத்தி யுள்ளவனெனப்படுவான். பின்பு அவன் ரஜோகுணத் தின் வேகத்தால் புத்தி மயக்கமடைந்து, இந்திரியங் களுக்கு வசப்பட்டு விஷயங்களை அநுபவிப்பதற்காக முயலுகிறான் (கர்மங்களைச் செய்கிறான்). அதனால் துக்கத் தையே அடைகிறான். (சரீரத்தில் நான் என்று பொய்யாக அபிமானத்தை வைப்பதால் விஷய போகங்களில் ஆசை யுண்டாகிறதென்று கருத்து.) மனிதனுடைய மனமானது ரஜோகுணம், தமோகுணம் ஆகிய இவைகளால் கலங்கிய தாலும் விவேகியாக இருப்பவன் அதனைத் தோஷ மென்று நினைத்து மனத்தை அடக்கி அவைகளில் சம் பந்தப்படமாட்டான். (விஷயங்களைத் தோஷமுள்ளவை களென்று நினைத்து மனத்தை அடக்கச் சக்தியில்லாத வனுக்கு லகுவான உபாயம் சொல்லப்படுகிறது.) சோம்ப லின்றி, தவறுதலை யடையாமல், காலத்திற்குந் தக்கபடி சுகமான ஆசனத்தில் உட்கார்ந்து சுவாசத்தை ஜயித்து, மனத்தை என்னிடத்தில் செலுத்தவேண்டும். பல விஷயங்களில் சென்றுகொண்டிருக்கும் மனத்தை அவை களில் செல்லவொட்டாது தடுத்து, பகவானாகிய என் னிடத்தில் செலுத்துவதே யோகமென்று என்னுடைய சிஷ்யர்களான சனகர் முதலியவர்கள் சொல்லியிருக் கிறார்கள்" என்று சொன்னார்.

**15.** அதனைக் கேட்ட உத்தவர் பகவானை நோக்கி, "உம்முடைய சிஷ்யர்களான சனகர் முதலியவர்களுக்கு அந்தக் காலத்தில் எந்த ஸ்வரூபத்துடன் யோகத்தை உபதேசித்தீர்? அதனைச் சொல்லவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

16—21. அதனைக் கேட்ட ஸ்ரீகிருஷ்ணன் உத்தவரை நோக்கி, "பிரம்மதேவருடைய மனத்திலிருந்து உண்டான சனகர் முதலியவர்கள் தந்தையாகிய பிரம்மதேவரை நோக்கி, "ஓ பிரபுவே! (ஜனங்களுடைய மனம் இயற்கையில் ஆசை முதலியவைகளுள்ளதானதால் விஷயங்களை அனுபவிக்கவேண்டுமென்று விரும்பி அவைகளில் பிரவேசிக்கிறது. அந்த விஷயங்கள் (சப்தம் முதலியவை) மனத்தில் பிரவேசிக்கின்றன (வாசனை ரூபமாக). ஆனதால் விஷயங்களை விட்டு மோட்சத்தை யடைய விரும்புகிறவனால் அவைகள் எப்படி விடமுடியும்" என்று யோகத்தின் சூட்சும சுரூபத்தைப்பற்றிக் கேட்டார்கள். அதனைக் கேட்ட பிரம்மதேவர் தாம் தேவர்களுக்கும் தேவனாலும் தாமாக உண்டானவரானாலும், பிராணிகளைச்சிருஷ்டிப்பவரானாலும் அந்தக் கேள்வியின் உண்மையான அர்த்தத்தை (எதை அறியாததால் இக்கேள்வியோ) தெரிந்துகொள்ளவில்லை. ஏனென்றால் அவருடைய மனம் கர்மத்தில் சென்று கலங்கியிருந்தது. அப்பொழுது பிரம்மதேவர் அந்தக்கேள்விக்கு மறுமொழி சொல்வதற்காக என்னைத் தியானம் செய்தார். நான் ஹம்ச வேடங்கொண்டு அவருடைய சமீபம் சென்றேன். அப்பொழுது சனகர் முதலியவர்கள் என்னுடைய சமீபம் வந்து பிரம்மதேவரை முன்னிட்டு என்னை நமஸ்கரித்து, "நீர் யார்" என்று கேட்டார்கள். இம்மாதிரி உண்மையைத் தெரிந்துகொள்ள விரும்பிய மகரிஷிகளால் கேட்கப்பட்டு நான் எதனை அவர்களுக்குச் சொன்னேனோ அதை உமக்குச் சொல்லுகிறேன்" கேளும். எப்படியெனில் :—

22—42. ஓ மகரிஷிகளே! நீர் யார் என்று கேட்டீர்களல்லவா? என்னுடைய ஆத்மாவைப்பற்றி யார் என்று கேட்டீர்களாகில் ஆத்மா அநேகமாக இருக்குமானால்

இம்மாதிரியாக நீங்கள் கேட்கக்கூடும். (ஆத்மா ஒருவனானால் யார் என்று கேட்பது பொருந்தாது என்று கருத்து.) உபாதியற்ற பரமாத்மாவிடத்தில் ஜாதி முதலியவைகள் ஒன்றுமில்லாததால் எதைக் கொண்டு உமக்கு நான் பதில் சொல்லுவேன். அல்லது சரீரத்தைப்பற்றிக் கேட்பீர்களாகில் இந்தச் சரீரங்கள் யாவும் பிருதிவி முதலிய ஐந்து பூதங்களால் செய்யப்பட்டவைகளானதால் அவைகள் ஒன்றுக்கொன்று சமமானவைகளேயாம். மேலும் அவைகள் பரமாத்மாவைவிடப் பேதமில்லாதவைகள்; ஆனதால் உங்களுடைய கேள்வியானது விவகாரத்திற்கு ஏற்பட்டதேயொழிய உண்மையில் பிரயோசனமற்றது. மேலும் மனத்தாலும், வாக்கினுலும், கண்ணுலும், மற்ற இந்திரியங்களாலும் எது கிரகிக்கப்படுகிறதோ அதெல்லாம் "நானே. என்னைக் காட்டிலும் வேறல்ல" என்று தத்துவ விசாரத்தால் தெரிந்துகொள்ளுங்கள். (சகல சுரூபியாக இருக்கிறேன் என்று கருத்து) ஓ குழந்தைகளே! ஜனங்களுடைய மனமானது சப்தம் முதலிய விஷயங்களில் பிரவர்த்திக்கிறது. அந்த விஷயங்கள் மனத்தில் வாசனுரூபமாக இருக்கின்றன. ஆனாலும் அந்த மனது, விஷயங்கள் ஆகிய இரண்டும் ஜீவனுக்கு உபாதியேயொழிய சுரூபமல்ல. (நான் கர்மங்களைச் செய்கிறேன். அதன் பயன்களை அனுபவிக்கிறேன் என்று நினைப்பது அவனுடைய சுரூபமல்ல. அவனுடைய இயற்கையான சுரூபம் பரமாத்மாவாக இருப்பதேயாம். ஆனாலும் விஷயங்களில் சம்பந்தித்த சித்தத்தைத் தானென்று நினையாமல் தன்னைப் பிரம்மமென்றும், சப்தம் முதலிய விஷயங்களைப் பொய்யானவையென்றும் தியானிப்பவன் தன்னுடைய உண்மையான சுரூபமாக ஆகிவிடுகிறான் என்று கருத்து.) ஆனதால் உண்மையில் ஜீவன் பரமாத்ம சுரூபியாக இருப்பதால்

சப்தம் முதலிய விஷயங்களில் செல்லுகின்ற மனத்தை யும் அடிக்கடி அனுபவிப்பதால் மனத்திலிருக்கும் விஷய வாசனைகளையும் விட்டுவிடவேண்டும். பின்னும் ஜாக்ரத், சுவப்னம், சுஷுப்தி என்ற அவஸ்தைகள் முறையே சத்வம் முதலிய குணங்களால் ஏற்படும் புத்தியின் விருத்திகளாம். அவைகள் ஜீவனுடைய சுபாவங்கள் அல்ல. மேற்கண்ட மூன்று அவஸ்தைகளிலும் தொடர்ந்து இருக்கும் ஜீவன் அவைகளுக்குச் சாட்சியே யாம். அவைகளைக் காட்டிலும் வேறானவன் (ஜாக்ரத் முதலிய அவஸ்தைகள் ஜீவனுக்கு இயற்கையானவை யல்ல என்று கருத்து.) (ஆனதால் சம்சாரத்தை யுண்டு பண்ணுகிற புத்தியால் ஆத்மாவிற்கு சப்தம் முதலிய விஷயங்களில் சம்பந்தம் ஏற்படுகிறது. ஆனதால் மேற் கண்ட மூன்று அவஸ்தைகளைக் கடந்த என்னுடைய சுரூபமாகத் தன்னை நினைத்துக்கொண்டு அந்தப் புத்தி யின் சம்பந்தத்தை விட்டுவிடவேண்டும்.) அப்படிப்பட்ட வனை விஷயங்களும் விஷயவாசனைகளுள்ள மனமும் விட்டு விடும். ஜீவன் உண்மையில் ஆனந்தசுரூபி; அவனுக்கு அகங்கார சம்பந்தமேற்பட்டதால் அந்த அகங்காரம், ஆனந்தம் முதலிய சுரூபத்தை மறைத்துவிட்டது. இதன் உண்மையை யுக்தியால் தெரிந்துகொண்டவன் 'துக்கத்தைக் கொடுக்கக்கூடியது' என்று நினைத்து விஷயங்களில் ஆசைப்படாமல் தான் பரமாத்ம சுரூபி யென்றும், ஜாக்ரத் முதலிய அவஸ்தைகளைக் கடந்தவ னென்றும் நினைப்பான். அபிமானத்தை ஒழிக்கவேண் டும். (விஷயங்களில் அபிமானமும், பேதமும் எதுவரை யில் நிவர்த்தி அடையவில்லையோ, அதுவரையில் இந்தப் புருஷன் உண்மையைத் தெரிந்துகொள்ளாதவனானதால் விழித்துக்கொண்டிருந்தாலும் தூங்கினவனுக்குச் சமமே யாகும்.) சொப்பனத்தில் காணப்படும் விழிப்பு எப்படியோ

அதுபோன்றது இவனுடைய விழிப்பு. (சொப்பனத்தில் காணப்படும் வஸ்துக்கள் யாவும் எப்படிப் பொய்யானவையோ, அப்படி தேகம் முதலிய வஸ்துக்களும், வர்ணம் ஆசிரமம் முதலிய பேதங்களும், சுவர்க்கம் முதலிய லோகங்களும், அவைகளைக் கொடுக்கும் கர்மங்களும் ஆத்மாவைக் காட்டிலும் வேறல்ல. ஆனதால் அவைகள் பொய்யானவைகளே.) (யாகம் முதலிய கர்மங்களும் அவைகளின் பலனாகிய சுவர்க்கம் முதலியவைகளும் வேதங்களால் சொல்லப்பட்டிருந்தாலும் வேதம் மூடனுக்காக ஏற்பட்டதானதால் ஞானியின் விஷயத்தில் அவைகள் பொய் என்று கருத்து.) இந்த தூல தேகம் முதலியவைகள் பால்யம், கௌமாரம், யௌவனம் முதலிய சொற்ப காலமுள்ள அவஸ்தைகளுள்ளது. அவைகளை எல்லா இந்திரியங்களைக்கொண்டு எவன் அனுபவிக்கிறனே, அவைகளை சொப்பனத்தில், முந்திய அவஸ்தையில் பார்க்கப்பட்டு வாசனா ரூபமாக மனத்திலிருக்கும் விஷயங்களை அனுபவிக்கிறன். எவன் சுஷுப்தியில் அவைகளை உபசம்ஹரிக்கிறனே, இம்மூன்று அவஸ்தைகளிலும் தொடர்ந்து அவைகளுக்குச் சாட்சியாக இருப்பவன் எவனே அந்த ஆத்மா ஒருவனேயாம். அவனே இந்திரியங்களுக்கு அதிபதி. (ஜாக்ரதவஸ்தையை சகல இந்திரியங்களும் பார்க்கின்றன. சொப்பனத்தை மனம் பார்க்கிறது. சுஷுப்தியில் சம்ஸ்கார விசேஷமான புத்தியிருக்கிறது. அந்த மூன்று அவஸ்தைகளுக்கும் விசுவன், தைஜஸன், பிராக்ஞன் என்ற மூவர்களும் முறையே அதிபதிகள்; ஆனாலும் உபாதி சம்பந்தத்தால் விசுவன் முதலிய நாமதேயங்களே யொழிய உண்மையிலில்லை என்று கருத்து.) ஆனதால் மேற்காட்டிய ஜாக்ரத் முதலிய அவஸ்தைகள் குணங்களால் ஏற்பட்டவைகள். அவைகள் மனத்திற்கே யொழிய ஆத்மாவினுடையது

அல்ல. என்னுடைய மாயையால் பரமாத்மாவாகிய என்னிடத்திற் கற்பிக்கப்பட்டிருக்கின்றன என்று நிச்சயமாக ஆத்மாவைத் தெரிந்துகொண்டு ஆத்மாவின் உண்மையை அறிந்து அனுமானம், சாதுக்களுடைய உபதேசம், கூர்மையான ஞானமாகிய கத்தி ஆகிய இவைகளைக்கொண்டு மனதிலிருக்கும் சம்சயமாகிய ஆதியை (அகங்காரம்) நிவர்த்தித்துக்கொள்ளவேண்டும். மேலும் இந்த உலகம் பொய்யானது. பார்க்கப்படுவதாலும், நசிக்கும் சுபாவமுள்ளதானதாலும்; மனோவிலாசமாயிருப்பதாலும், சொப்பனம் போல் என்றும் மிகவும் சஞ்சலமாக இருப்பதால் சுற்றும் குறைக்கொள்ளி போன்றது என்ற அனுமானத்தாலும் உலகத்தைப் பொய் என்று நிச்சயிக்கவேண்டும். ஆனதால் குணங்களுடைய பரிணாமத்தால் மூன்று வகையாக ஏற்படும் பேதம், சொப்பனம் போலப் பொய்யானதேயாம். அதுவே மாயை. ஞான சுரூபியாகிய பரமாத்மா உபாதி சம்பந்தத்தால் அனேகராகத் தோன்றுகிறார். ஆனதால் பார்க்கப்படும் பிரபஞ்சத்தில் ஆசை வைக்காமல் அதிலிருந்து பார்வையைத் திருப்பி இயற்கையான ஆனந்தானுபவம் உள்ளவனாக இருக்கவேண்டும். அந்த அனுபவம் ஸ்திரமாக இருப்பதற்காக ஒன்றிலும் பற்றுதலில்லாமலும், மனம், வாக்கு, சரீரம் ஆகிய இவைகளுடைய வியாபாரமற்றவனாகவும இருக்கவேண்டும். சரீரமுள்ள வரையில் ஆகாரம் முதலிய அவசியமான காரியங்களில் பிரவிருத்திப்பவனானாலும் உலகத்தை வஸ்துவல்லவென்று தெரிந்துவிட்டவனானதால் அதில் மோகிக்கமாட்டான். ஆனாலும் சரீரமிருக்கும் வரையில் அந்த வாசனை தொடர்ந்திருக்கும். மத்யபானம் செய்து மதங்கொண்டு விவேகமற்றவன் வஸ்திரம் உடுத்திக்கொண்டிருப்பதையாவது வஸ்த்ரமில்லாமலிருப்பதையாவது எப்படித் தெரிந்துகொள்ளமாட்டானோ,

அப்படி சுரூபத்தை அறிந்த ஸித்தன், தெய்வச் செயலாகச் சரீரம் இருந்தாலும், இல்லாவிட்டாலும், ஆசனத்திலிருந்து எழுந்திருந்தாலும், நிலையற்ற அச்சரீரத்தில் அபிமானம் வைக்கமாட்டான். சரீரம் கர்மாதீனமாக ஏற்பட்டது. தன்னை உண்டுபண்ணிய கர்மவேகம் எதுவரையில் இருக்குமோ, அந்தக் காலத்தைப் பிராணனுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறது. அது சொப்பனத்தில் காணப்படும் வஸ்துப்போன்றது. ஆனதால் சமாதி வரையிலுள்ள யோகத்தை யடைந்து ஆத்ம சுரூபத்தை அடைந்தவன் சரீரத்தில் அபிமானத்தை அடையமாட்டான். ஓ பிராம்மணர்களே! சாங்கியம், யோகம் ஆகிய இவைகளுடைய உண்மையை உங்களுக்குச் சொன்னேன். உங்களுக்கு இந்தத் தர்மத்தைச் சொல்லவேண்டுமென்ற விருப்பத்தால் வந்த மகாவிஷ்ணுவென்று என்னைத் தெரிந்துகொள்ளுங்கள். மேலும், ஆத்மானாத்ம விவேகமாகிய சாங்கியத்திற்கும், அஷ்டாங்க யோகத்திற்கும், மனத்தால் நினைக்கப்படும் தர்மத்திற்கும் (ரிதம்), அனுஷ்டிக்கப்படும் தர்மத்திற்கும் (சத்தியம்), பிரபாவத்திற்கும், ஸ்ரீ, கீர்த்தி, தமம் ஆகிய இவைகளுக்கும் நான் முக்கிய ஸ்தானமாக இருக்கிறேன். பின்னும், குணசம்பந்தம் அற்றவனும், ஒன்றையும் அபேட்சியாதவனும், எல்லாவற்றிற்கும் சுகிருத்தும், பிரியனும், ஆத்மாவுமாகிய எனனிடத்தில் சமமாகயிருப்பது, ஒன்றிலும் பற்றுதல் இல்லாமலிருப்பது ஆகிய குணங்கள் இருக்கின்றன. அவைகள் முக்குணங்களின் பரிணாமத்தால் ஏற்பட்டவை அல்ல; நித்தியமானவைகள்" என்று சொன்னேன். அதனைக் கேட்ட சனகர் முதலியவர்கள் சம்சயமற்றவர்களாகி மிக்க பக்தியுடன் என்னைப் பூஜித்துத் துதித்தார்கள். இம்மாதிரி அந்த மகரிஷிகளால் பூசிக்கப்பெற்று நான், பிரம்மதேவர் பார்த்திருக்க என்னுடைய உலகஞ் சென்றேன்.

# அத்தியாயம் 14

## பக்தியும் தியான யோகமும்

1—2 ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய வார்த்தையைக் கேட்டு உத்தவர் அவரை நோக்கி, “ஓ கிருஷ்ண ! வேதத்தைத் தெரிந்துகொண்டவர்கள் க்ஷேமத்தை அடைவதற்குப் பல உபாயங்களுண்டென்று சொல்லுகிறார்கள். அவைகள் எல்லாம் நேரில் மோட்சத்தைக் கொடுக்கின்றனவா; அல்லது அவைகளில் சில முக்கியமா ? ஓ சுவாமின்! பயனை உத்தேசியாமல் பகவானிடத்தில் பக்திசெய்ய வேண்டும்; மற்றவைகளில் ஆசையை ஒழிக்கவேண்டும். அதனால் பகவானிடத்தில் நிரந்தரமாகப் பக்தி உண்டாகும்” என்று சொன்னீரல்லவா ? அதனால் பக்தியே முக்கியமான உபாயமென்று தோன்றுகிறதே. அதனை நிச்சயித்துச் சொல்லவேண்டும்” என்று கேட்டுக்கொண்டார்.

3—11. அதனைக் கேட்ட பகவான் உத்தவரை நோக்கி, “வேதமென்ற பெயருள்ள வாக்கானது கால மகிமையால் பிரளயத்தில் ஒளிந்துபோயிற்று. சிருஷ்டி காலத்தில் அதனைப் பிரம்மதேவருக்கு நான் உபதேசித்தேன். அந்த வேதத்தில் பகவானாகிய என்னுடைய தர்மங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. பிரமதேவர் தம்முடைய புத்திரர்களில் மூத்த குமாரராகிய மனுவிற்கு அந்த வேதத்தை உபதேசித்தார். அந்த மனுவினிடமிருந்து பிருகு முதலிய ஏழு மகரிஷிகள் (பிருகு, மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்தியர், புலஹர், கிருது) பெற்றுக் கொண்டார்கள். அந்த மகரிஷிகளுடைய புத்திரர்களாகிய தேவர்கள், தானவர்கள், குஹ்யர்கள், மனிதர்கள், சித்தர்கள், கந்தர்வர்கள், வித்யாதரர்கள், சாரணர்கள், கிந்தேவர்கள் (சிரமம், வியர்வையில்லாததால் இவர்களை

தேவர்களென்று சந்தேகிக்கக்கூடிய தீவாந்தரத்தில் உள்ள மனிதர்கள்), கின்னரர்கள், யட்சர்கள், கிம்புருஷர்கள் ஆகிய முக்குணங்களாலுண்டானவர்கள். மேற்காட்டிய ஏழு பிரம்ம ரிஷிகளிடமிருந்து மேற்காட்டிய வேதத்தைப் பெற்றுக்கொண்டார்கள். ஆனதால் தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள் முதலிய பிராணிகள் அவரவர்களுடைய பிரகிருதி வாசனைக்குத் தக்கபடி அந்த வேதத்திற்குப் பல வகையாக அர்த்தங்கொள்ளுகிறார்கள். இப்படி அவரவர்களுடைய பிரகிருதியின் பேதத்தால் புத்தியும் பேதிக்கிறது. சிலர் வேதத்தை அத்தியயனம் செய்யாவிடினும் பிறர் சொல்வதைக் கேட்டு அதனையே உண்மையாகக் கொள்ளுகிறார்கள். மற்றுஞ் சிலர் வேதத்திற்கு முற்றிலும் விரோதமான பாஷண்ட தர்மத்தில் புத்தியுள்ளவர்களாக இருக்கிறார்கள். ஓ புருஷர்களுக்குட் சிறந்த உத்தவ! (புருஷர்கள் அவரவர்களுடைய கர்மத்திற்கும் அவரவர்களுடைய அபிப்பிராயத்திற்கும் தக்கவாறு என்னுடையமாயையால் புத்திமயக்கமடைந்து க்ஷேமத்தை அடைவதற்குப் பலவித உபாயங்களென்று சொல்லுகிறார்கள். சிலர் (மீமாம்ஸகர்கள்) நித்திய கர்மங்களும் நைமித்திக கர்மங்களுமே மோட்சத்தைக் கொடுக்கக்கூடியவைகள் என்று சொல்லுகிறார்கள். மற்றுஞ் சிலர் (காவ்யம் அலங்காரஞ் செய்தவர்கள்) கீர்த்தியே க்ஷேமத்தைக் கொடுக்கிறது என்கிறார்கள். (எதுவரையில் மனிதனுடைய கீர்த்தி ஜனங்களால் கானஞ்செய்யப்படுகிறதோ, அதுவரையில் புண்ணிய லோகத்தில் பூஜிக்கப்படுகிறான்.) பின்னும் சிலர் (வாத்ஸ்யாயனர் முதலியவர்கள்) காமமே புருஷார்த்தம் என்கிறார்கள். இன்னுஞ் சிலர் [யோகசாஸ்திரக்காரர்கள்] சத்தியம், இந்திரியங்களை அடக்குவதாகிய சமம், தமம் இவைகள் க்ஷேமத்தைக் கொடுக்கின்றன என்கிறார்கள். சிலர் (நீதிசாஸ்திரக்

காரர்கள்) ஐசுவரியத்தையே புருஷார்த்தமென்கிருர்கள். சிலர் (பௌத்தர்கள்) பிறருக்குக் கொடுப்பதும், தாம் அனுபவிப்பதுமே புருஷார்த்தம் என்கிருர்கள். மற்றுஞ் சிலர் (கர்மயோகிகள்) யக்ஞம், தவம், தானம், விரதங்கள், நியமங்கள், யமங்கள் ஆகிய இவைகளே க்ஷேம சாதனங்கள் என்கிருர்கள். இம்மாதிரி அவரவர்களுடைய சுபாவத்திற்குத் தக்கபடி சொல்லுகிருர்கள். மேற் காட்டிய மார்க்கங்களால் கிடைக்கக்கூடிய பயன்கள் அற்பமானவைகள். உற்பத்தி நாசமுள்ளவைகள் (நித்தியங்களல்ல) அந்த உலகங்களில் கிடைக்கும் ஆனந்தம் மிக்க அற்பமானது; போக காலத்தில் அசூயை முதலிய துக்க காரணங்கள் ஏற்படுகின்றன; முடிவில் மோகத்தை உண்டுபண்ணுகின்றன; துக்கத்தைக் கொடுக்கின்றன.

12—30. "ஓ சபைக்குரியவரே! என்னிடத்தில் சித்தத்தைச் செலுத்தி, மற்றவைகளை அபேட்சியாமல் என்னுடைய சுரூபமாகப் பிரகாசிப்பவனுக்கு எந்த சுகமோ அந்த சுகம் விஷயங்களில் ஆசையுள்ளவர்களுக்குக் கிடைக்குமா? [பக்தியே மேலானதென்று கருத்து.] மேலும், ஒன்றையும் விரும்பாதவனும் வெளியிலிருக்கும் இந்திரியங்களை அடக்கினவனும், மனத்தை அடக்கி சமபுத்தி உள்ளவனும், என்னுடைய சுரூபத்தையடைந்ததாலேயே திருப்தியடைந்த மனமுள்ளவனுக இருப்பவனுமான புருஷனுக்கு சகல திக்குகளும் சுககரங்களாக இருக்கும். என்னிடத்தில் மனத்தைச் செலுத்தியவன் [பக்தியுள்ளவன்] என்னைக்காட்டிலும் வேறொன்றையும் விரும்பமாட்டான். அவன் பிரம்ம பதத்தை விரும்பமாட்டான்; இந்திர பதத்தில் ஆசைகொள்ளமாட்டான். சகல பூமிகளுக்கு அரசனுயிருக்க (சக்கரவர்த்தி) இச்சிக்கமாட்டான். பாதாலம் முதலிய உலகங்களுக்கு அதிபதியாக இருக்கவேண்டுமென்று விரும்பான். யோகத்தால்

கிடைக்கும் அணிமா முதலிய சித்திகளில் அவனுக்கு விருப்பமிராது; மோட்சத்தையும் விரும்பமாட்டான் (பக்தனுக்கு என்னிடத்திலேயே பிரியமிருக்குமென்று கருத்து). நானும் பக்தனுகிய உம்மிடத்தில் எவ்வளவு பிரியம் வைத்திருக்கிறேனே அப்படி பிரம்ம தேவரிடத்திலும், பரமசிவனிடத்திலும், சங்கர்ஷணரிடத்திலும், லட்சுமிதேவியினிடத்திலும், என்னுடைய ஆத்மாவினிடத்திலும் பிரியப்படுகிறதில்லை. எவன் விஷயங்களில் அபேட்சை அற்றவனே, சாந்தனே, விரோத புத்தியை ஒழித்தவனே, எல்லாம் வாசுதேவ சுரூபமென்று சமமாகப் பார்ப்பவனே அந்த முனியை நான் எப்பொழுதும் அனுசரிக்கிறேன் (அவன் பின் செல்லுகிறேன்). அவனுடைய பாததூளிகளால் என்னிடமிருக்கும் அநேக அண்டங்களைப் பரிசுத்தப்படுத்துவோமென்று அவனை அனுசரிக்கிறேன். மேலும், (வேறு விஷயங்களை அபேட்சிக்காமலும், என்னிடத்தில் மிக்க பக்தியுள்ளவர்களும், எல்லாப் பிராணிகளிடத்திலும் வாத்ஸல்யமுள்ளவர்களும், சாந்தர்களும் மற்ற காமங்களால் கலங்காத புத்தியுள்ளவர்களுமான மகான்கள் என்னை அடைவார்கள்) அவர்களுக்குத் தான் என்னுடைய நிரபேட்ச சுகம் இப்படிப்பட்டதென்று தெரியும். (மேற்காட்டியபடி உத்தம பக்தன் பிரம்மானந்தத்தை அடைகிருன் என்று சொல்லப்பட்டது.) மேல் சுலோகத்தில் சாதாரண பக்தனுடைய விஷயஞ் சொல்லப்பட்டது. இந்திரியங்களை ஜயிக்காதவனும், பகவானுகிய என்னிடத்தில் பக்தி உள்ளவனுமாகிய மனிதன், விஷயங்களில் ஆசைகொண்டவனுனலும், தொடர்ந்து பக்தி செய்வானுகில் விஷயங்களால் அவமதிக்கப்படமாட்டான். ஓ உத்தவ! சமையல் முதலியவைகளுக்காக நன்ருக ஜ்வலிக்கும்படி செய்யப்பட்ட அக்கினியானது எப்படிக் கட்டைகளைச் சாம்பலாகச் செய்கிறதோ, அது

போல எதற்காகவாவது என்னிடத்தில் பக்தி செய்தால் அந்தப் பக்தி பாபங்களெல்லாவற்றையும் தகிக்கிறது. என்னிடத்தில் நிரந்தரமாகப் பக்தி செய்தால் அதனால் எந்த க்ஷேமமுண்டாகுமோ, அந்த க்ஷேமம் தர்மத்தாலும், சாங்கியத்தாலும், யோகத்தாலும் வேதாத்யயனத்தாலும், தவத்தாலும், தியாகத்தாலும் உண்டாகிறதில்லை. சிரத்தையாலுண்டான பக்தியால் மாத்திரம் என்னை அடைய முடியும். (நான் சாதுக்களுக்கு ஆத்மாவாக இருப்பவன். சண்டாளனானாலும் என்னிடம் பக்தியுள்ளவனானால் ஜாதி தோஷத்திலிருந்து நிவர்த்தியடைகிறான். சத்தியம், தயை இவைகளுடன் தர்மபுத்தியும் சேர்ந்திருந்தாலும் என்னிடத்தில் பக்தியில்லாதவனை அந்தத் தர்மம் நன்றாகப் பரிசுத்தப்படுத்துகிறதில்லை.) பகவானிடத்தில் பக்தியில்லாவிடில் தவம், ஞானம் இவைகள் இருந்தாலும், அதனால் நன்றாகப் பரிசுத்தி உண்டாகிறதில்லை (ஒருவனுக்குப் பக்தி இருக்கிறதென்றாவது இல்லை என்றாவது எப்படித் தெரிந்துகொள்ள முடியுமென்றால் பக்தியுள்ளவனுடைய மனம் உருகும்; ஆனந்தக் கண்ணீர் பெருகும்;) அப்படிப்பட்ட பக்தியில்லாவிட்டால் சித்தம் சுத்தமாகிறதில்லை. என்னிடத்தில் பக்தியுள்ளவன் அடிக்கடி சிரிப்பான்: சில சமயம் அழுவான்; அவன் மனம் உருகும்; வாக்குத் தழுதழுத்திருக்கும்; வெட்கத்தை விட்டு உரக்க என்னுடைய சரிதங்களைக் கானஞ்செய்வான்; நர்த்தனஞ் செய்வான்; அப்படிப்பட்ட பக்தன் உலகத்தைப் பரிசுத்தப்படுத்துவான். சுவர்ணம் அக்கினியில் வைத்து உருக்கப்பட்டால் அழுக்கில்லாமல் தன்னுடைய உண்மையான சுரூபத்தை எப்படி அடைகிறதோ, அப்படி ஜீவன் என்னிடத்தில் பக்தி செய்வதாகிய பக்தியோகத்தால் கர்மவாசனையை ஒழித்து உண்மையான சுரூபத்தை

அடைகிறான். கண்ணுக்கு மையிட்டால் அதிலுள்ள மலங்கள் நீங்கி, சூட்சுமமான வஸ்துக்களை எப்படிப் பார்க்கும் சக்தி உண்டாகிறதோ, அப்படிப் புண்ணியகரமான என்னுடைய கதைகளைக் கேட்பதாலும், உச்சரிப்பதாலும் சித்தம் சுத்தமாகிறது. அதனால் சூட்சுமமாகிய ஆத்ம சுரூபத்தைப் பார்க்கும் சக்தியை அடைகிறான். (பக்தியின் அவாந்தர வியாபாரமே ஞானமெனப்படுகிறதென்று கருத்து.) மேலும், சித்தம் பகவத் சுரூபமாக மாறுவதே ஞானமெனப்படும். (அப்படிப்பட்ட ஞானம் என்னையே தியானம் செய்பவனுக்கு உண்டாகுமென்று காட்டப்படுகிறது.) சப்தம் முதலிய விஷயங்களையே எப்பொழுதும் தியானஞ் செய்பவனுடைய சித்தம் அவைகளிலேயே லயிக்கும். என்னையே தியானஞ் செய்பவனுடைய சித்தம் என்னிடத்திலேயே லயிக்கும் (நானாக ஆகிவிடும்). என்னைத் தியானிப்பதால் மனம் சுத்தமாகுமானதால் சொப்பனம் போலும், மனோரதங்கள் போலும் பொய்யானவையான விஷயங்களை நினைக்காமல் மனத்தைச் என்னிடத்தில் செலுத்தும். மேலும், ஸ்திரீகளுடைய சேர்க்கையாலும், அவர்களிடம் ஆசைகொண்ட காமிகளுடைய சேர்க்கையாலும் எவ்வளவு கெடுதி நேரிடுமோ, அவ்வளவு கெடுதி மற்ற விஷயங்களில் ஆசை கொள்வதால் நேரிடுகிறதில்லை. ஆனதால் ஸ்திரீகளுடையவும், காமிகளுடையவும் சேர்க்கையை ஒழித்து ஜனங்களில்லாததும், பயமற்றதுமான இடத்திலிருந்து தைரியமுள்ளவனாகி, சோம்பலின்றி என்னைத் தியானிக்கவேண்டும்" என்று சொன்னார்.

31. அதனைக் கேட்ட உத்தவர் பகவானை நோக்கி, "தாமரை மலர்போன்ற கண்களுள்ளவரே! மோட்சத்தை அடைய விரும்பியவன் உம்மை எப்படிப்பட்டவராகத் தியானம் செய்யவேண்டும்? அந்தத் தியான சுருபத்தைச் சொல்லவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

32—46. அதனைக் கேட்டு ஸ்ரீ கிருஷ்ணன் உத்தவரை நோக்கி "அதிக உயரமில்லாமலும், அதிகத் தாழ்ந்ததுமில்லாமல் சமமாக இருக்கும் ஆசனத்திலுட்கார்ந்து, கோணலில்லாமல் சமமான சரீரமுள்ளவனுகி, இரண்டு கைகளையும் மடியில் வைத்துக்கொண்டு, தன்னுடைய மூக்கின் நுனியைப் (புருவங்களின் மத்தியப்) பார்த்துக் கொண்டு பூரகம், கும்பகம், ரேசகம் இவைகளால் பிராணனுடைய மார்க்கத்தைச் சுத்தி செய்யவேண்டும்; அல்லது ரேசகம், பூரகம், கும்பகம் ஆகிய இவைகளைச் செய்தாவது சுத்திசெய்துகொள்ளலாம். மூலாதாரம் முதல் மூர்த்தா (தலை) வரையில் தாமரைத் தண்டின் நூல்போல் சூட்சுமமும், தொடர்ந்ததுமான ஓங்காரத்தைப் பிராணனைக்கொண்டு இருதயத்தில் வியாபிக்கச் செய்து, அதில் பருத்த மணிச் சப்தம் போல் மிகுந்த நாதத்தை ஸ்திரமாக இருக்கும்படி செய்யவும். இப்படி ஒவ்வொரு நாளும் காலையிலும், மத்தியானத்திலும், சாயங்காலத்திலும் பிரணவத்துடன் பிராணுயாமத்தைப் பத்துத் தடவை அப்பியசித்தால் ஒரு மாதத்திற்குள்ளாகவே அவன் சுவாசத்தை ஜயிப்பான்.) சரீத்திற்குள் இருதய புண்டரீகம் (தாமரை மலர் போன்ற இருதய பாகம்) தலைகீழாக இருக்கிறது. அதன் தண்டு மேலே இருக்கிறது. மேலும் அது மலராமல் மொட்டாகவுமிருக்கிறது. அது எட்டு இதழ்களுள்ளது; நடுவில் காயுள்ளது; அதனை உயர்முகமாகவும், மலர்ந்திருப்பதாகவும் தியானித்து, அதன் காயில் சூரியனையும், அதன் மீது சந்திரனையும், அதன்மீது அக்கினியையும் தியானிக்கவேண்டும். தியானத்திற்கு உபயோகமான என்னுடைய மங்கள சுரூபத்தை அந்த அக்னியின் நடுவில் தியானிக்கவேண்டும். அந்த சுரூபம் எப்படிப் பட்டதென்ருல், நீண்டும் அழகு பொருந்தியவைகளு

மான நான்கு கைகளுள்ளது; தியானத்திற்குத் தகுதியான அவயவங்களுள்ளது; சாந்தமானது; அழகிய முகமுள்ளது; மிக்க அழகான கழுத்துள்ளது; மனோகரமான கன்னங்களுள்ளது; சுத்தமான சிரிப்புள்ளது; உயர்வு தாழ்வு இல்லாமல் சமமாக இருக்கும்; காதுகளில் அணிந்த மகர குண்டலங்களுள்ளது; பீதாம்பரத்தைத் தரித்தது; மேகம்போன்ற கறுத்த திருமேனியுள்ளது; ஸ்ரீவத்ஸத்தால் அலங்கரிக்கப்பெற்றது; சங்கம், சக்கிரம், கதை, தாமரை மலர், வனமாலை ஆகிய இவைகளால் அலங்கரிக்கப்பட்டது; காலில் அணிந்த பாதசரங்களுள்ளது; கௌஸ்துபமுள்ளது; மிக்க காந்தியுள்ள கிரீடம், வளை, அரைஞாண், தோள்வளை இவைகளுள்ளது; அழகிய எல்லா அவயவங்களுள்ளது; அனுக்ரகப் பார்வையுள்ள முகமுள்ளது. இப்படி ஒவ்வொரு அவயவங்களிலும் மனதைச் செலுத்தி சுகுமாரமாகத் தியானம் செய்ய வேண்டும். பின்னும் சப்தம் முதலிய விஷயங்களில் செல்லவொட்டாமல் மனதைக்கொண்டு இந்திரியங்களைத் தடுத்தும், அந்த மனத்தைப் புத்தியாகிய சாரதியால் என்னிடத்தில் செலுத்தவேண்டும். எல்லா அங்கத்தையும் தியானித்துக்கொண்டிருந்த மனத்தை அந்த அந்த அவயவத்திலிருந்து திருப்பிப் புன்சிரிப்புள்ள முகத்தையே தியானிக்கவும். மற்ற அவயவங்களை அப்பொழுது நினைக்கவேண்டாம். அந்த முகத்தைத் தியானித்து, மனம் அதில் நிலையான பின் எல்லாவற்றிற்கும் காரணத்தைத் தியானித்தும், அதிலும் நிலைபெற்றபின், என்னிடத்தில் மனத்தைச் செலுத்தி (காரணம்சத்தை விட்டு) வேறொன்றைச் சிந்திக்கவேண்டாம். (தியானம் செய்யக்கூடியது, தியானம் செய்பவன் என்ற பேதத்தை விட்டு) அந்தக் காலத்தில் சகல பிராணிகளிடத்தில் பகவானாகிய நானிருப்பதாகவும், என்னிடத்தில் எல்லாப்

பிராணிகளும் இருப்பதாகவும், தேஜஸ் தேஜஸுடன் சேர்ந்திருப்பதுபோல் பார்ப்பான். இப்படி மிக்க தீவிரமாகத் தியானம் செய்வதால் கருவி, ஞானம், கிரியை என்ற மயக்கம் அற்றுப்போகும்.

# அத்தியாயம் 15

## மோட்சத்திற்கு இடையூறுகளான சித்திகள்

1—2. இந்திரியங்களை ஜயித்தவனும், ஸ்திரமான சித்தமுள்ளவனும், பிராணாயாமம் செய்தவனும், என்னிடத்திலேயே சித்தத்தைச்செலுத்தியவனுமான யோகிக்கு அணிமா முதலிய சித்திகள் சித்திக்கின்றன என்று ஸ்ரீ கிருஷ்ணன் சொன்னார். அதனைக் கேட்ட உத்தவர் பகவானை நோக்கி, "எந்தத் தாரணையால் சித்திகள் உண்டாகின்றன? சித்தியென்றால் என்ன? அவைகள் எப்படி உண்டாகின்றன? சித்திகள் எவ்வளவு? யோகிகளுக்கு நீர் சித்திகளைக் கொடுப்பவரானதால் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

3—36. அதனைக் கேட்ட பகவான் உத்தவரை நோக்கி, "யோக சாஸ்திரத்தை அறிந்தவர்களால் தாரணையும் சித்திகளும் பதினெட்டு வகையுள்ளனவென்று சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் எட்டுத் தாரணையே என்னை முக்கியமாகக் கொண்டவை. (எனது சாரூப்யத்தை அடைந்தவர்களிடத்தில் கொஞ்சம் குறைவாக உள்ளவை என்று கருத்து). மற்ற பத்துத் தாரணைகள் சத்வ குணத்தை விருத்திசெய்யக்கூடியவை. அணிமா, மகிமா, லகிமா என்ற மூன்று சித்திகளும் சரீரத்தின் சித்திகள். (எல்லா அணுக்களைக் காட்டிலும் சரீரம் சூட்சுமமாகி அணுக்களிலும் பிரவேசிக்கக் கூடியதாயிருப்பது **அணிமா** எனப்படுகிறது. பருத்தவைகளைக்

காட்டிலும் பருத்திருப்பது மகிமா எனப்படுகிறது. எல்லாவற்றிலும் இலேசாக இருப்பது லகிமா எனப்படுகிறது.) இந்திரியங்களுடன் அந்த அந்தத் தேவதா சுரூபியாக சம்பந்திப்பது பிராப்தி எனப்படுகிறது; நேரில் பார்க்கப்பட்டவைகளும் கேட்கப்பட்டவைகளுமான விஷயங்களை அனுபவிக்கக்கூடிய சாமர்த்தியம் பிராகாம்யம் எனப்படுகிறது; மாயையின் அம்சமாகியவைகளைத் தாண்டுதல் ஈசித்வ எனப்படுகிறது. (தனக்கும் பிறருக்கும் எல்லா விஷயங்களிலும் சாமர்த்தியத்தை உண்டுபண்ணுவது ஈசித்வ என்பர் சிலர்.) விஷயபோகங்களில் ஆசைப்படாமலிருப்பதே வசித்வமெனப்படுகிறது. சமுத்திரத்தில் ஜலத்துளி லயிப்பதுபோல் எந்த சுகத்தில் ஆசைப்பட்டு இலயத்தை அடைகிறுனே அந்த சுகம் எட்டாவது சித்தி யெனப்படுகிறது. இந்த எட்டு சித்திகளும் எனக்கு இயற்கையானவை. மேலும், பசி, தாகம் இவைகள் இல்லாமலிருப்பது, வெகு தூரத்தில் உண்டான சப்தத்தைக் கேட்டுத் தெரிந்துகொள்வது, வெகு தூரத்தில் நடப்பவைகளை நேரில் பார்த்ததுபோல் தெரிந்துகொள்வது, மனம்போல் வேகமாகச் செல்வது, இஷ்டமான ரூபத்தை எடுத்துக்கொள்வது, பிறருடைய சரீரத்தில் பிரவேசிப்பது, தனது இஷ்டப்படி மரணமடைவது, அப்சரசுக்களுடன் தேவாகள்விளையாடுவதைப் பார்ப்பது (அடைவதென்பர் சிலர்), சங்கற்பித்த வஸ்துக்களை அடைவது, தன்னுடைய உத்தரவும், நடையும் ஒரு இடத்திலும் தடைபடாமலிருப்பது என்று பத்து சித்திகள். மூன்று காலத்திய விஷயங்களைத் தெரிந்துகொள்வது, குளிர் உஷ்ணம் இவைகளால் உபத்திரவிக்கப்படாமலிருப்பது, பிறருடைய அபிப்பிராயம் முதலியவைகளைத் தெரிந்துகொள்வது, அக்கினி, சூரியன், ஜலம், விஷம் முதலியவைகளை ஸ்தம்பனம் செய்வது, ஒருவரா

லும் ஜயிக்கப்படாமலிருப்பது ஆகிய ஐந்தும் அற்பசித்திகள். இவைகள் யோக தாரணையால் உண்டாகும் சித்திகள். எந்தத் தாரணையால் எந்த சித்திகள் உண்டாகுமோ அதனைச் சொல்லுகிறேன் தெரிந்துகொள்ளும். பூத சூட்சுமங்களை உபாதியாகக்கொண்ட என்னிடத்தில் பூத சூட்சும சுரூபமாக மனதைத் தியானித்து, தாரணை செய்பவன் அணிமா என்ற சித்தியை அடைவான். மகத் தத்துவத்தை உபாதியாகக்கொண்ட என்னிடத்தில் மகத் தத்வ சுரூபமாக மனத்தைச்செலுத்தி உபாசிப்பவன் மகிமா என்ற சித்தியை அடைவான். பரமாணு சுரூபியாகிய என்னிடத்தில் சித்தத்தைச் செலுத்தி உபாசிப்பவன் காலபரமாணுவாகிய லகிமா என்ற சித்தியை அடைவான். வைகாரிக அகங்காரத்தை உபாதியாகக்கொண்ட என்னிடத்தில் மனத்தைச் செலுத்தும் யோகி எல்லா இந்திரியங்களுடைய சுரூபமாகிய பிராப்தி என்ற சித்தியை அடைவான். கிரியாசக்தியைப் பிரதானமாகக்கொண்ட மகத் தத்வமே சூத்ராத்மா எனப்படுகிறது. அந்த சூத்ர சுரூபியாகிய என்னிடத்தில் சித்தத்தைச் செலுத்தியவன் எல்லாவற்றிலும் மேலானதான என்னுடைய பிராகாம்யமென்பதை அடைவான். முக்குண சுரூபமாகிய மாயைக்கு அதிபதியும், அந்தர்யாமி, ஜீவன், சரீரம் இவைகளுக்கு அதிபதியுமாகிய என்னிடத்தில் மனதைச் செலுத்தியவன் ஈசிதா என்ற சித்தியை அடைவான். பகவான் என்ற சப்தத்திற்குப் பொருளாயும், விராட், ஹிரண்ய கர்ப்பர், காரணம் என்ற மூன்று உபாதிகளைத் தாண்டின நாராயணனுமான என்னிடத்தில் மனத்தைச் செலுத்தியவன் வசித்வமென்பதை அடைவான். நிர்க்குணப் பிரம்மமாகியஎன்னிடத்தில் மனத்தைச் செலுத்திய யோகி பரமானந்தத்தை அடைவான். எல்லாக் கர்மங்களும்

அதில் லயிக்கின்றனர். சுவேதத் துவீபத்திற்கு அதிபதியும் தர்ம சுரூபியும் சுத்தனுமான என்னிடத்தில் சித்தத்தைச் செலுத்தியவன் பசி, தாகம், சோகம், மோகம், கிழத்தன்மை, மரணம் இவைகளற்று, சுத்தனுவான். ஆகாச சுரூபியாக இருக்கும் பிராணனுடைய சுரூபியான என்னிடத்தில் (சமஷ்டிரூபியிடத்தில்) மனதைச்செலுத்தி நாதத்தைத் தியானஞ் செய்தால் ஆகாசத்தில் பிரகாசிக்கும் ஜனங்களுடைய பலவகையான சப்தங்களைத் தெரிந்துகொள்வான். சூரியனிடத்தில் கண்ணாகிய இந்திரியத்தையும், கண்ணுடன் சூரியனையும் சேர்த்து அதில் என்னை தியானித்தால் வெகு தூரத்தில் இருப்பவைகளை நேரில் தெரிந்துகொள்வான். மனம, தேகம், அதை அனுசரித்திருக்கும் வாயு ஆகிய இவைகளை என்னிடத்தில் சேர்த்து, தாரணை செய்தால் அதன் மகிமையால் மனஞ் செல்லுமிடத்தில் சரீரமும் செல்லும். மேலும், மனதை உபாதான காரணமாக வைத்துக்கொண்டு எந்த எந்த சுரூபத்தை அடைய விரும்புகிருனே மனத்திற்கு இஷ்டமான அந்தந்தச் சரீரத்தை அடைவான். அது என்னிடத்தில் சித்தத்தைச் செலுத்திச் செய்த தாரணையின் மகிமையேயாம். மேலும் அவன் எந்தச் சரீரத்தில் பிரவேசிக்கவேண்டுமென்று விரும்புகிருனே, அந்தச் சரீரத்தில் தான் இருப்பதாகச் சிந்திக்க வேண்டும். அப்படி நினைப்பதால் சரீரத்தைவிட்டு சூட்சும சரீரத்துடன் வெளியிலிருக்கும் வாயுவின் மார்க்கமாக இஷ்டமான சரீரத்தில் பிரவேசிக்கிருன். புஷ்பத்தில் தேனைக் குடிக்கும் வண்டு எப்படி புஷ்பத்திலிருந்து மற்றொரு புஷ்பத்தை அடைகிறதோ, அப்படி சிரமமின்றி வேறு சரீரத்தில் பிரவேசிக்கிருன். தனது இஷ்டப்படி மரணம் அடைய விரும்பியவன் குதிகாலால் குதத்தை அடைத்துப் பிராணனை உபாதியாகக்கொண்ட ஆத்மாவை இரு

தயம், மார்பு, கண்டம், தலை முதலிய ஸ்தானங்களில் செல்லும்படி செய்து பிரம்மரந்திரத்தின் வழியாக வெளிப் படுத்தி, தனக்கு இஷ்டமான கதியை அடையவேண்டும். அவனுக்கு சுவர்க்கம் முதலிய இடங்களுக்குச் சென்று விளையாடவேண்டுமென்ற அபிப்பிராயம் இருந்தால் அந்தச் சமயத்தில் சத்வ குணமுள்ள என்னுடைய திவ்ய மூர்த்தியைத் தியானம் செய்யவேண்டும். அதனால் சத்வ குணமுள்ள தேவ ஸ்திரீகள் விமானத்துடன் வந்து அவனை அழைத்துப்போவார்கள். என்னையே நினைத்து எந்தக் காலத்தில் எப்படி சங்கற்பிக்கிறேனோ, அதனை அடைவான். அது சத்திய வஸ்துவாகிய என்னிடத்தில் மனத்தைச் செலுத்தியதின் மகிமையேயாம். எல்லாவற்றிற்கும் அதிபதியும், சுதந்திரனுமான என்னிடத்தில் மனத்தைச் செலுத்தி என்னுடைய சுரூபத்தை அடைந்தவன் ஒரு இடத்திலும் கெடுதியை அடையமாட்டான். என்னுடைய ஆஞ்ஞைபோல் அவனுடைய உத்தரவு தடைபடாது. மேலும், என்னிடத்தில் பக்தி செய்து அதனால் சித்த சுத்தி அடைந்து, தாரணையைத் தெரிந்துகொண்டவனுக்கு மூன்று காலத்திய ஜனன மரணம் முதலியவைகள் நன்றாய்த் தெரியும். ஜல ஜந்துக்களுடைய சரீரத்தை ஜலம் எப்படிக் கெடுக்கிறதில்லையோ, அப்படியே என்னைத் தியானஞ் செய்து அதனால் சிரமத்தை அடைந்த மனமுள்ளவனுடைய சரீரம் யோகமயமாக இருப்பதால் அது அக்கினி முதலியவைகளால் கெடுக்கப்படாதது. கொடிரேகை, குடைரேகை, விசிறி ரேகை ஆகிய இவைகளாலும் ஸ்ரீவத்ஸம் முதலியவைகளாலும் அலங்கரிக்கப் பெற்ற என்னுடைய விபூதிகளை [அவதாரங்களை] எவன் தியானிக்கிறேனோ, அவனை எவராலும் ஜயிக்க முடியாது. இம்மாதிரி மேற்காட்டிய யோகதாரணையால் என்னை உபா

சிப்பவனுக்கு மேற்காட்டிய சித்திகளெல்லாம் கிடைக்கின்றன. ஆனதால் இந்திரியங்களை ஜயித்து பிராணாயாமம் செய்து சாந்தனாயிருப்பவனுக்கு [15-வது சுலோகத்தில் காட்டிய தாரணை செய்கிறவன்] எந்த சித்திதான் கிடைக்காது? என்னுடைய சுரூபத்தை அடைய விரும்பி மேலான யோகத்தைச் செய்பவனுக்கு மேற்காட்டிய சித்திகள் இடையூறானவை; காலத்தை வீணாகக் கழிப்பதற்குக் காரணமாக உள்ளவை. [ஆனதால் அவைகளில் ஆசைப்படக்கூடாது என்று கருத்து.] பிறப்பினாலும், ஔஷதிகளாலும், தவத்தாலும், மந்திரத்தாலும் எவ்வளவு சித்திகள் உண்டாகின்றனவோ, அந்த சித்திகள் யாவும் யோகத்தால் கிடைக்கின்றன; மற்றவையால் கிடைக்கிறதில்லை. ஆனதால் யோகத்தை [பிரம்ம சம்பத்தியைக் கொடுக்கும்] விடக்கூடாது. சகல சித்திகளும் என்னிடமிருந்தே உண்டாகின்றன (காரணம்). அவைகளுக்கு நானே அதிபதி. பின்னும், மோட்சம், அதன் சாதனமான ஞானம், அதற்கு உபயோகமான தர்மம், அதனை உபதேசிப்பவர்களான ஆசாரியர்கள் ஆகிய இவர்களுக்கும் நான் அதிபதி. நான் சகல பிராணிகளுக்கும் உள்ளேயும், வெளியிலேயும் இருப்பவன் ஆனாலும் ஒன்றில் அடங்கியவனல்ல; ஒன்றாலும் மறைக்கப்படாதவன்; ஆகாயம் முதலிய பூதங்கள், சகல பிராணிகளுக்கு உள்ளேயும் வெளியிலும் இருப்பதுபோல் நான் வியாபகனாயிருக்கிறேன்.

# அத்தியாயம் 16

## பகவானுடைய விபூதிகள்

**1—5.** இம்மாதிரியான பகவானுடைய வார்த்தை யைக் கேட்டு உத்தவர் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "நீர் பர பிரம்மம்; உமக்கு ஆதியுமில்லை; அந்தமுமில்லை; ஆவரண மற்றவர்; எல்லாப் பதார்த்தங்களையும் படைத்துக் காப் பாற்றிச் சங்கரிப்பவர். பலவகையான பிராணிகளிடத்தில் நீர் வசித்தாலும் மூடர்களால் அறியப்படுகிறதில்லை. வேதத்தின் தாத்பரியத்தை அறிந்த பிராம்மணர்கள் உள்ளபடி உம்மைத் தெரிந்துகொள்கிறார்கள். ஆன தால் (மகரிஷிகள் எந்த வஸ்துக்களில், எப்படி உம்மை உபாசித்து மோட்சத்தை அடைகிறார்கள்?) அந்த சித் தியைச் சொல்லவேண்டும். சகல பிராணிகளையும் சிருஷ்டிப்பவரான நீர் அந்தர்யாமியாக எல்லாப் பிராணி களிடத்திலும் மறைந்து சஞ்சரிக்கிறீர்; மேலும் நீர் எல் லாப் பிராணிகளையும் பார்த்துக்கொண்டிருக்கிறீர்; ஆனா லும் ஜனங்கள் உம்மைப் பார்க்கிறதில்லை. ஏனென்றால், உம்முடைய மாயையால் மோகித்திருக்கிறார்கள். ஓ மிக்க விபூதியுள்ளவரே! பூமி, ஆகாயம், பாதாலம், திக்குகள் ஆகிய ஸ்தலங்களிலிருக்கும் உம்முடைய விபூதிகளை எனக்குச் சொல்லும். சகல புண்ணிய தீர்த்தங்களுக்கும் இருப்பிடமான உம்முடைய தாமரை மலர்போன்ற பாதங் களை நமஸ்கரிக்கிறேன்" என்றார்.

*6—42.* அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் உத்த வரை நோக்கி, 'கேள்வியை அறிந்தவர்களுக்குள் சிறந்த உத்தவ! (முன்னொருகால் குருக்ஷேத்திரத்தில் சத்ருக் களுடன் யுத்தம் செய்ய விரும்பிய அர்ச்சுனன் இந்த விஷ யமாக என்னைக் கேட்டான்.) அப்பொழுது அர்ச்சுனன் ராஜ்ஜியத்திற்காகப் பந்துக்களைக் கொல்வது தர்மத்திற்

கேற்றதல்ல; நிந்திக்கக்கூடியது.' என்று யோசித்து 'நான் பந்துக்களை அடிக்கிறேன். பந்துக்களால் அடிக்கப் பட்டேன்' என்ற பிராகிருத புத்தியை அடைந்து யுத்தஞ் செய்கிறதில்லையென்று திரும்பினான். அந்தச் சமயத்தில் புருஷர்களுக்குள் சிறந்தவனான அர்ஜுனனுக்கு ஆத்ம தத்துவத்தை உபதேசித்தேன். அதனால் அவனுடைய சம்சயம் நிவர்த்தியாயிற்று. அதனை உமக்கு உபதேசிக் கிறேன். ஓ உத்தவ! இந்தச் சகல பிராணிகளுக்கும் நான் ஆத்மாவாகவும், ஸுகிருத்தாகவும், ஈச்வரனாகவு மிருக்கிறேன். மேலும் அந்தப் பிராணிகளைப் படைத்து, பரிபாலித்து, அழிக்கிறேன். சுவர்க்கம் முதலிய புண்ய லோகங்களுள்ளவர்களுடைய புண்ய லோகங்கள் நானே. பிறரைச் சுவாதீனப்படுத்திக்கொள்பவர்களுக்குள் நான் காலமாக இருக்கிறேன். அநேக குணங்களுக்குள் எல்லாவற்றையும் சமமாகப் பார்ப்பதென்ற குணமாக இருக்கிறேன். குணமுள்ளவர்களுடைய இயற்கையான குணம் நான். புத்தி முதலிய குணங்களுக்குள் நான் ஸூத்ராத்மாவாக இருக்கிறேன். (மகத்தானவைகளுக்குள் மகத்தாக இருக்கிறேன். சூட்சுமமானவைகளுக்குள் நான் ஜீவனாக இருக்கிறேன்.) ஜயிக்கமுடியாதவைகளுக்குள் நான் மனதாக இருக்கிறேன். வேதத்தை யறிந்தவர்களுக்குள் நான் ஹிரண்யகர்ப்பனாக இருக்கிறேன். மந்திரங்களுக்குள் மூன்று அட்சரங்களடங்கிய பிரணவமாக இருக்கிறேன். அட்சரங்களுக்குள் (எழுத்துக்களுள்) அகாரமாக இருக்கிறேன். சந்தஸ்ஸுகளுக்குள் மூன்று பாதங்களுள்ள காயத்ரீ சந்தஸ்ஸாக இருக்கிறேன். பிரம்ம ரிஷிகளுக்குள் பிருகுவாகவும், தேவ ரிஷிகளுக்குள் நாரதராகவும், ராஜ ரிஷிகளுக்குள் மனுவாகவும், பசுக்களுக்குள் காமதேனுவாகவும் இருக்கிறேன். சகல தேவர்களுக்குள் இந்திரனாகவும், வசுக்களுக்குள் ஹவ்ய

வாட்டாகவும், ஆதித்தியர்களுக்குள் விஷ்ணுவென்ற ஆதித்தியனாகவும், ருத்திரர்களுக்குள் நீலலோகிதராகவு மிருக்கிறேன். சித்தேசர்களுக்குள் கபிலராகவும், பட்சிகளுக்குள் கருடனாகவும், பிரஜாபதிகளுக்குள் தக்ஷராகவும், பிதுருக்களுக்குள் அர்யமாகவு மிருக்கிறேன். ஓ உத்தவ! அசுரர்களுக்குள் பிரகலாதனாகவும், நட்சத்திரங்கள், ஓஷதிகள் ஆகிய இவைகளுக்கு அதிபதியான சோமனாகவும், யக்ஷர்களுக்கும் ராக்ஷதர்களுக்கும் அதிபதியான குபேரனாகவு மிருப்பதாகத் தெரிந்துகொள்ளும். மேலும், நான் சிறந்த யானைகளுக்குள் ஐராவதமாகவும், ஜல ஜந்துக்களுக்கு அதிபதியாகிய வருணனாகவும், தேஜஸ்விகளுக்குள் சூரியனாகவும், மனிதர்களில் அரசனாகவு மிருக்கிறேன். குதிரைகளுக்குள் உச்சைச்ரவஸ் என்ற குதிரையாகவும், உலகங்களில் சுவர்ணமாகவும், சிட்சிப்பவர்களுக்குள் யமனாகவும், சர்ப்பங்களுக்குள் வாசுகியாகவு மிருக்கிறேன். சிறந்த நாகங்களுக்குள் ஆதிசேடனாகவும், கொம்பு, சிங்கப் பல் ஆகிய இவைகளுள்ளவைகளுக்குள் சிங்கமாகவும், ஆசிரமங்களுக்குள் சன்யாசாசிரமமாகவும், ஜாதிகளுக்குள் பிராம்மண ஜாதியாகவும், புண்ய தீர்த்தங்களுக்குள் கங்கையாகவும், ஸரஸ்ஸுகளுக்குள் சமுத்திரமாகவும், ஆயுதங்களுக்குள் வில்லாகவும், வில்லைத் தரித்தவர்களுக்குள் திரிபுரத்தைக் கொன்ற பரமசிவனாகவு மிருக்கிறேன். மேலானவர்கள் வசிக்கும் ஸ்தானங்களுக்குள் மேருவாகவும், துர்க்கமான ஸ்தலங்களுக்குள் ஹிமவானாகவும், விருட்சங்களுக்குள் அசுவத்த மரமாகவும், ஓஷதிகளுக்குள் யவதான்யமாகவும், புரோகிதர்களுக்குள் வஸிஷ்டராகவும், வேதாந்தத்தை அறிந்தவர்களுக்குள் பிருஹஸ்பதியாகவும், சேனாதிபதிகளுள் சுப்ரமண்யராகவும், நல்மார்க்கத்தைப் பரவச் செய்பவர்களுக்குள் பிரம்மதேவராகவும், யக்ஞங்களுக்குள் பிரம்ம யக்ஞமாகவும், விரதங்களுக்குள்

பிறரை ஹிம்சிக்காமலிருக்கும் விரதமாகவும், (பெருக்குவது, செதுக்குவது, உராய்வது முதலிய) சுத்திகளைச் செய்பவைக்குள் வாயு, அக்னி, சூரியன், ஜலம், வாக்கு ஆகிய இவைகளாகவு மிருக்கிறேன். அஷ்டாங்க யோகங்களில் ஸமாதியாக இருக்கிறேன். ஜயிக்கவேண்டுமென்ற விருப்பமுள்ளவர்களுக்கு நான் நீதியாக இருக்கிறேன். விவேகமுள்ளவர்களுக்குள் ஆத்மவித்தையாக இருக்கிறேன். ஐந்து விதமான க்யாதிகளைச் சொல்பவர்களுக்குள் விகற்பமாக இருக்கிறேன். (ஆக்யாதி, அன்யதாக்யாதி, சூன்யக்யாதி, அசத்க்யாதி, அனிர்வசனியக்யாதி என்று ஐந்து க்யாதிகள். இது இப்படியோ அல்லது அப்படியோ என்ற முடிவற்ற சந்தேகம் விகல்பமெனப்படுகிறது.) ஸ்திரீகளுக்குள் சதரூபையாகவும், புருஷர்களுக்குள் சுவாயம்புவ மநுவாகவும், மகரிஷிகளுக்குள் நாராயண மகரிஷியாகவும், பிரம்மசாரிகளுக்குள் ஸனத்குமாரராகவும், தர்மங்களில் சன்யாச தர்மமாகவும், க்ஷேமத்தைக் கொடுக்கும் காரியங்களுக்குள் அந்தர்முகமாக இருப்பதாகவும், ரகசியமானவைகளில் பிரிய வார்த்தை சொல்வது, மௌனமாக இருப்பது ஆகிய இவைகளாகவு மிருக்கிறேன். (மௌனமாக இருந்தாலும், பிரியமான வார்த்தை சொன்னாலும் அபிப்பிராயம் வெளிப்படாதென்று கருத்து.) ஸ்திரீ புருஷன் இவர்கள் அடங்கிய மிதுனங்களில் பிரஜாபதியாக இருக்கிறேன். தவறுதலில்லாதவர்களில் சம்வத்சரமாகவும், ருதுக்களில் வசந்தமாகவும், மாதங்களில் மார்க்கசீர்ஷ மாதமாகவும் (மார்கழி), நட்சத்திரங்களில் நான்காவது பாதமாகிய அபிஜித் என்ற நட்சத்திரமாகவும், யுகங்களில் கிருத யுகமாகவும், தைரியமுள்ளவர்களுக்குள் தேவாகவும், அஸிதராகவும், வேதத்தைப் பிரித்தவர்களில் சத்யவதியின் புத்திரராகவும், வித்வான்களில் சுக்கிரனாகவும்

இருக்கிறேன். பின்னும் எல்லாப் பிராணிகளுடைய உற்பத்தி, நாசம், போக்கு வரவு, வித்தை, அவித்தை இவைகளைத் தெரிந்துகொண்டிருக்கும் பகவான்களுக்குள் வாசுதேவராகவும் (வசுதேவருடைய புத்திரர்), பாகவதர்களுக்குள் (பக்தர்களுக்குள்) உத்தவராகவும் (நீர்), கிம்புருஷர்களுக்குள் ஹனுமானாகவும், வித்தியாதரர்களுக்குள் சுதர்சனனாகவும் இருக்கிறேன். ரத்தினங்களுக்குள் பத்மராகமாகவும், அழகானவைகளில் தாமரை மலராகவும், தர்ப்பை ஜாதிகளில் குசமாகவும், ஹவிசுக்களில் பசுவின் நெய்யாகவும், முயற்சியுள்ளவர்களுக்குக் கிடைக்கும் சம்பத்தாகவும், சூதாடுபவர்களுடைய கபடமாகவும், பொறுமையுள்ளவர்களுடைய பொறுமையாகவும், சத்வகுணமுள்ளவர்களுடைய சத்வ குணமாகவும், பலமுள்ளவர்களுடைய மனோபலமாகவும், சரீர பலமாகவும், பக்தர்களுடைய பக்தியாகவும் இருக்கிறேன். ஒன்பது மூர்த்திகளுக்குள் வாசுதேவனாக இருக்கிறேன். (வாசுதேவர், சங்கர்ஷணர், பிரத்யும்னர், அனிருத்தர், நாராயணர், ஹயக்ரீவர், வராஹர், நரசிம்ஹர், வாமனரென்று ஒன்பது மூர்த்திகள்) கந்தர்வர்களுக்குள் விசுவாவசுவாகவும், அப்சரசுக்களில் பூர்வ சித்தியாகவும், மலைகளின் ஸ்திரமாக இருப்பதாகிய குணமாகவும், பூமியின் கந்தமென்ற குணமாகவும், ஜலத்தின் ரசமாகவும், மிக்க தேஜசுள்ளவர்களுக்குள் அக்னியாகவும், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் இவைகளுடைய காந்தியாகவும், ஆகாயத்தின் குணமாகிய சப்தமாகவும், பிராம்மண பக்தி யுள்ளவர்களுக்குள் பலிச் சக்கரவர்த்தியாகவும், வீரர்களுக்குள் அர்ஜுனராகவும் இருக்கிறேன். சகல பிராணிகளைப் படைப்பதும், காப்பாற்றுவதும், சம்ஹரிப்பதும் நானே. நடை, மல மூத்திரத்தை வெளிப்படுத்துவது, பேசுவது, எடுத்துக்கொள்வது, ஆனந்தம் முதலிய

கர்மேந்திரிய வியாபாரங்களாகவும், ஸ்பர்சம், பார்ப்பது, ருசியைத் தெரிந்துகொள்வது, சப்தத்தைக் கேட்பது, வாசனையைத் தெரிந்துகொள்வது ஆகிய ஞானேந்திரியங்களுடைய வியாபாரங்களாகவு மிருக்கிறேன். ஒவ்வொரு இந்திரியங்களுக்கும் அதன் விஷயத்தைக் கிரகிக்கும் சக்தியாகவும் இருக்கிறேன். ஐந்து பூதங்களின் தன்மாத்திரைகள் அகங்காரம், மஹத் தத்வம், பதினாறு கலைகள் (ஐந்து பூதங்கள், பதினொரு இந்திரியங்கள்) இவைகளுக்குள்ள புருஷன், பிரகிருதி ஆகிய இருபத்தைந்து தத்வங்களின் சுரூபத்தையும் அவைகளின் நிச்சயத்தையும் தெரிந்துகொள்வதும் நானே. ஜீவன் ஈசுவரன் என்ற பேதமும், குணமுள்ளவன் குணமென்ற பேதமும், க்ஷேத்திரம் க்ஷேத்திரஞ்ஞனென்ற எல்லாப் பேதமும் என்னைக் காட்டிலும் வேறாக இருக்கவில்லை. (எல்லாம் என்னுடைய சுரூபமென்று கருத்து.) பரமாணுக்களைப் பிரித்தெண்ணினாலும் என்னுடைய விபூதிகளைக் கணக்கிடமுடியாது. கோடிக்கணக்கான அண்டங்கள் என்னால் சிருஷ்டிக்கப்பட்டிருப்பதால் அவைகளே கணக்கிடமுடியாதவை, அவைகளிலிருக்கும் என்னுடைய விபூதிகளை எப்படிக் கணக்கிடமுடியும்? பிரபாவம், ஸம்பத், கீர்த்தி, ஐசுவரியம் (அதிபதியாயிருப்பது), ஹ்ரீ, கொடுப்பது, மனத்திற்கும் கண்ணுக்கும் சந்தோஷத்தைக் கொடுப்பது, பாக்கியம், பலம், பொறுமை, விஞ்ஞானம் ஆகிய இவைகள் எவ்விடத்தில் காணப்பட்டாலும் அவை என்னுடைய அம்சமேயாம். இம்மாதிரி என்னுடைய விபூதிகளைச் சுருக்கமாகச் சொன்னேன். என்னிடத்தில் மனத்தைச் செலுத்துவதற்காக இவைகளைச் சொன்னேன். இவைகள் மனத்தின் விகாரங்களால் ஏற்பட்டவை; வாக்கினால் சொல்லப்படும் ஆகாயத் தாமரை மலருக்கு ஒப்பானவையே.

43—45. (வாக்கை மனத்தாலும், மனத்தைப் பிராண னாலும், பிராணனை இந்திரியங்களாலும், அவைகளைப் புத்தியாலும், புத்தியைச் சத்வகுணமுள்ள புத்தியாலும் அடக்கவேண்டும்) இப்படி அடக்கியவன் திரும்பவும் சம்சாரத்தை அடையமாட்டான்.) வாக்கையும் மனத்தை யும் புத்தியால் அடக்காமல் எவ்வளவு விரதஞ் செய்தா லும் அந்த விரதம், தபம், ஞானம் ஆகிய இவைகள் சூளையில் வைக்காத (பச்சை) குடத்திலிருக்கும் ஜலம் போல் நழுவிவிடும். ஆனதால் வாக்கு, மனம், பிராணன் ஆகிய இவைகளை என்னிடத்தில் செலுத்திய புத்தியால் அடக்கினால் கிருதார்த்தனாகிவிடலாம்.

## அத்தியாயம் 17

### பிரம்மசாரி, கிருகஸ்தர்கள் இவர்களது தர்மங்கள்

1—7. உத்தவர் ஸ்ரீ கிருஷ்ண பகவானை நோக்கி, "ஓ! தாமரைக்கண்ணா! வர்ணம், ஆசிரமம், ஆசாரம் இவை களுள்ள மனிதர்களும் அவைகளற்றவர்களும் கர்மங் களைச் செய்யவேண்டும். அதனால் பகவானிடத்தில் பக்தி யுண்டாகும் என்றும், பக்தியுடன் செய்யப்படும் கர்மம் மோக்ஷத்திற்குச் சாதனமாகுமென்றும் உம்மால்சொல்லப் பட்டதல்லவா? கர்மங்களை அனுஷ்டிப்பவர்களெல் லாருக்கும் பக்தியுண்டாகிறதென்ற நியமமில்லையே. ஆன தால் எப்படி தனக்குரிய கர்மங்களை அனுஷ்டித்தால் பகவானாகிய உம்மிடத்தில் பக்தியுண்டாகும்? அதனைச் சொல்லவேண்டும். ஓ! மிக்க பராக்கிரமமுள்ளவரே! மாதவ பிரபுவே! முன்னொருகால் மிக்க சுக சுரூபமான எந்தத் தர்மத்தை ஹம்ஸ சுரூபியாகவிருந்து, பிரம்ம தேவருக்கு உபதேசித்தீரோ, அந்தத் தர்மம் உபதே

சித்து வெகுநாளாகிவிட்டதால் உம்மால் முன்பு உபதேசிக்கப்பட்ட அந்தத் தர்மம் பூலோகத்தில் பெரும்பாலும் மறைந்துபோகும். வேதங்கள் சரீரத்துடன் வாசஞ்செய்கிற பிரம்மதேவருடைய சபையிலும் (அப்படிப்பட்ட தர்மத்தைச் சொல்பவரும் நீரே, அனுஷ்டிப்பவரும் நீரே, காப்பாற்றுபவரும் நீரே. அப்படிப்பட்ட நீர் இந்த உலகத்தைவிட்டுச் சென்றால் அப்படிப்பட்ட தர்மத்தை யார் பிறருக்கு உபதேசிப்பார்? ஆனதால் சகல தர்மங்களையும் அறிந்தவராகிய நீர் உம்முடைய பக்திக்குச் சாதனமாகிய தர்மம் எவனுக்கு எப்படி விதிக்கப்பட்டிருக்கிறது? ) அதனைச் சொல்லும்'' என்று கேட்டார்.

8—20. அதனைக் கேட்ட பகவான் உத்தவரை நோக்கி, 'உம்மால் கேட்கப்பட்ட கேள்வி தர்மத்திற்கு ஒத்தது. வர்ணம், ஆசிரமம், ஆசாரம் இவைகளுள்ள மனிதர்களுக்குப் பகவத் பக்தியைக் கொடுக்கக்கூடியது; ஆனதால் அதனைச் சொல்லுகிறேன்; தெரிந்துகொள்ளும். (கிருதயுகத்தில் மனிதர்களுடைய வர்ணத்திற்கு ஹம்ஸமென்று பெயரிருந்தது. அந்தக் காலத்திய ஜனங்கள் ஜனனத்தாலேயே கிருதகிருத்தியர்களாக இருந்தார்கள். (பகவானை உபாசித்துக்கொண்டு மாத்திரம் இருந்தார்கள். ஆசாரமாகிய தர்மம் பிந்தியுண்டாயிற்று என்று தாத்பரியம்.) ஜனங்கள் அப்படியிருந்ததால் அந்த யுகத்திற்குக் கிருத யுகமென்ற பெயர் கிடைத்தது. மேலும் அந்த யுகத்தில் பிரணவமே (ஓங்காரம்) வேதமாக இருந்தது. (ஆசாரத்தை விதிக்கும் சாஸ்திரமே இல்லையென்று கருத்து.) தர்மமாகிய நான் விருஷப சுருபத்தைத் தரித்திருந்தேன். அக்காலத்திய ஜனங்கள் தபோநிஷ்டர்களாயிருந்து சுத்தனாகிய என்னை உபாசித்

துப் பாபமற்றவர்களாக இருந்தார்கள் (தியானஞ் செய்துகொண்டிருந்தார்கள்). திரேதா யுகத்தின் ஆரம்பத்தில் என்னுடைய ஹிருதயத்திலிருந்து பிராணனை நிமித்தமாகக்கொண்டு வேதவித்தை பிரகாசித்தது. அதிலிருந்து மூன்று வகையான யாகமாக நான் உண்டானேன். மேலும் பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்ற பெயருள்ளவர்களும், தங்களுக்குரிய ஆசாரங்களையே லட்சணங்களாகக் கொண்டவர்களுமான ஜாதிகள் விராட் புருஷனுடைய முகம், கை, தொடை, கால் ஆகிய இவைகளிலிருந்து உண்டாயின. பின்னும் அந்த விராட் புருஷனுடைய ஜகனத்திலிருந்து (இடுப்பிற்குக் கீழ் முன்பக்கம்) கிருகஸ்தாசிரமமும், ஹிருதயத்திருந்து பிரம்மசர்யமும், மார்பிலிருந்து வானப்பிரஸ்தமும், தலையிலிருந்து சன்யாஸமும் உண்டாயின, பின்னும் வர்ணங்களுக்கும் ஆசிரமங்களுக்கும் சுபாவம், உண்டான ஸ்தலத்திற்குத் தக்கபடி தாழ்வு, மத்திம நிலைமை, மேன்மை ஆகிய இவைகளுளவாயின. சமம், தமம், தபசு, சௌசம், சந்தோஷம், பொறுமை, கபடமில்லாமலிருப்பது, என்னிடத்தில் பக்திசெய்வது, தயை, சத்தியம் ஆகிய இவைகள் பிராம்மணனுக்கு இயற்கையான குணங்கள். தேஜஸ், பலம், தைரியம், சௌர்யம், பொறுமை, கொடுப்பது, முயற்சி, ஸ்திர புத்தி, பிராம்மண பக்தி, பிரபுவாயிருப்பது ஆகிய இவைகள் க்ஷத்திரியனுடைய இயற்கையான குணங்கள். பரலோகமிருக்கிறதென்ற புத்தி, கொடுப்பதில் நோக்கம், டம்பமில்லாமலிருப்பது, பிராம்மணனைச் சேவிப்பது, கிடைத்த பொருளில் சந்தோஷப்படுவது ஆகிய இவைகள் வைசிய குணங்கள். பிராம்மணர்களுக்கும், பசுக்களுக்கும், தேவர்களுக்கும் கபடமற்றுப் பணிவிடை செய்வது, அதில் கிடைத்ததைக்கொண்டு சந்தோஷிப்

பது ஆகிய இவை சூத்திர குணங்கள். அசுத்தனாக இருப்பது, பொய் சொல்வது, திருடுவது, பரலோகமில்லை யென்று சொல்வது, காரணமில்லாமல் சண்டை செய்வது, காமம், கோபம், ஆசை இவைகளுள்ளவனாக இருப்பது ஆகிய இவை சண்டாளன்முதலியவர்களுடைய குணங்கள். பிறரை இம்சிக்காமலிருப்பது, சத்தியம் பேசுவது, திருடாமலிருப்பது, காமம், கோபம், உலோபம் இவைகளில்லாமலிருப்பது, சகல பிராணிகளுக்கும் ஹிதத்தையும், பிரியத்தையுஞ் செய்யவேண்டுமென்ற எண்ணம் ஆகிய இவைகள் எல்லா ஜாதிகளுக்கும் பொதுவான தர்மங்களாகும்.

24—34. பிராமணன், க்ஷத்திரியன், வைசியன் ஆகிய மூன்று வர்ணத்தார்களும் கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங்களை முறையே அடைந்து, உபநயனமென்ற இரண்டாவது ஜனனத்தைப் பெற்று ஆசாரியருடைய கிருகத்தில் வசித்து, சாந்தராகி வீணை வார்த்தை பேசாமல் வேதத்தை அத்தியயனம் செய்யவேண்டும். அவைகளின் அர்த்தத்தையும் விசாரிக்கவேண்டும். (உபகுர்வாணனென்றும், நைஷ்டிகனென்றும் பிரம்மசாரிகள் இரண்டு வகை: அதில் உபகுர்வாண பிரம்மசாரியினுடைய தர்மம் சொல்லப்படுகிறது. மேற்சொல்லிய பிரம்மசாரியாக இருப்பவன் மேகலை, மான்தோல், தண்டம், ஜபமாலை, யக்ஞோபவீதம், கமண்டலு, தர்ப்பம் ஆகிய இவைகளைத் தரிக்கவேண்டும். பற்கள், வஸ்திரம் இவைகளைச் சுத்தி செய்வதிலேயே நோக்கமுள்ளவனாயிருக்கக் கூடாது. எண்ணெய் தேய்த்துக்கொள்ளாததால் ஜடை தரிக்கவேண்டும். நல்ல ஆஸனங்களில் ஆசைவைக்கக் கூடாது. ஸ்நானம், போஜனம், ஹோமம், ஜபம், சிறுநீர் பெய்வது இந்தக் காலங்களில் மௌனமாக

இருக்கவேண்டும். கக்ஷம் முதலியவற்றிலிருக்கும் ரோமங்களையும், நகங்களையும் கிள்ளக்கூடாது. பிரம்மசாரியாக இருப்பவன் ஒருபொழுதும் ரேதஸ்ஸை விடக்கூடாது. ஒருகால் தனக்குத் தெரியாமல் ரேதஸ் வெளிப்படுமாகுலும் ஜலத்தில் ஸ்நானஞ் செய்து, பிராணுயாமஞ்செய்து காயத்ரி மந்திரத்தை ஜபிக்கவேண்டும். மேலும் அக்னி, சூரியன், ஆசாரியன், பசு, பிராம்மணர், தகப்பன், பெரியோர்கள், தேவர்கள் ஆகிய இவர்களை இரண்டு ஸந்தியா காலத்திலும் மௌனமாக மந்திரங்களை ஜபித்து உபாசிக்கவேண்டும். ஆசாரியனை மனிதனுக நினைத்து அலட்சியஞ் செய்யக்கூடாது. ஆசாரியன் சகல தேவசுரூபியானதால் அவரைப் பகவானென்றே நினைக்கவேண்டும். காலையிலும் மாலையிலும் பிட்சையெடுத்துவந்த அன்னம் முதலியவைகளை ஆசாரியனிடம் தெரிவித்து, அவருடைய உத்தரவின்மீது புசிக்கவேண்டும். ஆசாரியன் நடக்கும்பொழுதும், படுத்திருக்கும்பொழுதும், உட்கார்ந்திருக்கும்பொழுதும், எப்பொழுதும் சமீபத்தில் அஞ்சலிசெய்துகொண்டு சிஷ்யன் அவரை உபாசிக்கவேண்டும். இம்மாதிரியான விரதத்துடன் வித்தியாப்யாசம் முடிகிறவரையில் ஆசாரியனுடைய கிரகத்தில் விஷய போகங்களில் ஆசையில்லாமல் வசிக்கவேண்டும். மேற்காட்டிய பிரம்மசாரி கிருகஸ்தாசிரமத்தில் ஆசையில்லாமல் பிரமமலோகத்தையடைய விரும்புவாகுகில் கற்றுக்கொண்ட வித்தைக்காகத் தன்னுடைய தேகத்தை ஆசாரியனுக்குச் சமர்ப்பிக்கவேண்டும். வேதத்தை அத்யயனம் செய்ததால் பிரம்மதேஜசுள்ள அந்தப் பிரம்மசாரி, அக்னி, ஆசாரியன், தான், மற்ற பிராணிகள் ஆகிய எல்லாவிடத்திலும் பரமாத்மாவாகிய என்னை அபின்னனுக நினைத்து உபாசிக்கவேண்டும். பின்னுமவன், ஸ்திரீகளைப் பார்ப்பது, தொடுவது, அவர்

களுடன் பேசுவது, பரிஹாச வார்த்தை இவைகளைச் செய்யலாகாது. மேலும் ஸ்திரீ புருஷர்கள் சேர்ந்திருப்பதைப் பார்க்கலாகாது. பின்னும் சௌசம், ஆசமனம், ஸ்நானம், ஸந்தியோபாஸனம், என்னைப் பூஜிப்பது, தீர்த்தங்களை ஸேவிப்பது, ஜபஞ்செய்வது, தொடக்கூடாததைத் தொடாமலிருப்பது, பக்ஷிக்கக்கூடாததைப் பக்ஷியாமலிருப்பது, பேசக்கூடாதவர்களுடன் பேசாமலிருப்பது, ஸகல பிராணிகளையும் நானாகப் பார்ப்பது, மனது வாக்கு சரீரம் இவைகளைச் சுவாதீனப்படுத்திக்கொள்வது ஆகிய இவைகள் எல்லா ஆசிரமங்களுக்கும் பொதுவாகிய தர்மங்கள்.

35–38. மேற்காட்டியபடி பிரம்மசாரியின் தர்மத்தை அனுஷ்டிக்கும் பிராம்மணன் பிரம்மதேஜஸால் அக்னி போல் ஜ்வலிப்பான். என்னிடத்தில் பக்தி செய்வதாலும், கடுந்தபஸ் செய்வதாலும் கர்மவாசனைகளை ஒழித்துச் சுத்தனாவான். இப்படி வேதத்தை அத்யயனஞ்செய்து, அதன் அர்த்தத்தை விசாரித்தபின் இரண்டாவது ஆசிரமத்தை அடைய விருப்பமிருக்குமானால் ஆசாரியனுக்குத் தக்ஷிணை கொடுத்து அவரிடம் விடைபெற்று, அப்யங்கன ஸ்நானம் செய்து, ஸமாவர்த்தனம் செய்துகொள்ள வேண்டும். பிராமணனால் கிருகஸ்தாசிரமத்தையாவது அடையலாம், அல்லது வானப்ரஸ்தனாகவாவது இருக்கலாம், அல்லது சந்யாசஞ் செய்துகொள்ளலாம். (க்ஷத்திரிய வைசியர்களுக்கு சந்யாசத்தில் அதிகாரமில்லை.) ஒரு ஆசிரமத்திலிருந்து மற்றொரு ஆசிரமத்தை யடையாமலிருக்கக்கூடாது. என்னிடத்தில் பக்தியுள்ளவனால் ஆசிரமமில்லாமலு மிருக்கலாம். கிருகஸ்தாசிரமத்தை யடைய விரும்புவானாகில் தனக்குச் சமமான ஜாதி

யில் பிறந்தவளும், குணத்திலும் லக்ஷணத்திலும் நிந்திக்கப்படாதவளும், வயதில் தனக்குக் குறைந்தவளுமான கன்னிகையை விவாகஞ் செய்துகொள்ளவேண்டும்.

39—48. யாகம், அத்யயனம், தானம் ஆகிய இவைகள் பிராம்மணன், க்ஷத்ரியன், வைசியன் ஆகிய மூன்று வர்ணங்களுக்கும் உரியவைகள். பிரதிக்ரஹம் (வாங்குவது), அத்யயனஞ் செய்விப்பது, யாகஞ் செய்விப்பது ஆகிய இவைகள் பிராம்மணனுக்கு மாத்திரம் உரியவைகள் (விருத்திக்காக ஏற்பட்டவையென்று கருத்து). அவைகளில் பிரதிக்ரஹம், தபஸ்ஸையும் தேஜஸ்ஸையும் கீர்த்தியையும் கெடுத்துவிடுமென்ற எண்ணமிருக்குமானுல் யஜனம், அத்யாபனம் இவைகளால் ஜீவிக்க வேண்டும். அவைகளிலும் தோஷமிருப்பதாக நினைத்தால் ஸில விருத்தியால் ஜீவிக்கவேண்டும். (வயலில் இறைந்திருக்கும் தானியங்களைப் பொறுக்கி அதனுல் ஜீவிப்பதே ஸிலமெனப்படுகிறது.) பிராம்மணனுடைய தேகத்தை அற்பமான காம விஷயத்தில் உபயோகிக்கக் கூடாது; இவ்வுலகத்தில் கடுந்தபசில் உபயோகிக் வேண்டும். மரணமடைந்தபின் அளவற்ற சுகங் கிடைக்கும். இப்படி பிராம்மணன் ஸில விருத்தியாலும் உஞ்ச விருத்தியாலும் (கடைவீதி முதலியவைகளில் சிந்தியதை யெடுத்துக்கொள்வது உஞ்ச விருத்தி யெனப்படுகிறது.) திருப்தியடைந்து, அதிதி பூஜை முதலிய தர்மத்தை நிஷ்காமமாக அனுஷ்டித்து, மனத்தை என்னிடத்தில் செலுத்தி, விஷயங்களில் அதிக ஆசை வைக்காமல் கிருகத்திலிருப்பவன் சாந்தியை யடைவான். உலகத்தில் எவர்கள் என் பக்தனுக்குத் தாரித்ரியம் உண்டாகாமல் தனத்தைக் கொடுத்துக் காப்பாற்றுகிருர்களோ அவர்களை ஸமுத்திரத்தில் விழுந்து கஷ்டப்படும் ஜனங்களை ஓடம் சம்ரட்சிப்பதுபோல் சகல ஆபத்துக்களிலிருந்து

நான் காப்பாற்றுகிறேன். மேலும், தகப்பனர் குழந்தைகளைக் காப்பாற்றுவதுபோல அரசன் தன்னுடைய பிரஜைகளுக்கு ஆபத்து வராமலிருக்கும்படி காப்பாற்ற வேண்டும். பின்னும், யானையானது யானைகளைக் காப்பாற்றுவதுபோல தன்னைத் தானே சம்ரட்சித்துக் கொள்ளவேண்டும் (அரசருக்கு முக்கியமென்று காட்டப்பட்டது). இம்மாதிரி பிரஜைகளைத் தர்மமாகக் காப்பாற்றிய அரசன் பாபமற்றவனாகி, பரலோகத்தில் மகேந்திரனுடன் சந்தோஷப்படுகிருன். பிராம்மணன் தனக்குரிய விருத்தியால் ஜீவிக்கமுடியாமல் ஆபத்தையடைந்த காலத்தில் வைசிய விருத்தியான வியாபாரத்தால் ஜீவிக்கலாம்.(அதிலும் உப்பு, மத்யம், எண்ணெய் முதலியவைகளை விற்கக்கூடாது.) அந்த விருத்தியும் செய்ய முடியாவிட்டால் கத்தியை எடுத்துக்கொண்டு க்ஷத்ரியனைப் போல் ஜீவிக்கலாம். சேவகா விருத்தியை எப்பொழுதும் செய்யக்கூடாது. (பிறரிடம் வேலைக்காரனாக இருப்பது சேவகாவிருத்தியெனப்படுகிறது.) க்ஷத்திரியன் ஆபத்துக்காலத்தில் வேட்டையாலும், வைசிய விருத்தியாலும், பிராம்மண விருத்தியாலும் ஜீவிக்கலாம். சேவகா விருத்தியை ஒருபோதும் அனுசரிக்கக்கூடாது. வைசியன் ஆபத்துக் காலத்தில் சூத்திரனுடைய விருத்தியை அனுசரிக்கலாம். சூத்திரன் ஆபத்துக் காலத்தில் பாய் பின்னும் விருத்தியைச் செய்து ஜீவிக்கலாம். ஆபத்து நிவர்த்தியானபின் தங்கள் தங்கள் விருத்தியைச் செய்ய வேண்டுமே யல்லாமல் தாழ்ந்த விருத்தியை அனுசரிக்கக்கூடாது.

49–57. கிருகஸ்தனுக்கு அவசியமான பஞ்ச யக்ஞங்கள் சொல்லப்படுகின்றன. கிருகஸ்தன் பிரம்மயக்ஞத்தால் மகரிஷிகளையும், ஸ்வதாகாரத்தால் பித்ருக்களையும்,

ஸ்வாஹாகாரத்தால் தேவர்களையும், பலிஹரணத்தால் பூதங்களையும், அன்னம் முதலியவைகளால் மனிதர்களையும் தன்னுடைய ஐசுவரியத்திற்குத் தக்கபடி பூஜித்து, அவர்களில் பகவானைப் பாவிக்கவேண்டும். மேலும், முயற்சியில்லாமல் நல்ல மார்க்கமாகச் சம்பாதிக்கப்பெற்ற சுத்தமான தனத்தால் யாகம் முதலியவைகளைச் செய்து பகவானாகிய என்னைப் பூஜிக்கவேண்டும். ஆனால் தன்னுடைய களத்திர புத்திராதிகளைப் போஷிப்பதற்கே தனம் போதாததாக இருந்தால் அதனை யாகத்திற்கு உபயோகப்படுத்தவேண்டாம். பின்னும் கிருகஸ்தனானவன் "பார்க்கப்படும் வஸ்துக்கள் எப்படி அனித்தியங்களாயிருக்கின்றனவோ, அப்படியே கண்ணுக்குப் புலப்படாத சுவர்க்கம் முதலியவைகளும் அனித்தியங்கள்" என்று நினைத்து, குடும்பத்தில் ஆசை வைக்காமல் பகவானிடத்தில் பக்தி செய்யவேண்டும்; புத்திரன், களத்திரம், ஆப்தர்கள், பந்துக்கள் ஆகிய இவர்கள் ஒரே இடத்தில் சேர்ந்து வசிப்பது, வழிப்போக்கர்கள் மடம் முதலிய விடங்களில் சேர்ந்திருப்பது போன்றதேயாம். தூக்கத்தில் சொப்பனமுண்டாகிறது. தூக்கமில்லாவிடில் சொப்பனம் உண்டாகிறதில்லை. அதுபோல் சரீரத்தை அனுசரித்து அவர்கள் நசிக்கிறார்கள். இம்மாதிரியாக உலகத்தின் உண்மையை உணர்ந்து கிருகஸ்தன் அதிதிபோல் கிருகத்தில் வசித்து, மமதை (என்னுடையதென்ற புத்தி) அகங்காரம் இவைகளில்லாமலிருக்கவேண்டும். இப்படி கிருகஸ்தன் செய்யக்கூடிய கர்மங்களைச் செய்து என்னைப் பூஜித்துக்கொண்டு கிருஹஸ்தனாகவே இருக்கலாம்; அல்லது வனத்திற்குப் போகலாம். புத்திரனிருந்தால் (புத்திரனிடத்தில் கிருக கிருத்யத்தை ஒப்புவித்து) சன்யாசஞ் செய்துகொள்ளலாம். எவன் குடும்பத்தில் ஆசை வைத்துப் புத்திரன், பணம்

இவைகளில் மிக்க ஆசைகொண்டு ஸ்திரீகளுக்கு வசப்பட்டு இவர்கள் என்னுடையவர்கள், நான் என்ற தீனபுத்தியை அடைகிருனே, அவன் நஷ்டப்படுவான். பின்னுமவன் மரண காலத்தில் "ஐயோ! என்னுடைய தாய் தந்தைகள் வயது சென்றவர்கள்; என்னுடைய மனைவியோ சிறு குழந்தைகளுள்ளவள்; ஆனதால் நாதனில்லாத இவர்கள் என்னைவிட்டு எப்படி ஜீவிப்பார்கள்?" என்று சிந்தித்து அவர்களையே நினைத்துக்கொண்டு மரணத்தை அடைந்து நரகத்தை அடைவான்.

## அத்தியாயம் 18
## (வானப்ரஸ்தர்களுடைய தர்மம்)

*1—12.* கிருகஸ்தாசிரமத்திலிருந்து வானப்ரஸ்தனுகப் போகவேண்டுமென்ற விருப்பமிருக்குமானல் தன்னுடைய மனைவியைப் புத்திரனிடத்தில் ஒப்புவித்தாவது, மனைவியுடனுவது காட்டிற்குச் சென்று சாந்தனுகி, தன்னுடைய ஆயுளின் மூன்ருவது பாகத்தை அவ்விடத்தில் கழிக்கவேண்டும். (எழுபத்தைந்து வயதுக்குப் பிறகு சொற்ப வைராக்கியம் உண்டானுலும் சந்யாசம் பண்ணிக்கொள்வதே உசிதம் என்று தாத்பரியம்.) வனத்திலுண்டான சுத்தமான கிழங்கு, வேர், பழங்கள் இவைகளைப் புசித்துக்கொண்டும், மரப்பட்டை, இலை, மான் தோல் இவைகளை உடுத்திக்கொண்டும் காலத்தைக் கழிக்கவேண்டும். மயிர், நகம், மீசை முதலியவைகளை க்ஷௌரம் செய்துகொள்ளாமல் வைத்துக்கொள்ளவேண்டும். பற்களைச் சுத்திசெய்து கொள்ளக்கூடாது. மூன்று காலங்களிலும் ஜலத்தில் ஸ்நானஞ் செய்யவேண்டும். தரையில் படுத்துக்கொள்ளவேண்டும். கோடைக்காலத்

தில் நான்கு பக்கங்களிலும் அக்னிகளை வைத்துக் கொண்டும், சூரியனைப் பார்த்துக்கொண்டும், மழைக் காலத்தில் மழைத் தாரையைச் சகித்துக்கொண்டும், பனிக்காலத்தில் ஜலத்தில் கழுத்துவரையில் மூழ்கிக் கொண்டும் தபஸ் செய்யவேண்டும். அக்கினியில் பக்குவமான கிழங்கு முதலியவைகளையாவது,காலத்தால் பக்குவமான பழம் முதலியவைகளையாவது புசிக்கவேண்டும். நீவாரம் முதலிய தானியங்களை உரல், கல் இவைகளால் பொடித்தாவது, பற்களால் உடைத்தாவது புசிக்க வேண்டும். தேசம், காலம் இவைகளுடைய பலத்தைத் தெரிந்துகொண்டு தன்னுடைய ஜீவனத்திற்கு வேண்டியதைத் தானே புதிது புதிதாகச் சம்பாதிக்கவேண்டுமே யல்லாமல் ஏற்கனவே சம்பாதித்து வைக்கப்பட்டதை எடுத்துக்கொள்ளக்கூடாது. நீவாரம் முதலிய காட்டுத் தானியங்களால் சரு, புரோடாசம் இவைகளைச் செய்து ஆக்ரயணம் முதலிய இஷ்டிகளை அனுஷ்டித்து என்னைப் பூஜிக்கலாம். வானப்பிரஸ்தன் சிரௌத விதிப்படி பசுவைக்கொண்டு என்னைப் பூஜிக்கலாகாது. அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸங்கள், சாதுர்மாஸ்யம் ஆகிய இவைகள் வானப்ரஸ்தனால் அனுஷ்டிக்கக்கூடியவை என்று வேதத்தை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். இம்மாதிரி முனியானவன் தபஸ்செய்து சரீரத்தை இளைக்கச் செய்து தபஸ்வரூபியான என்னை ஆராதித்து மகர்லோகஞ்சென்று கிரமமாக என்னை யடைவான். (பயனை உத்தேசியாமல், செய்த தபசின் மகிமையால் அந்தக்கரணம் சுத்தமாகி இவ்வுலகத்திலேயே முக்தியடைவான். பிரதிபந்தகம் அதிகமாகவிருந்தால் கிரமமாக முக்தியடைவான் என்று கருத்து.) எவன் மேற்காட்டிய கடுந்தபசைச் சுவர்க்கம் முதலிய அற்ப பயனுக்காக உபயோகிக்கிறானோ, அவனைவிட மூடன் உலகத்தில் வேறு யார்

இருக்கிறன்? இம்மர்திரியாகத் தவத்தை அனுஷ்டித்து வரும்பொழுது கிழத்தனத்தால் சரீரத்தில் நடுக்கம் உண்டாகி, விரதத்தை யனுஷ்டிக்கச் சக்தியில்லாமலிருந்தால் (வைராக்கியமும் உண்டாகாவிடில்) அக்னிகளை ஆத்ம ஸமாரோபணம் செய்துகொண்டு மனத்தை என்னிடத்தில் செலுத்தி அக்னியில் பிரவேசிக்கவேண்டும்.

*11-37.* கர்மங்களின் பயனுகிய துக்கத்தைக் கொடுக்கக்கூடிய சுவர்க்கம் முதலியவைகளில் எப்பொழுது வைராக்கியம் நன்ருக உண்டாகிறதோ அப்பொழுது எல்லாவற்றையும் விட்டுச் சந்நியாசம் செய்துகொள்ளவேண்டும். சாஸ்திரத்திற் சொல்லிய முறைப்படி பிராஜாபத்தியம் என்ற இஷ்டியைச்செய்து, அதனுல் என்னைப் பூஜித்துத் தன்னுடைய எல்லாத் தனத்தையும் ரித்விக்குகளுக்குக் கொடுத்து அக்கினிகளைத் தன்னிடத்தில் ஆரோபித்து, ஒன்றையும் விரும்பாமல் சன்யாசம் செய்துகொள்ளவேண்டும். சன்யாசம் செய்துகொள்ளும் பிராம்மணனுக்குத் தேவர்கள், களத்திரம் புத்திரன் ஆகிய இவர்களின் சுரூபமாக இருந்து விக்னம் செய்வார்கள். ஏனென்ருல் "இவன் நம்முடைய உலகத்தையும் தாண்டி பிரம்ம பதத்தை யடைவான்" என்ற விரோதம் தேவர்களுக்கு எப்பொழுதும் உண்டு. சந்நியாசி வஸ்திரம உடுத்திக்கொள்ளவேண்டுமென்று விரும்பினுல் கௌபீனத்தை மறைப்பதற்குப் போதுமான வஸ்திரத்தைத் தரிக்கலாம்; தண்டம், கமண்டலு இவற்றைத் தவிர வேறென்றையும் எடுத்துக்கொள்ளக்கூடாது. சுத்தமான இடத்தைக் கண்ணுல் பார்த்துக் காலை வைக்கவேண்டும். வஸ்திரத்தால் வடிக்கட்டிய ஜலத்தைக் குடிக்கவேண்டும். சத்தியத்தால் சுத்தமான வார்த்தையைப் பேசவேண்டும். மனத்தால் விசாரித்துச் சுத்தமான காரியத்தைச்

செய்யவேண்டும். மௌனமாக விருப்பது வாக்கின் தண்டம். காம்ய கர்மங்களை விடுவது தேகத்தின் தண்டம். பிராணுயாமஞ்செய்வது மனத்தின் தண்டம். இந்த மூன்றும் எவனுக்கு இல்லையோ அவன் மூங்கில் தடியால் மாத்திரம் சந்நியாசியாக ஆகமாட்டான். பிராம்மண ஜாதியில் பிக்ஷையகப்படாவிடில் க்ஷத்திரியரிடத்திலும், அவ்விடத்திலும் பிக்ஷை கிடைக்காவிடில் வைசியனிடத்திலும், அதிலும் கிடைக்காவிடில் சூத்திரனிடத்திலும் பிக்ஷை எடுத்துக்கொள்ளலாம். அவர்களிலும் பதிதர்களுடைய வீட்டில் பிக்ஷை எடுக்கக்கூடாது. அந்நியே உத்தேசிக்காமல் ஏழு வீடுகளில் பிக்ஷை எடுக்கலாம். எவ்வளவு ஆகாரம் வேண்டுமோ அவ்வளவை எடுத்துக்கொள்ளலாம். அந்த அன்னத்தைக் கிராமத்திற்கு வெளியில், குளம் ஆறு முதலியவைகளில் ஸ்தலத்தைச் சுத்திசெய்து அவ்விடத்தில் அதை வைத்து விஷ்ணு, பிரும்மா, சூரியன், பூதங்கள் இவைகளுக்காக அந்த அன்னத்தைப் பங்கிட்டு எஞ்சியதைப் புசிக்க வேண்டும். மேலும், ஆத்மாவிலேயே சந்தோஷத்தை அடைந்து, ஆத்மாவுடன் விளையாடிக்கொண்டும் தைரியமுள்ளவனுகி எல்லாவற்றையும் சமமாகப் பார்த்துக்கொண்டு ஒருவனுய்ச் சஞ்சரிக்கவேண்டும். ஜனங்களில்லாத இடத்தில் பயமில்லாமல் வசித்து என்னுடைய பக்தியால் சித்தசுத்தியை அடைந்து, தன்னுடைய ஆத்மாவைப் பகவானுகிய நானுகத் தியானிக்கவேண்டும். இந்திரியங்களை அடக்குவதே மோக்ஷமென்றும், இந்திரிய விக்ஷேபமே பந்தமென்றும் ஞானத்தால் தெரிந்துகொள்ளவேண்டும். ஆன்தால் காமம் முதலிய ஆறு வகைச் சத்துருக்களை ஜயித்து என்னிடத்தில் மனத்தைச் செலுத்தி, சகல காம்யங்களிலும் வைராக்கியத்தையடைந்து மிக்க சுகத்துடன் சஞ்சரிக்கவேண்டும். பிக்ஷைக்காகப்

பட்டணம், கிராமம் யாத்திரை போகும் ஜனங்கள் இவைகளில் பிரவேசிக்கலாம். மேலும் புண்ணிய க்ஷேத்திரம், புண்ணிய நதி, புண்ணியமான மலை, புண்ணியமான காடு, புண்ணியமான ஆசிரமம் இவைகளுள்ள பூமியிலும் சஞ்சரிக்கலாம். வானப்ரஸ்தர்களுடைய ஆசிரமத்தில் பிக்ஷையெடுப்பது மிகவும் மேலானது. அவர்களுடைய சுத்தமான அன்னத்தைப் (ஸிலவிருத்தியால் கிடைத்த) புசிப்பதால் சீக்கிரத்தில் சித்தியை அடைகிறான். எது கண்ணுக்குப் புலப்படுகிறதோ, அது நாசமுள்ளது; ஆனதால் அதை வஸ்துவென்று நினைக்கக்கூடாது. இந்த உலக சுகத்திலும், பரலோக சுகத்திலும் ஆசையற்று வைராக்கியத்தை யடையவேண்டும். மனம், வாக்கு, பிராணன் ஆகிய இவைகளுள்ள இந்த உலகத்தைச் சொப்பன திருஷ்டாந்தத்தால் மாயையென்று நிச்சயித்து, அவைகளை ஸ்மரிக்கக்கூடாது. (இதுவரையில் பஹூதகாதிகளுடைய தர்மம் சொல்லப்பட்டது; இனி பரமஹம்ஸர்களுடைய தர்மம் சொல்லப்படுகிறது.) பாஹ்ய விஷயங்களில் வைராக்கியத்தை அடைந்து, மோக்ஷத்தை அடைய விரும்பி, ஞான நிஷ்டனாக இருப்பவனானாலும், மோக்ஷத்தையும் விரும்பாமல் என்னிடம் பக்தி செய்பவனானாலும், ஆசிரமம், அவைகளின் அடையாளங்கள் ஆகிய இவைகளை விட்டு, விதி நிஷேதங்களைக் கடந்து சஞ்சரிக்கலாம். விவேகமுள்ளவனானாலும் சிறுவன்போலவும், சாமர்த்தியமுள்ளவனானாலும் மூடவன்போலவும், (ஒரு பயனையும் உத்தேசியாமலிருப்பதால்) பண்டிதனானாலும் பைத்தியங்கொண்டவன் போலவும், வேதத்தின் பொருளை உணர்ந்தவனானாலும் பசுப்போல நித்யமான ஆசிரமமில்லாதவனாகச் சஞ்சரிப்பான். மேலும் அவன் கர்மகாண்டத்தின் பொருளில் நோக்கமுள்ளவனாக இருக்கமாட்டான்;

வேதத்திற்கு விரோதமாக அனுஷ்டிக்கவும் மாட்டான்; கேவல யுக்திவாதஞ் சொல்லமாட்டான்; பிரயோசன மில்லாமல் வாதஞ் செய்பவர்களுடைய சபையில் ஒரு பக்ஷத்தையும் தான் ஆசிரயிக்கமாட்டான்; ஜனங்களைக் கண்டு பயப்படமாட்டான்; தானுமொருவரையும் பயப் படச் செய்யான். பிறர் நிந்தித்தாலும் அதனைச் சகித் துக்கொள்வான்; ஒருவரையும் அவமதிக்கமாட்டான்; மூடன்போல் இந்தச் சரீரத்திற்காக ஒருவரையும் விரோ தித்துக்கொள்ளமாட்டான். சந்திரனொருவன் எப்படி ஜல பாத்திரங்களில் பிரதிபலிக்கிருனே, அப்படி ஆத்மா ஒருவராஞலும் சகல பிராணிகளிடத்திலும் இருக்கிருர். (ஆனதால் விரோதிக்கக் காரணமில்லை என்று தாத்பரி யம்.) ஆகாரங் கிடைப்பதும் கிடைக்காமலிருப்பதும் தெய்வாதீனமானதால் ஆகாரங் கிடைத்தாலும் சந் தோஷத்தை அடையமாட்டான்; கிடைக்காவிடினும் துக்கப்படமாட்டான். எவ்வளவு ஆகாரம் புசித்தால் பிராணன் சரீரத்தை விடாமலிருக்குமோ அவ்வளவு அன்னத்தைச் சம்பாதிக்க முயற்சிக்கலாம். பிராணனிருந்தால்தான் தத்துவத்தை விசாரிக்க முடி யும். அதனுல் ஞானத்தை யடைந்து மோக்ஷத்தை யடை வான். தெய்வச் செயலால் கிடைத்த அன்னம் உத்தம மாஞலும், தாழ்ந்ததாஞலும் அதனைப் புசிக்கவேண்டும். அதுபோலவே தெய்வச்செயலாகக் கிடைத்த வஸ்திரம், படுக்கை இவைகள் மேலானவையாஞலும் தாழ்ந்தவை யாஞலும் அதனை அடையவேண்டும். ஈசுவரனுகிய நானெப்படி விளையாட்டாகக் கர்மங்களைச் செய்கிறேனே அப்படி ஞானியாக இருப்பவன் சௌசம், ஆசமனம், ஸ்நானம், மற்ற நியமங்கள் ஆகிய இவைகளை விளை யாட்டாகச் செய்வான். இது நம்மால் செய்யப்பட வேண்டிய விதியென்று செய்யமாட்டான். (விதியைக்

கடந்தவன்) அவனுக்குப் பேத புத்தியில்லை. என்னுடைய ஞானத்தால் அந்தப் பேதபுத்தி அற்றுப்போகிறது. ஆனால் தேகமுள்ள வரையில் சில சமயமிருக்கும். அதனால் அவனுக்குப் பாதகமில்லை. தேகம் இழந்தபின் நானாக ஆகிவிடுவான்.

38—39. சன்யாசிகளில் எவன் விஷயங்களைத் துக்ககரங்கள் என்று தெரிந்துகொண்டு அவைகளில் வைராக்யத்தை யடைந்தும் என்னுடைய தர்மத்தை யறியாமலிருக்கிறானோ, அவன் பகவத்தர்மத்தை அறியவேண்டிக் குருவை ஆசிரயிக்கவேண்டும். இப்படி ஆசாரியரிடஞ் சென்று மிக்க சிரத்தையுடன் அவருக்குச் சிசுருஷை செய்து ஆசாரியனைப் பிரம்மமென்றும், பகவானென்றும் தெரிந்துகொள்ளவேண்டும். அதன் பின் தனித்துச் சஞ்சரிக்கலாமென்று கருத்து.

40—41. (எவன் காமம் முதலியவைகளை ஜயிக்கவில்லையோ, எவனுடைய இந்திரியங்கள் விஷயங்களில் மிகவும் செல்லுகின்றனவோ, எவனுடைய புத்தி விஷயங்களில் பிரவர்த்திக்கிறதோ, எவனுக்கு ஞானம், வைராக்கியம் ஆகிய இவைகளில்லையோ அவன் மூங்கில் தண்டத்தைத் தரிப்பதால் மாத்திரம் சன்யாசி எனப்படுகிறான்). மேலுமவன் தேவர்களையும், தன்னையும், தன்னிடத்திலிருக்கும் என்னையும் வஞ்சிப்பதால் சித்தசுத்தியில்லாதவனாகிறான். ஆனதால் அவனுக்கு இவ்வுலகத்திய சுகமும், பரலோக சுகமும் கிடைக்கிறதில்லை.

42—48. சன்யாசியாக விருப்பவனுக்குப் பொறுமை முக்கிய தர்மமாகும். வானப்பிரஸ்தனுக்கு அஹிம்சை, தவம், தியானம் இவை முக்கியமானவை. கிருகஸ்தனுக்குப் பிராணிகளைக் காப்பாற்றுவது, யாகம் இவை முக்கிய தர்மங்களாகும். பிரமசாரிக்கு ஆசாரியனைச் சேவிப்பதே

முக்கிய தர்மம். மேலும் சௌசம் (ஆசையில்லாமலிருப்பது), தவம், கிடைத்ததில் சந்தோஷம், பிராணிகளிடத்தில் பிரியம், பிரம்மசரியம் இவைகள் கிருஹஸ்தனுக்கு முக்கியங்களாகும். ஆனால் ருது காலம் தவிர மற்ற காலங்களில் ஸ்திரீயைப் புணராமலிருப்பதே கிருஹஸ்தனுக்குப் பிரம்மசரிய விரதமென்று சொல்லப்படுகிறது. எல்லா ஆசிரமிகளுக்கும் என்னை யுபாசிப்பது முக்கிய தர்மமேயாம். இப்படி தனக்குரிய தர்மத்தை அநுஷ்டித்து, வேறு தெய்வத்தை உபாசியாமல் (அனன்யமாக) என்னைப் பூஜித்துச் சகல பிராணிகளிடத்தில் பகவானாகிய நானிருப்பதாக எவன் தெரிந்துகொள்கிறானோ, அவன் சீக்கிரத்தில் என்னிடத்தில் பக்தியை அடைவான். பின்பு அவனுக்குப் பக்தி குறைவின்றி விருத்தியடையும். ஓ உத்தவ! அந்த ஸ்திரமான பக்தியால் சகல உலகங்களுக்கும் அதிபதியும், எல்லாவற்றையும் படைத்தவரும், சங்கரிப்பவரும், எல்லாவற்றிற்கும் காரணமும் பிரம்மமுமான என்னை அடைவான். (என் சமீபத்தை அடைவானென்று கருத்து.) இம்மாதிரி தன் தர்மத்தை அநுஷ்டித்து அதனால் சுத்த சத்துவ குணமுள்ளவனாகி என்னுடைய ஐசுவரியங்களைத் தெரிந்துகொண்டு ஞானம், விஞ்ஞானம் (சாஸ்திர ஞானம்) இவை களுள்ளவனாகி விஷயங்களில் வைராக்கியத்தை அடைந்து என்னை அடைவான். வர்ணம், ஆசாரம் இவைகளுள்ளவர்கள் அநுஷ்டிக்கவேண்டிய தர்மம் மேற்காட்டப்பட்டது. (அதனால் பிதிருலோகங் கிடைக்குமென்று கருத்து.) மேற்காட்டிய ஆசிரம தர்மம் என்னுடைய பக்தியுடன் கலந்திருக்குமானால் (என்னிடத்தில் சமர்ப்பிக்கப்பட்டால்) மோட்சத்தைக் கொடுக்கும். ஓ சாதுவாகிய உத்தவ! தனது வர்ணாசிரம தர்மங்களை அநுஷ்டித்து என்னிடத்திலும் பக்தி செய்தவன் என்னை அடைவான் என்பதை உமக்குச் சொன்னேன்" என்றார்.

# அத்தியாயம் 19

## ஞானியின் சுரூபம்

1—7. எவன் அனுபவம், அதுவரையிலுள்ள சிரவணம் இவைகளை அடைந்து ஆத்ம தத்வத்தை யடைந்து அபரோக்ஷ ஞானத்தை யடைகிறானோ அவன் இந்த ஜகத்தையும், மயக்க நிவிருத்திக்கான சாதனங்களையும் என்னிடத்தில் கல்பிதமென்று விட்டுவிடுவான். (இதுவே வித்வத் சன்னியாசம் எனப்படும்.) ஏனென்றால் ஞானியாயிருப்பவனுக்கு என்னிடத்திலேயே மிகுந்த பிரியமிருக்கும். நானே அவனுக்குப் புருஷார்த்தமாக இருக்கிறேன்; அதற்குச் சாதனமாகவும் இருக்கிறேன். என்னைக் காட்டிலும் சுவர்க்கமாவது மோட்சமாவது ஞானிக்குப் பிரியத்தை உண்டுபண்ணுகிறதில்லை. சாஸ்திர ஞானம், அபரோக்ஷ ஞானம் இவைகளை யடைந்தவர்கள் என்னுடைய மேலான பதத்தைத் தெரிந்து கொள்ளுகிறார்கள். ஞானியாக இருப்பவன் ஞானத்தால் என்னைத் தரிப்பதால் அவனிடத்தில் எனக்கு மிக்க பிரியம். ஞானத்தின் சொற்ப அம்சத்தால் எவ்வளவு சுத்தி ஏற்படுகிறதோ, அவ்வளவு சுத்தி தவத்தாலும், புண்ணிய தீர்த்தத்தாலும், ஜபத்தாலும், தானத்தாலும், மற்ற நல்ல கர்மங்களாலும் உண்டாகிறதில்லை. ஆனதால் ஓ உத்தவ! ஞானம், விஞ்ஞானம் இவைகளுள்ளவராகி அபரோக்ஷானுபவத்தை யடைந்து என்னையே பக்தியாகச் சேவியும். (மற்றவைகளெல்லாவற்றையும் விட்டுவிடலாமென்று கருத்து.) சகல யக்ஞங்களுக்கும் அதிபதியாகிய என்னை மகரிஷிகள், ஞானம் விஞ்ஞானம் இவைகளாகிய யக்ஞத்தால் பூஜித்து என்னையே அடைந்தார்கள். ஓ உத்தவ! ஆத்தியாத்மிகம் முதலிய விகாரங்கள் உண்மையானவையல்ல;

ஏனென்றால், முன்னும் பின்னுமில்லாமல் மத்தியில் தோன்றுகின்றன. ஆனதால் இவைகளுக்கு ஏற்பட்ட ஜனனம்முதலிய விகாரங்களும் அவைகளுக்கு உண்மையிலில்லை. எது முன்னும் பின்னுமில்லையோ அது மத்தியிலுமில்லை. ஆனதால் தேகம் முதலிய விகாரங்கள் முன்னும் பின்னுமில்லாதவைகளாதலால் மத்தியிலும் இல்லாதவைகளேயாம். எது முன்னும் பின்னுமிருக்கிறதோ அது மத்தியிலும் இருக்கிறதென்று சொல்லப்படும். ஆனதால் அப்படிப்பட்ட உம்முடைய ஆத்மாவிற்கு விகாரங்களேது? விகாரங்களற்ற பரப்பிரம்மமென்று உம்முடைய ஆத்மாவைத் தெரிந்துகொள்ளும்" என்று ஸ்ரீ கிருஷ்ணர் சொன்னார்.

8—10. அதனைக் கேட்ட உத்தவர் பகவானை நோக்கி, "ஓ ஜகத்திற் கதிபதியே! ஜகத்சுரூபியே; (சுத்தமாகிய ஞானம், விஞ்ஞானம், பக்தி யோகம் இவைகளின் சுரூபத்தைப் பெரியோர்களும் (பிரம்மா முதலிய) தெரிந்துகொள்ளாமல் தேடுகிறார்கள்.) ஆனதால் அதனை நிச்சயமாகச் சொல்லவேண்டும். கஷ்டமான சம்சார மார்க்கத்தில் மூன்று வகையான தாபத்தால் பீடிக்கப்பட்டுக் கஷ்டப்படும் ஜனங்களுக்கு அமிருதத்தை வர்ஷிக்கும் உம்முடைய பாதமாகிய குடையே சரணமாகும்.

மேலும் சம்சாரமாகிற பாம்புப்புற்றில் விழுந்தவனும், காலமாகிய சர்ப்பத்தால் கடிக்கப்பட்டவனும், அற்ப சுகத்தில் மிக்க ஆசையுள்ளவனுமாக விருக்கும் இந்த ஜனத்தை உயரத் தூக்கிவிடும். கருணையால் மோக்ஷத்தைக் கொடுக்கும் வார்த்தைகளாகிய அமிருதத்தால் நனையும்" என்று கேட்டுக்கொண்டார்.

11—27. அதனைக் கேட்ட பகவான் உத்தவரை நோக்கி, ("பாரத யுத்தம் முடிந்தபின் தர்மபுத்திரர்

பந்துக்களின் நாசத்தால் துக்கமடைந்து, பீஷ்மரிடஞ் சென்று நாங்கள் எல்லோரும் கேட்டுக்கொண்டிருக்குங் காலத்தில் பலவகையான தர்மங்களைக் கேட்டு, பிறகு மோக்ஷ தர்மங்களையுங் கேட்டார். பீஷ்மரால் சொல்லப் பட்ட அந்த மோக்ஷ தர்மங்களை உமக்கு நான் சொல்லு கிறேன். (அந்தத் தர்மத்தில் ஞானம், விஞ்ஞானம், வைராக்கியம், சிரத்தை, பக்தி இவைகளே இருக் கின்றன. பிரகிருதி, புருஷன், மகத், அகங்காரம், ஐந்து தன்மாத்திரைகள், பதினொரு இந்திரியங்கள், ஐந்து மகாபூதங்கள், சத்துவம் முதலிய மூன்று குணங்கள் ஆகிய இருபத்தெட்டு தத்துவங்களும் சகல பிராணி களிடத்திலும் இருப்பதாகவும், அவைகளில் பரமாத்மா ஒருவர் தொடர்ந்திருப்பதாகவும் தெரிந்துகொள்வது ஞானமென்று எனது நிச்சயம். ஒருவனாகிய பரமாத்மா வினால் வியாபிக்கப்பட்டதும், அனேகமுமான உலகத்தை முன்போல் பாராமல் பரம காரணமான பிரம்மமென்றே நினைப்பது விஞ்ஞான மெனப்படுகிறது. (பரோக்ஷ ஞானத்தை ஞானமென்றும், அபரோக்ஷ ஞானத்தை விஞ்ஞானமென்றும் சொல்லுகிறோம் என்று தாத்பரி யம்.) அவயவங்களுள்ளவையான உலகத்திலுள்ள பதார்த்தங்கள் யாவும் சிருஷ்டி, ஸ்திதி, லயம் இவை களுள்ளவை. ஆனதால் உற்பத்தியிலும், லயத்திலும், மத்தியிலும் ஒரு காரியத்திலிருந்து மற்றொரு காரியத் தில் எது தொடர்ந்திருக்கிறதோ, காரியங்கள் நாமசடைந் தாலும் எது நாசமடையாமல் எஞ்சியிருக்கிறதோ, அதுவே உண்மையானது (ஸத்) என்று தெரிந்துகொள்ள வேண்டும். மேலும் ("இந்த உலகத்தில் பரமாத்மாவைத் தவிரப் பலவிதமான வஸ்துக்கள் வேறொன்றுமில்லை" என்ற சுருதியாலும் ஆத்மாவைத்தவிர உலகம் வேறல்ல என்று தெரியவருகிறது. வஸ்திரம் முதலிய காரியங்

கள் காரணமாகிய நூலைக் காட்டிலும் வேருகவிருக்க வில்லை என்று பிரத்தியட்சமாகப் பார்க்கிறோம். பின்னும் பெரியோர்களின் வார்த்தையாகிய ஐதிஹ்யமும் இவ் விஷயத்தில் பிரமாணமாக இருக்கிறது. இன்னும் இந்த உலகமானது உண்மையானதல்ல. கண்ணிற்குப் புலப் படுவதால் என்ற அனுமானமும் இந்த விஷயத்தில் பிரமாணமாக இருக்கிறது. ஆகையால் மேற்காட்டிய நான்கு பிரமாணங்களாலும் உலகம் உண்மையானதல்ல வென்று ஏற்படுவதால் அதனிடமிருந்து வைராக்கி யத்தை அடையவேண்டும். பிரம்மலோகம் வரையி லுள்ள சுகங்கள் கர்ம பரிபாகத்தால் ஏற்படுகிறவை களானதால் இந்திரியங்களுக்குப் புலப்படும் சுகம்போல அவைகளும் அனித்தியங்களென்றே நாம் கொள்ள வேண்டும். பக்தியோகத்தின் சுரூபத்தை முன்னமேயே சொல்லியிருக்கிறேன். அதைக் கேட்கவேண்டுமென்று நீர் விரும்புவதால் திரும்பவும் அதன் காரணத்தைச் சொல்லுகிறேன். (என்னுடைய கதையைக் கேட்கவேண் டும் என்ற சிரத்தை, எப்பொழுதும் என்னுடைய திவ்ய நாமங்களை உச்சரிப்பது, பூஜிப்பதில் நோக்கம், தோத் திரம் செய்வது, என்னுடைய கைங்கரியத்தில் பிரீதி, எல்லா அவயவங்களாலும் நமஸ்கரித்தல், என்னுடைய பக்தனை விசேஷமாகப் பூஜிப்பது, சகல பிராணிகளை யும் ஈசுவரனுகப் பாவிப்பது, சகல சேஷ்டைகளாலும் என்னையே பூஜிப்பது, என்னுடைய குணங்களைச் சொல்லி அவைகளிலேயே இரமிப்பது, சகல கர்மங்களை யும் விட்டு மனத்தை என்னிடத்திலேயே சமர்ப்பிப்பது, என்னைச் சேவிப்பதற்காகப் பணம், விஷய போகம், சுகம் இவைகளை விடுவது, என்னுடைய பக்தி உண்டாவதற் காக யாகஞ்செய்வது, தானஞ்செய்வது, ஹோமஞ்செய் வது, விரதம்செய்வது, தவஞ்செய்வது ஆகிய தர்மங்

களை அனுஷ்டித்து மனிதர்கள் என்னிடத்தில் ஆத்மாவைச் சமர்ப்பித்தால் என்னிடத்தில் அவர்களுக்குப் பக்தியுண்டாகும். அப்படிப்பட்ட பக்தர்களால் அடைய வேண்டிய விஷயம் வேறொன்றுமில்லை. எப்பொழுது சுத்த சத்துவ குணம் பொருந்திச் சாந்தமாயிருக்கும் சித்தத்தை என்னிடம் சமர்ப்பிக்கிறானோ, அப்பொழுது தர்மம், ஞானம், வைராக்கியம், அணிமா முதலிய ஐசுவரியங்கள் ஆகிய இவைகளை அடைகிறான். எப்பொழுது மனிதன் தேகம் முதலியவைகளில் சித்தத்தைச் செலுத்துகிறானோ, அப்பொழுது அவனுடைய மனம் அழுக்குள்ளதாக ஆகிறது; அதர்மம் முதலியவைகளையும் அடைகிறான். என்னிடத்தில் பக்தி எதனால் உண்டாகுமோ, அதுவே தர்மமெனப்படும். எல்லாவற்றையும் பரமாத்மாவென்று நினைப்பதே ஞானமெனப்படும். விஷயங்களில் சம்பந்தியாமலிருப்பது வைராக்கியம் எனப்படும். அணிமா முதலியவைகளே ஐசுவரியம் எனப்படுகிறது" என்று சொன்னார்.

28-31. அதனைக் கேட்ட உத்தவர் பகவானை நோக்கி, "ஓ சத்துருக்களைக் கொல்பவரே! யமமென்பது எவ்வளவு வகை? நியமமென்பது என்ன? சமமென்பது என்ன? தமமென்றால் என்ன? திதிக்ஷா என்பதென்ன? திருதி என்பதென்ன? மேலும் தானம், தவம், சௌரியம், ஸத்யம், ரிதம், சௌசம், தியாகம், தனம், யக்ஞம், தட்சிணை ஆகிய இவைகளின் சுரூபம் எப்படிப்பட்டது? புருஷனுக்கு எது பலமாகிறது? பகமென்பது என்ன? எது லாபமாகிறது? மேலான வித்தை எது? எது அலங்காரம்? எது ஹ்ரீ எனப்படுகிறது? சுகமென்பது என்ன? துக்கமென்பது என்ன? எவன் பண்டிதன் எனப்படுகிறான்? எவன் மூர்க்கனெனப்படுகிறான்? எது

நல்ல மார்க்கம்? எது கெட்ட மார்க்கம்? எது சுவர்க்கம்? எது நரகம்? எவன் பந்து? எது கிருகமெனப்படுகிறது? எவன் பணக்காரன் எனப்படுவான்? எவன் தரித்திரன் எனப்படுகிறான்? எவன் கிருபணன் எனப் படுகிறான்? எவன் ஈசுவரன்? சாதுக்களுக்கு அதிபதியே! இவைகளையும் (அயமம் முதலியவை) இதற்கு விபரீதமானவைகளையும் சொல்லும்" என்று கேட்டார்.

32-46. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் உத்தவரை நோக்கி, "பிறருக்குத் துரோகம் செய்யாமலிருப்பது, பிராணிகளுக்கு இதமாகப் பேசுவது, பிறருடைய சொத்தை மனத்தாலும் அபகரியாமலிருப்பது, ஒன்றிலும் ஆசைப்படாமலிருப்பது, நிஷித்த கர்மங்களில் வெறுப்பு, பணத்தைச் சேர்த்து வைத்துக்கொள்ளாமல் இருப்பது, சாஸ்திரத்தில் சிரத்தை வைப்பது, ஸ்திரீ சம்போகமில்லாமலிருப்பது, வீண் வார்த்தை பேசாமலிருப்பது, ஸ்திரபுத்தியுள்ளவனாக இருப்பது, துக்கத்தைச் சகிப்பது, பயமற்றிருப்பது ஆகிய பன்னிரண்டும் யமமெனப்படும். சாஸ்திரத்திற் சொல்லிய கர்மங்களை அனுஷ்டிக்கத் தகுதியாகவிருப்பது, ஜபம், சாஸ்திரத்தில் சொல்லியபடி சரீரத்தை இளைக்கச் செய்வது, ஹோமம், சிரத்தை, அதிதிகளைப் பூஜிப்பது, என்னைப் பூஜிப்பது, புண்ணிய தீர்த்தங்களுக்குச் செல்வது, பிறருக்கு உபகாரஞ் செய்வது, தெய்வச்செயலாகக் கிடைத்ததைக் கொண்டு சந்தோஷிப்பது, ஆசாரியனைச் சேவிப்பது ஆகிய இவைகள் நியமங்கள் எனப்படுகின்றன. புருஷன் இவைகளை எதற்காக உபாசிக்கிறானோ அவைகளைக் கொடுக்கின்றன. என்னிடத்திலேயே புத்தியைச் செலுத்தியிருப்பது சமம்; இந்திரியங்களை ஜயிப்பது தமமெனப்படும்; துக்கத்தைச் சகிப்பது திதிக்ஷா எனப்படும். நாக்கையும் உபஸ்தத்தையும் ஜயிப்பதே திருதியாகும்.

பிராணிகளுக்குத் துரோகம் செய்யாமலிருப்பதே மேலான தானம். காமங்களை விட்டுவிடுவதே தவமாகும். பசி, தாகம், சோகம், மோகம், ஜரா, மிருத்யு முதலிய சுபாவங்களை ஜயிப்பதே சௌரியம். தாரதம்யமின்றி எல்லாவற்றையும் பிரும்மசுரூபமாகப் பார்ப்பதே சத்தியமாகும். மெதுவான வார்த்தையே ரிதமெனப்படும். கர்மங்களில் ஆசக்தியில்லாமலிருப்பது சௌசம். கர்மங்களை விட்டுவிடுவது சன்யாஸ மெனப்படுகிறது. மனிதர்களுக்கு இஷ்டமான தனம் தர்மமேயாம். பரமேசுவரனாகிய நானே யக்ஞம். ஞானோபதேசமே தக்ஷிணை எனப்படுகிறது. பிராணயாமமே மேலான பலமாகிறது. என்னுடைய ஐசுவரியமே பகமெனப்படுகிறது. என்னிடத்தில் பக்தியே மேலான லாபம். ஆத்ம விஷயமான பேதம் அற்றுப்போவது வித்தை எனப்படுகிறது. நிஷித்த கர்மங்களில் வெறுப்புண்டாவதே ஹ்ரி எனப்படுகிறது. ஒன்றிலும் ஆசைப்படாமலிருப்பது முதலிய குணங்களே அலங்காரமாகிறது. சுகத்தையும் துக்கத்தையும் அதிக்கிரமிப்பதே சுகமாகிறது. கிராம்யமான சுகத்தை அபேக்ஷிப்பதே துக்கமாகும். பந்தம், மோக்ஷம் ஆகிய இவைகளைத் தெரிந்துகொண்டவன் பண்டிதன். தேகம் முதலியவைகளை நான் என்று நினைத்தவன் மூர்க்கன். என் விஷயமான சாஸ்திரம் (நிவிருத்தி மார்க்கம்) நல்ல மார்க்கம். பிரவிருத்தி மார்க்கமே கெட்ட மார்க்கம். சத்துவ குணத்தின் விருத்தியே சுவர்க்கமாகும். தமோ குணத்தின் விருத்தியே நரகமெனப்படுகிறது. ஆசாரியனே பந்து; அவன் நானே யொழிய வேறல்ல. மனித சரீரமே கிருஹம். நற்குணங்கள் பொருந்தியவனே பணக்காரன். எவன் கிடைத்ததில் சந்தோஷத்தை அடையவில்லையோ, அவன் தரித்திரன். இந்திரியங்களை ஜயிக்காதவன் கிருபணன் எனப்படு

கிருன். விஷயங்களில் ஆசைப்படாதவனே ஈசன்; விஷயங்களில் ஆசைப்பட்டவனே அநீசன். நீர் கேட்ட கேள்விக்குப் பதில் சொன்னேன். அதிகமாகச் சொல்வதால் என்ன பிரயோசனம்? குணமென்றும் தோஷமென்றும் பார்ப்பதே தோஷம். அப்படிப் பார்க்காமலிருப்பதே குணமாகும்" என்று சொன்னார்.

## அத்தியாயம் 20

### பக்தி யோகம் முதலியவை

1—5. ஓ தாமரைக் கண்ண! குணதோஷங்களைக் கிரகிப்பதே தோஷமென்றும், அவையில்லாமலிருப்பதே குணமென்றும் சொன்னீரல்லவா? அதெப்படிப் பொருந்தும்? வேதம் ஈசுவரனுகிய உம்முடைய ஆக்ஞையாக இருக்கிறது. அது விதி, நிஷேதம் இவைகளாக விருக்கிறது. ஆனதால் குணத்தையும் தோஷத்தையும் வேதம் அபேட்சிக்கிறது. அதனை எப்படிக் கிரகிக்காமல் இருக்கக்கூடும்? (வேதம் இதைச் செய்தால் புண்ணியம் கிடைக்கும்; ஆனதால் இதைச் செய்யவேண்டுமென்று விதிக்கிறது. இதைச் செய்தால் பாபமுண்டாகும்; அதனுல் இதைச் செய்யக்கூடாது என்று நிஷேதிக்கிறது. குணம், தோஷமென்று கிரகிக்கக்கூடாதென்ருல் விதி நிஷேதமாகிய வேதத்திற்கு என்ன கதியென்று கருத்து.) மேலும் வேதத்தில் ஜாதி, ஆசிரமம், அநுலோமர்கள் (மேலான ஜாதிப் புருஷர்களுக்கும் தாழ்ந்த ஜாதிப் பெண்ணுக்கு முண்டானவர்கள்), பிரதிலோமர்கள் (தாழ்ந்த ஜாதிப் புருஷர்களுக்கும் மேலான குலத்துப் பெண்ணுக்கு முண்டானவர்கள்) இவைகளின் பேதம், கர்மங்களுக்குரிய திரவியம், தேசம், காலம் இவை

களுக்குத் தகாத திரவியம் முதலியவைகளையும், சுவர்க்கம், நரகம் இவைகளையும் வேதம் நிரூபிக்கிறது. விதி, நிஷேதம் இவைகளுள்ள அந்த வேதம் உம்முடைய ஆக்ஞையாக இருக்கிறது. குணம், தோஷமென்ற புத்தியில்லாவிடில் மேற்காட்டிய கர்மகாண்டம் மனிதர்களுக்கு எப்படி க்ஷேமத்தைக் கொடுக்கும்? மேலும், உம்முடைய ஆக்ஞையாகிய வேதத்தால் பிதிருக்களும், தேவர்களும், மனிதர்களும் சுவர்க்கம், மோட்சம் இவைகளையும் அவைகளுக்குச் சாதனமாயுள்ளவைகளையும் தெரிந்துகொள்கிருர்கள். ஆனதால் வேதம் அவர்களுக்கு மேலான கண்ணுக இருக்கிறது. பின்னும் இது குணமென்றும், இது தோஷமென்றும் உம்முடைய வார்த்தையாகிய வேதத்தால்தான் தெரிந்துகொள்ளுகிறோம். அதனல் நல்ல கர்மங்களை அனுஷ்டிக்கிருன்; கெட்ட கர்மங்களை விட்டுவிடுகிருன். குணம் தோஷமென்ற மயக்கம் வேதத்தாலேயே ஏற்பட்டிருக்கிறது. அந்த மயக்கத்தை நிவர்த்தி செய்யும்" என்று கேட்டார்.

6—17. அதனைக் கேட்ட பகவான் உத்தவரை நோக்கி, "ஞானயோகம், கர்மயோகம், பக்தியோகம் என்ற என்ற மூன்று யோகங்களை மனிதர்களுடைய க்ஷேமத்திற்காகச் சொன்னேன். இதைத் தவிர க்ஷேமத்தை அடைவதற்கு வேறு உபாயமில்லை. கர்மங்கள் துக்கத்தைக் கொடுக்கக்கூடியவையென்று அதன் பலனில் ஆசைப்படாமல் இருப்பவர்களுக்கு ஞானயோகம் சித்தியைக் கொடுக்கும். கர்மங்களில் வைராக்கியத்தை அடையாமல் அவைகளின் பயனில் ஆசைகொண்ட காமிகளுக்குக் கர்மயோகம் சித்தியைக் கொடுக்கும். எவன் தெய்வச் செயலான பாக்கியத்தால் என்னுடைய கதையில் சிரத்தையை யடைந்து கர்மங்களில் அதிகமாக நிர்வேதத்தை

அடையாமலும் அதிகமாக ஆசைகொள்ளாமல் இருக்கிருனே, அவனுக்குப் பக்தியோகம் சித்தியைக் கொடுக்கும்.) (மூன்று யோகங்களும் வெவ்வேறு அதிகாரிகளை உத்தேசித்துச் சொல்லப்பட்டனவென்று கருத்து.) எதுவரையில் கர்மத்தின் பயனில் நிர்வேதம் உண்டாகவில்லையோ, எதுவரையில் என்னுடைய கதையைக் கேட்பது முதலியவைகளில் சிரத்தை உண்டாகவில்லையோ, அதுவரையில் கர்மங்களைச் செய்யவேண்டும். (காம்ய கர்மங்களில் ப்ரவிருத்தித்தவன் விதி நிஷேதங்களை முற்றிலும் அநுசரிக்கவேண்டும். பயனை உத்தேசியாமல் கர்மங்களைச் செய்பவன் ஞானமுண்டாவதற்கு முன் சக்திக்குத் தக்கபடி விதி நிஷேதங்களை அநுசரிக்கவேண்டும். ஞானயோகம், பக்தியோகம் இவைகளை அப்யசிப்பவன் சொற்பம் அநுசரிக்கவேண்டும். ஞானம், பக்தி இவைகளில் சித்தியடைந்தவன் விதி நிஷேதங்களை அநுசரிக்கவேண்டியதில்லை யென்பது அடுத்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.)) ஓ உத்தவ! தன்னுடைய வர்ணாச்ரமங்களுக்குரிய தர்மங்களை அநுஷ்டித்தும் அவைகளின் பயனில் ஆசைப்படாமல் யாகம் முதலியவைகளை அநுஷ்டித்துக்கொண்டும் நிஷித்தமானவைகளைச் செய்யாமலுமிருப்பவன் சுவர்க்கத்தையும் அடையான், நரகத்தையுமடையான். (விதியை அதிக்ரமியாமலும், நிஷித்தத்தைச் செய்யாமலுமிருப்பதால் நரகத்தை அடையமாட்டான். (பயனை உத்தேசியாமலிருப்பதால் சுவர்க்கத்தையும் அடையானென்று கருத்து.) மேற்காட்டியபடி கர்மங்களைச் செய்துகொண்டிருப்பவன் பாபமற்றவனுகி, ஆசை முதலிய மனத்தின் மலமற்றவனுகி, சுத்தனுகி, மிக்க சுத்தமான ஞானத்தை அடைவான்; அல்லது தெய்வச் செயலால் பக்தியையாவது அடைவான். (ஞானத்தைக் காட்டிலும் பக்தி கிடைப்பதரிதென்று

காட்டப்பட்டது.) (சுவர்க்கத்திலிருக்கும் புண்ணியசாலிகளும், நரகத்திலிருக்கும் பாபிகளும் இந்த மனித சரீரம் வேண்டுமென்று விரும்புகிறார்கள். மனித சரீரம் ஞானம், பக்தி ஆகிய இவைகளுக்குச் சாதனமாக இருக்கிறது. புண்ணியத்தாலுண்டாகும் தேவ சரீரமும் பாபத்தாலுண்டாகும் யாதனா சரீரமும் ஞானம், பக்தி ஆகிய இவைகளுக்குச் சாதகமாகிறதில்லை. ஆனதால் மனிதன் தேவ சரீரம் வேண்டுமென்றுவது ஆசைப்படக்கூடாது; மனித சரீரம் அவைகளைக் காட்டிலும் சிறந்ததானாலும் அதையும் விரும்பக்கூடாது. சரீரத்தில் அபிமானம் வைத்தால் பிரமாதத்தை (தவறுதல்) அடைவான். மேற்சொல்லிய விஷயங்களை நன்றாய்த் தெரிந்துகொண்டு இந்த மனித சரீரம் சித்தியைக் கொடுக்கக்கூடியதானாலும் அதிலும் அபிமானம் வைக்காமல் அந்தச் சரீரம் இருக்கும்பொழுதே மோட்சத்தை அடைவதற்கு முயல வேண்டும். (பறவை தான் கூடு கட்டிக்கொண்டு வசித்த மரத்தை, தயையில்லாதவர்கள் வந்து வெட்டும்பொழுது அதில் அபிமானம் வைக்காமல் அதனை விடுவதால் க்ஷேமத்தை அடைவதுபோல் மனிதன் தன்னுடைய ஆயுளை இரவு பகல் அபகரிக்கிறதென்று நிச்சயித்து, அதனால் பயந்து நடுக்கமுற்று விஷயங்களில் ஆசையையொழித்துப் பரமாத்மாவை அறிந்து சாந்தியை அடைய வேண்டும்.) (சம்சாரமாகிய சமுத்திரத்தைத் தாண்டுவதற்கு அந்த மனுஷ்ய சரீரம் முக்கியமான ஓடமாக இருக்கிறது.) இது கிடைப்பதரிது; மிகக் கெட்டியானது; பிரயத்தனமின்றிக் கிடைத்திருக்கிறது; இதனைச் சமுத்திரத்தில் நடத்துவதற்கு ஆசாரியர்கள் இருக்கிறார்கள். கப்பல் செல்வதற்கு அனுகூலமாகக் காற்று அடிப்பது போல் ஈசுவரனாகிய என்னால் தூண்டப்பட்டிருக்கிறது.

ஆனதால் இப்படிப்பட்ட சாதனத்தை அடைந்தும் எவன் சம்சாரத்தைத் தாண்டவில்லையோ, அவன் ஆத்மாவைக் கொன்றவனாகிறான். (வைராக்கியமில்லாதவன் கர்மத்தை அனுஷ்டித்தால் வைராக்கியமுண்டாகும். அதனால் ஞானம், பக்தி இவைகளுண்டாகுமென்று சொல்லப்பட்டது.) இனி, வைராக்கியமுள்ளவனை உத்தேசித்து ஞானயோகம் சொல்லப்படுகிறது.)

18—27. கர்மங்கள் துக்கத்தைக் கொடுக்கக் கூடியவையென்று நினைத்து எவன் அவைகளின் பயனில் ஆசையை யொழிக்கிறானோ, (அவன் இந்திரியங்களை ஜயித்து மனத்தை விஷயங்களில் செல்லாமல் ஆத்மாவினிடத்திலேயே இருக்கும்படி அப்பியாசம் செய்து ஸ்திரப்படுத்தவேண்டும். மனம் அடிக்கடி விஷயங்களில் செல்லும் சுபாவமுள்ளதானதால் அதைப் பரமாத்மாவையே தியானிக்கும்படி செய்வது கஷ்டம். ஆனாலும் சிறிது சிறிதாக மனத்தின் காமத்தையும் பூர்த்திசெய்து கொண்டு, அப்பியாச பலத்தால் வேறு விஷயங்களில் செல்லாமல் ஆத்மாவிடமே ஸ்திரப்படுத்தவேண்டும் மனத்தை அதன் வழி விட்டுவிடக்கூடாது. பிராணன், இந்திரியங்கள் ஆகிய இவைகளை ஜயித்துப் புத்தியில் சத்துவ குணத்தை விருத்திசெய்து. அதனால் மனத்தைச் சுவாதீனப்படுத்திக்கொள்ளவேண்டும். துஷ்டக் குதிரையின் அபிப்பிராயத்தை அறிந்த சாரதி கொஞ்சம் அதன் வழியாக விட்டுப் பின்பு அதைக் கடிவாளத்தால் அடக்குவதுபோல் மனது சஞ்சல சுபாவமுள்ளதென்று தெரிந்துகொண்டு ஒரே காலத்தில் அதனை அடக்கமுடியாததானதால் அதனை உபேட்சியாமல் அதற்கு வேண்டிய விஷயங்களைச் சிறிது கொடுத்து, சத்துவ குணம் பொருந்திய புத்தியால் அடக்கி, சுவாதீனஞ் செய்துகொள்ளவேண்டும். இப்படி மனத்தைச் சுவா

தினைப்படுத்திக்கொள்வதே மேலான யோகமெனப்படு கிறது.) (கொஞ்சம் மனத்தை அடக்கியவனுக்கு முற்றி லும் மனத்தை வசப்படுத்திக்கொள்ளும் உபாயம் மூன்று உலகங்களால் காட்டப்படுகிறது.) மகத் தத்து வம் முதலியவை பிரகிருதி முதலாக உண்டாயிற்றென் றும், அவைகள் பிருதிவி முதலாக லயிக்கிறதென்றும், தத்துவங்களை விசாரித்துத் தியானித்தால் மனது வசப் படும். இம்மாதிரி தத்துவங்கள் உற்பத்தி நாசமுள்ளவை யென்று நிச்சயமுண்டானால் அதை அறியாததாலுண் டான சம்சாரத்தில் ஆசை யொழியும். (ஆசாரியனால் அல்லது சாஸ்திரத்தால் உபதேசிக்கப்பெற்ற விஷ யத்தை அடிக்கடி தியானிப்பான். அதனால் தேகாபி மானம் முதலியவை நிவிருத்தியாகும். யமம், நியமம் முதலிய யோக மார்க்கத்தை அனுஷ்டித்து என்னைத் தியானிக்கவேண்டும்; அல்லது ஆத்மா அனாத்மா இவைகளை விசாரித்துத் தியானிக்கலாம்; அல்லது என்னைப் பூசிப்பது, சேவிப்பது முதலியவைகளால் தியா னிக்கவேண்டும்; வேறு மார்க்கத்தையும் யோசிக்க வேண்டாம். இப்படி முனியாக இருப்பவன் ஒருகால் நிஷித்த கர்மத்தைச் (பாபம்) செய்தாலும் அதற்காக அவன் பிராயச்சித்தத்தை அனுஷ்டிக்கவேண்டியதில்லை. ஞானப்யாசத்தாலேயே (பக்தியுள்ளவனானால் நாம ஸங் கீர்த்தனம் முதலியவைகளால்) அந்தப் பாபம் நிவிருத்தி யாகும்.) எவர்கள் எதற்குரியவர்களோ, அந்த மார்க் கத்தை அவர்கள் அனுஷ்டிப்பதே குணமாகும். அப்படிச் செய்யாமல் மாறுதலாக அனுஷ்டிப்பது தோஷமாகும். இதுவே குணதோஷங்களின் லட்சணம்.) இயற்கையில் (உற்பத்தியால்) அசுத்தர்களான புருஷர்கள் கர்மத் தில் நிவிருத்தியை அடைவதற்காக இது குணம், இது தோஷமென்று கர்மங்களில் நியமம் ஏற்படுத்தப்பட்

டிருக்கிறது. (கர்மங்களில் பிரவர்த்திப்பதால் புருஷனுக்கு அசுத்தி ஏற்படுகிறது. ஆனாலும் வெகு காலமாகப் பிரவிருத்தி மார்க்கத்திலிருக்கும் புருஷனை அந்த மார்க்கத்திலிருந்து ஒரே காலத்தில் முற்றிலும் திருப்பிவிடுவது சாத்தியமல்ல. ஆனதால் இதைச் செய்யலாம், இதைச் செய்யக்கூடாது என்று விதி நிஷேதங்களைச் சொல்லி வேதம் மனிதனைப் பிரவர்த்தியிலிருந்து நிவிருத்திக்கிறதே யொழியப் பிரவிருத்தி மார்க்கத்தை விதிக்கவில்லை என்று கருத்து.)

28—36. எவன் என்னுடைய கதையைக் கேட்பது முதலியவைகளில் சிரத்தையுள்ளவனாகவும், கர்மங்கள் துக்கத்தைக் கொடுக்கக்கூடியவை என்று தெரிந்து கொண்டவனாகவும் இருக்கிறானோ, ஆனாலும் பயனில் ஆசையுள்ளவனாகவும், அதனை விடமுடியாதவனாகவும் இருக்கிறானோ, அவன் பக்தியால் எல்லாம் கிடைக்கும் என்ற நிச்சயத்துடன் என்னைச் சேவிக்கவேண்டும். விஷயங்களை அனுபவித்தாலும் அவைகள் துக்கத்தைக் கொடுக்கக்கூடியவைகளென்று நினைத்து அவைகளில் பிரியப்படாமலேயே இருக்கவேண்டும். முன்காட்டிய வண்ணம் [19-ஆம் அத்தியாயத்தில் 20, 21, 22, 23, 24-ம் சுலோகங்களில் பக்தியின் சுரூபம் காட்டப்பட்டிருக்கிறது.] பக்தியைச் செய்து என்னை உபாசிப்பவனுடைய இருதயத்தில் நான் எப்பொழுதும் வசிப்பேன். அதனால் அவனுடைய சகல காமங்களும் நசிக்கும்; அவனுக்கு அகங்காரமற்றுப்போகும்; சகல சம்சயங்களும் நிவிருத்தியாகும்; சகல கர்மங்களும் நசிக்கும். என்னிடத்தில் பக்தியுள்ளவனும், என்னிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தியவனுமான யோகிக்குப் பக்தியோகமே க்ஷேமத்தைக் கொடுக்கும். அவனுக்கு ஞானம், வைராக்கியம் இவைகள் வேண்டியதில்லை (பக்தி) ஞானம் முதலிய

வைகளை அபேட்சிக்கிறதில்லை. (ஞானம்) பக்தியை அபேட்சிக்கிறது. ஆனதால் பக்தியோகமே மேலானது என்று கருத்து.) கர்மங்களாலும், தவத்தினலும், ஞானத்தாலும், வைராக்கியத்தாலும், யோகத்தாலும், தானத்தாலும், தீர்த்த யாத்திரை முதலியவைகளாலும் எந்தச் சித்தசுத்தி முதலியவை உண்டாகின்றனவோ, அதை என்னுடைய பக்தன் அடைவான். மேலும் அவன் சுவர்க்கம், மோக்ஷம், வைகுண்டம் ஆகிய இவைகளை விரும்புவானுகில் பிரயாசையின்றி அதனையும் அடைவான். (அவைகளை விரும்பமாட்டான் என்று கருத்து.) என்னிடத்திலேயே பிரீதியுள்ள தீரர்களான பக்தர்கள் ஒன்றையும் விரும்புகிறதில்லை. இறப்பும் பிறப்பும் இல்லாத கைவல்லியத்தை நான் கொடுத்தாலும் பெற்றுக்கொள்ளார்கள். ஒன்றையும் விரும்பாமலிருப்பதே மேலான க்ஷேமம் என்றும், க்ஷேமத்திற்குச் சாதனமென்றும் சொல்கிறார்கள். ஆனதால் ஆசையற்று ஒன்றையும் விரும்பாமலிருப்பவனுக்கு என்னிடத்தில் பக்தி உண்டாகும். (ஒன்றிலும் அபேட்சையில்லாதவனுகிய என்னிடத்தில் ஒன்றிலும் ஆசையில்லாதவனுக்குப் பக்தி உண்டாகும்.)

37—38. (ஆனதால் என்னிடத்திலேயே மனத்தைச் செலுத்தி, ராகத்துவேஷங்களற்று, சம சித்தர்களாகிப் பரமாத்மாவை அடைந்தவர்களுக்கு விதி நிஷேதங்களால் ஏற்படும் புண்ணிய பாபங்களில்லை. என்னுல் சொல்லப்பட்ட என்னுடைய மார்க்கங்களை அனுஷ்டிப்பவர்கள் க்ஷேமத்தை அடைவார்கள்; பரப்பிரம்மத்தை அடைவார்கள்.)

## அத்தியாயம் 21

### குண தோஷங்கள்

முன் அத்தியாயத்தில் என்னுல் காட்டப்பட்ட பக்தி யோகம், கர்மயோகம் ஆகிய மார்க்கங்களை விட்டு எவர்கள் ஸ்திரமில்லாத பிராணன் அல்லது இந்திரியங்களால் அற்ப போகங்களை அனுபவிக்கிருர்களோ, அவர்கள் சம்சாரத்தை அடைவார்கள். (ஞானம், பக்தி இவைகளில் சித்தியடைந்தவர்களுக்குக் குணம் தோஷமென்ற பேதமில்லை. சாதனத்தை அனுஷ்டிப்பவர்களுக்கு நித்திய கர்மமும் நைமித்திக கர்மங்களும் சித்த சுத்தியை உண்டுபண்ணுபவை யானதால் அவைகள் குணங்களாகின்றன. அதனைச் செய்யாமலிருப்பதும், நிஷித்த கர்மங்களைச் செய்வதும் தோஷமாகும். கிருச்சிரம் முதலிய பிராயச்சித்தம் மேற்காட்டிய தோஷங்களை நிவர்த்திப்பதால் குணமாகிறது. (ஞான நிஷ்டர்களுக்கு ஞானுப்பியாசம் குணம், அதற்கு விரோதமாக இருப்பது தோஷம். பக்தி மார்க்கத்தில் இருப்பவர்களுக்கு சிரவணம் முதலிய பக்தியே குணம்; அதற்கு விரோதமாக இருப்பது தோஷம்.) எவர்கள் ஸித்தியை அடையாமலும், அதற்குத் தக்க சாதனங்களை அனுஷ்டியாமலும் இருக்கிருர்களோ, அவர்களுக்குக் குணம் தோஷம் இவைகளென்பது பின் சுலோகங்களால் காட்டப்படுகிறது.) (அவரவர்கள் எதனைச் செய்யவேண்டுமோ, அதனைச் செய்வதே குணமாகும்.) தமக்கு அதிகாரமில்லாத மார்க்கத்தில் பிரவேசிப்பதே தோஷமாகும்.) இப்படி குணதோஷங்கள் அதிகாரிகளை உத்தேசித்துக் கற்பிக்கப்பட்டவைகள். (வஸ்துவினிடத்தில் குணமாவது தோஷமாவது இல்லை.)) வஸ்துக்களெல்லாம் சமமானவையானுலும் இது யோக்கியமோ, அயோக்கியமோ

என்று சந்தேகித்து ஜனங்கள் பிரவர்த்தியாமலிருப்ப தற்காகச் சுத்தி அசுத்தி, குணம் தோஷம், சுபம் அசுபம் இவைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. (பிர விருத்தி மார்க்கம் கெடுதியை விளைவிக்குமாதலால் அதனைத் தடுப்பதற்காகவே வேதம் வஸ்துக்களுக்குச் சுத்தி முதலியவைகளை விதிக்கிறது. ஆனதால் நிவிருத்தி அடைவதே மேலானது என்று தாத்பரியம்.) நான் மனு முதலியவர்களாக அவதரித்து, தர்மத்திற்காகச் சுத்தி யையும், அதர்மத்திற்காக அசுத்தியையும், விவகாரத் திற்காகக் குணதோஷங்களையும், (இது எடுத்துக்கொள் ளக்கூடியது, இதைக் கிரகிக்கலாகாது என்றது) சரீரயாத் திரைக்காகச் சுபாசுபங்களையும் காண்பித்தேன். (பூமி, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசமென்ற ஐந்து பூதங்களே சகல பிராணிகளுடைய சரீரத்திற்கும் காரணங்களாக இருக்கின்றன. ஆத்மா எல்லாப் பிராணிகளுக்கும் ஒன் றேயாம். (ஆனதால் எல்லா வஸ்துக்களும் சமமானவை களே என்று கருத்து.)) மேற்காட்டியபடி சமமானவை யானாலும் நாமரூபங்கள் வெவ்வேறாக வேதத்தால் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. அதனால் அவரவர்களுக் குப் புருஷார்த்தம் சித்திக்கிறது.) மேலும் தேசம், காலம், பலம், அதிகாரி முதலியவர்களுக்கும் குணதோஷங்கள் கர்மப் பிரவிருத்தியைக் குறைப்பதற்காகவே என்னால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. (இனி சுத்தி அசுத்தி இவைகள் காட்டப்படுகின்றன.) கிருஷ்ணசாரத்தின் (கருப்பு மான்) சஞ்சாரமில்லாத தேசம் அசுத்தமானது. அதிலும் பிராம்மண பக்தியில்லாத தேசம் அசுத்தம். கிருஷ்ணசாரமுள்ளதானாலும் சாதுக்களில்லாவிடில் அது அசுத்தமாகும். அதிலும் கோமயத்தால் மெழுகுவது முதலிய சம்ஸ்காரமற்றவை (மிலேச்சர்கள் அதிகமாக வசிக்குமிடம்) அசுத்தம். அதிலும் ஊஷர பூமி அசுத்

தம். அனுஷ்டிக்கவேண்டிய திரவிய சம்பத்தியுள்ள காலமும், பூர்வாஹ்ணம் முதலியவையும் சுத்தம். எதனுல் கர்மானுஷ்டானத்திற்குப் பாதகமேற்படுகிறதோ, (ஆசௌசம் முதலியவை) அது அசுத்தமான காலம். திரவியங்களுக்கு ஏற்பட்ட சுத்தியையும் சொல்லுகிறேன். திரவியத்தால் திரவியம் சுத்தமாகும். (ஜலத்தால் சுத்தமாகும்; மூத்திரத்தால் அசுத்தமாகும்.) பிராம்மணன் இது சுத்தமென்று சொன்னுல் அது சுத்தமாகும்; இது அசுத்தமென்றால் அசுத்தமாகும். (புரோக்ஷணம் முதலிய ஸம்ஸ்காரத்தால் புஷ்பம் முதலியவை சுத்தமாகும்; பரியுஷிதம் முதலியவை சுத்தமாகிறதில்லை.) மோப்பத்தால் புஷ்பம் முதலியவை அசுத்தமாகும். புதிதாக வந்த ஜலம் முதலியவைகள் பத்து நாளில் சுத்தமாகும். குளத்திலுள்ள ஜலத்தைச் சண்டாளன் முதலியவர்கள் தொட்டாலும், ஜலம் அதிகமாக இருந்தால் சுத்தமாகும்; சொற்பமானுல் அசுத்தமாகும். (சூரிய கிரகணம் முதலிய காலங்களில் அன்னம் புசிப்பது சக்தியுள்ளவர்களுக்கு அசுத்தியாகும்; அசக்தர்களுக்குச் சுத்தியாகும். புத்தியாலும் சுத்தி அடைகிறதுண்டு. (ஆசௌசத்தில் பத்து நாட்கள் சென்ற பின்) சம்பத்துள்ளவனுக்கு அழுக்குள்ள கந்தைத் துணி அசுத்தமாகும்; தரித்திரனுக்குச் சுத்தமாகும். மேற்காட்டிய திரவியம், வாக்கு முதலியவை தேசம், அவஸ்தை இவைகளை அனுசரித்துப் பாபத்தை உண்டுபண்ணுகின்றன. (நிர்ப்பயமான இடத்தில் அசுத்தியை உண்டுபண்ணுகின்றன. திருடன் முதலியவர்களால் உபத்திரவிக்கப்பெற்ற இடத்தில் அவைகள் அசுத்தியை உண்டுபண்ணுகிறதில்லை; ரோகமுள்ளவனுக்கு அசுத்தியை உண்டுபண்ணுகிறதில்லை.) திரவிய சுத்தி பலவகையானது. எப்படியெனில் தானியம், மரப் பாத்திரம், எலும்பு (யானையின் எலும்பு

= தந்தம்), நூல், எண்ணெய், நெய் முதலிய ரசங்கள், சுவர்ணம் முதலிய தேஜஸ், தோல் ஆகிய இவைகள் காலம், வாயு, அக்கினி, மண், ஜலம் இவைகளால் சுத்தமாகும். (தானியம் சில நாட்கள் சென்றால் சுத்த மாகிறது. மரப்பாத்திரம், மண், ஜலம் இவைகளால் சுத்த மாகிறது. தந்தம் முதலியவை காற்று முதலியவைகளால் சுத்தமாகிறது. நூல் ஜலத்தால் சுத்தமாகிறது. நெய் முதலியவை காய்ச்சுவதால் சுத்தமாகின்றன. சுவர்ணம் முதலியவை அக்கினியால் சுத்தமாகின்றன. தோல் எண்ணெயால் சுத்தமாகும்.) பிருதிவி சம்பந்தமுள்ள பதார்த்தங்கள் ஒன்றோடொன்று சேருவது, பிரிவது முதலியவையால் சுத்தங்களாகின்றன. (அன்னம் முத லியவைகளில் மயிர் முதலிய அசுத்த பதார்த்தங்களின் சம்பந்தமிருந்தால் அதனை விலக்குவதால் சுத்தமாகும். நெய்யின் சேர்க்கையாலும் அன்னத்திற்குச் சுத்தி யுண் டாகிறது.) தாமிரம், வஸ்திரம் முதலியவைகளில் அழுக்குப் பிடித்தால் அந்த மலம் நீங்கி, துர்க்கந்தமின்றி அது தன் நிலைமையை அடையும் வரையில் புளி முதலிய வைகளால் சுத்தி செய்யவேண்டும். (கர்த்தாவின் சுத்தி காட்டப்படுகிறது.) மனிதன் ஸ்நானத்தாலும், தானத் தாலும், கர்மத்தை அனுஷ்டிக்கத்தக்க வயதாலும், சக்தியாலும், உபநயனம் முதலிய சம்ஸ்காரங்களாலும், சந்தியோபாஸ்தி முதலிய கர்மங்களாலும், என்னை ஸ்ம ரிப்பதாலும் (பகவானை நினைப்பது) சுத்தமாவான். மேற்கண்ட சுத்தியுள்ளவன் வேதத்தால் விதிக்கப் பெற்ற கர்மங்களை அனுஷ்டிக்கத்தக்கவனுவான். நல்ல ஆசாரியர் முகமாக உள்ளபடி மந்திரங்களைத் தெரிந்து கொள்வதே அவைகளுக்குச் சுத்தியாகும். செய்த கர் மங்களை ஈசுவர சமர்ப்பணம் செய்வதே கர்ம சுத்தியா கும். மேற்காட்டியபடி தேசம், காலம், திரவியம், கர்த்தா,

மந்திரம், கர்மம் ஆகிய ஆறும் சுத்தமானவையானால் அவைகளால் தர்மமுண்டாகிறது; இவைகள் அசுத்தமானால் அதர்மமுண்டாகிறது. (தர்மம், அதர்மம் இவைகளை நிரூபிப்பதற்காகவே சுத்தி அசுத்தி இவைகள் சொல்லப்பட்டனவென்று கருத்து.) ஆனால் சில சமயம் குணம் தோஷமாகவும், தோஷம் குணமாகவும் ஏற்படும். (பிரதிக்கிரகம் ஆபத்காலத்தில் குணம்; மற்ற காலத்தில் தோஷம். குடும்பத்தை விட்டுப்போவது தோஷமானாலும் வைராக்கியமுள்ளவனுக்குக் குணமாகிறது. ஆனதால் இது குணம், தோஷம் என்று நியமஞ்செய்த வேதத்திற்குக் குணம் தோஷம் என்ற பேதமில்லை என்பதே உட்கருத்தென்று கொள்ளவேண்டும். ஜாதியாலாவது, கர்மத்தாலாவது பதிதர்களான ஜனங்கள் கள் குடிப்பது முதலிய மகாபாபத்தைச் செய்தாலும் அவர்களுக்கு அது தோஷமாகிறதில்லை. அவர்கள் முன்னமேயே பாபத்தைச் செய்து பதிதர்களாக இருப்பதால் பின் செய்த பாபம் அவர்கள் விஷயத்தில் தோஷமாக ஆகிறதில்லை. உயர்ந்த இடத்தில் படுத்திருப்பவன் கீழே விழுவான். கீழே படுத்திருப்பவன் விழுவானா? ஸ்திரீகளுடைய சேர்க்கை சன்னியாசிக்குத் தோஷமானாலும் ருது காலத்தில் ஸ்திரீ சங்கம் கிருகஸ்தனுக்குக் குணமென்று சொல்லப்பட்டிருக்கிறது.) ஆனதால் விஷயங்களில் பிரவிருத்தியைச் சங்கோசித்து நிவிருத்தியை அடையவேண்டும். அப்படிச் செய்யச் செய்யக் கர்மபந்தத்திலிருந்து விடப்படுவான். இப்படி நிவிருத்தியடைவதே மனிதர்களுக்குத் தர்மமாகும். அதனால் சோகம், மோகம், பயம் இவைகள் நீங்கும். விஷயங்களைக் குணமென்று நினைப்பதால் அவைகளில் ஆசக்தி உண்டாகி அவைகளையே நினைக்கிறான். பின்பு அவைகளையடைய வேண்டுமென்ற காமமுண்டாகிறது. அதற்கு இடை

யூறு நேர்ந்தால் கலகமுண்டாகிறது. அதனால் அடக்க முடியாத கோபமுண்டாகிறது. அதனால் மோகமுண்டாகிறது. இதைச் செய்யலாம், இதைச் செய்யக்கூடாதென்ற விவேகமற்றுப்போகிறது. அந்த விவேகமில்லாதவன் சூனியனாகிறான் (இல்லாதவனுக்குச் சமனாகிறான்). பின்பு மூர்ச்சையடைந்தவன்போலும், மரணமடைந்தவன்போலும் புருஷார்த்தத்தை இழந்துவிடுகிறான். இப்படி விஷயங்களில் அபிநிவேசத்தை அடைந்தவன் தன்னையும் பிறரையு மறியான். விருட்சம்போல் ஜீவிப்பதால் மூர்ச்சை யடைந்தவனுக்குச் சமனென்றும், துருத்திபோல் மூச்சுவிடுவதால் மரணமடைந்தவனுக்குச் சமனென்றும் சொல்லப்பட்டது. அவனுடைய ஜீவனமும், மூச்சுவிடுவதும் வியர்த்தமானதேயாம். மருந்தில் ருசியை யுண்டுபண்ணுவதற்காகக் கற்கண்டு முதலியவைகளைக் காண்பிப்பதுபோல் வேதம், சுவர்க்கம் முதலிய பயன்களைக் காண்பித்திருக்கிறது.) இம்மாதிரி பயனைக் காண்பித்தது கர்மத்தில் சிரத்தையை யுண்டு பண்ணுவதற்காகவே யொழிய வேறில்லை. (மோட்சத்தைச் சொல்வதற்காகவே அவாந்தர பயனாகிய சுவர்க்கம் முதலியவைகளை வேதம் சொல்லுகிறது.) ஜனங்கள் இயற்கையில் பசு முதலியவைகளிடத்திலும், ஆயுள், இந்திரிய பலம் முதலியவைகளிலும், புத்திரன் முதலியவர்களிடத்திலும் மிக்க ஆர்வமுள்ளவர்கள். அவைகள் புருஷனுக்கு அனர்த்தத்தை விளைவிக்கக்கூடியவை. இப்படி மனிதன் விஷயங்களில் ஆசைகொண்டு தேவ யோனி, பசு, பட்சி, விருட்சம் முதலிய யோனிகளை அடைந்து ஸம்ஸாரத்தில் சுற்றுகிறான்; பரம சுகமாகிய மோட்சத்தை அறியவில்லை. ஆனாலும் வேதஞ்சொல்வதே உண்மையென்று நம்பியிருக்கிறான். அப்படிப் பட்ட மனிதனுக்குத் தாழ்ந்த ஜன்மத்தை அடையும்

மார்க்கத்தை வேதம் உபதேசிக்குமா? (மோக்ஷத்தை நிரூபிப்பதற்காக வேதம் ஏற்பட்டு, கர்மகாண்டத்தை முதலில் நிரூபித்தது. ஆனாலும் அதன் உட்கருத்து நிவிருத்தியிலென்றே கருத்து.) மேற்காட்டிய வண்ணம் வேதத்தின் உட்கருத்தை அறியாத சிலர் (தர்க்க, மீமாம் ஸகர்கள்) அதில் சொல்லப்பட்டிருக்கும் சுவர்க்கம் முதலிய பயனைக் கேட்டு, புஷ்பம்போல் ரமணீயமான பயனில் ஆசைகொண்டு அதனையே புருஷார்த்தமென்று நினைக்கிறார்கள். வேதத்தின் உட்கருத்தை யறிந்த வியாஸர் முதலியவர்கள் அப்படிச் சொல்லமாட்டார்கள். சுவர்க்கம் முதலிய பயனில் ஆசைகொண்டு தீனர்களாகி அதனை அடைய விரும்பி, புஷ்பத்தையே பழமென்று நினைத்து அக்கினியால் சாத்தியமான சில கர்மங்களைச் செய்து தூமாதி மார்க்கத்தை அடைபவர்கள் ஆத்மலோகத்தை யறியார்கள். மேலும், கர்மத்திலேயே நோக்கமுள்ளவர்களும், பிராணனையே திருப்திசெய்பவர்களுமான ஜனங்கள் ஆத்ம லோகத்தை யறியார்கள். இருளால் தடுக்கப்பெற்ற கண்களுக்குச் சமீபத்திலிருக்கும் வஸ்து புலப்படுமா? நான் சகல பிராணிகளுடைய ஹிருதயத்திலும் வசிக்கிறேன். நானே இந்த உலக சுரூபியாக இருக்கிறேன். என்னைக்காட்டிலும் வேறாக ஜகத்தில்லை; ஜகத்து என்னிடமிருந்து வெளிப்பட்டது. அப்படிப்பட்ட பரமாத்மாவாகிய என்னுடைய சுரூபத்தை மேற்காட்டிய கர்ம ஜடர்கள் தெரிந்துகொள்ளமாட்டார்கள். என்னுடைய உட்கருத்தை அறியாமல் எவர்கள் விஷயங்களிலேயே ஆசைகொண்டு வீணாகப் பசுக்களை இம்சிக்கிறார்களோ (யாகஞ்செய்கிறார்களோ), அவர்கள் மரணமடைந்தபின் அந்தப் பசுக்கள் அவர்களை இம்சிக்கின்றன. மாமிசபட்சணத்திலும், சுவர்க்கம் முதலிய பயனிலும் ஆசையிருக்குமானால் யாகத்தைச் செய்ய

வேண்டும். யாகத்தில்தான் மாமிசபட்சணஞ் செய்ய லாம் என்று வேதஞ் சொன்னதேயொழிய யாகஞ்செய்து பசுவை இம்சிக்கவேண்டுமென்று விதிக்கவில்லை.

அப்படிப்பட்ட வேதத்தின் உட்கருத்தை யறியாமல் வேத சப்தத்தைக் கேட்ட மாத்திரத்தில் கர்மத்தில் பிரவர்த்திக்கிறான். மேற்காட்டியபடியுள்ள வேதத்தின் உண்மையை யறிந்தவன் கர்மங்களைச் செய்யமாட்டான். (ஆசையற்றவனுக்கு ஒருவித கர்மமுமில்லை. மனிதன் எதைச் செய்கிறானோ அதெல்லாம் காமத்தின் சேஷ்டை யென்று ஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.) வேதத் தின் உட்கருத்தை யறியாத ஜனங்கள் இம்சை செய்வதையே விளையாட்டாகக்கொண்டு, தாங்கள் சுகத்தையடைய விரும்பி, பசுக்களைக் கொன்று பிதிருக் கள், பூதபதி முதலிய தேவதைகளைப் பூஜிக்கிறார்கள். வியாபாரி தீவாந்தரஞ் சென்று மிக்க பணம் சம்பாதிக்க விரும்பி, கையிலிருக்கும் பணத்தைச் செலவுசெய்து சாமான்களை வாங்கி, அவைகளைக் கப்பலில் ஏற்றிக் கொண்டு செல்லுகையில் கப்பல் உடைந்து சமுத்திரத் தில் பொருள் நஷ்டமானால் எப்படி ஒருவித இலாபமு மில்லாதவனாகிறானோ, அப்படி மனிதன் பரலோகஞ் சென்று மிக்க சுகத்தை அனுபவிக்கலாமென்று நினைத்துக் கர்மங்களைச் செய்கிறான். பரலோகம் சொப்ப னத்திற்குச் சமமானது; உண்மையில்லாதது. அதைப் பற்றிக் கேள்விப்படும்பொழுது காதுக்குப் பிரியத்தைக் கொடுக்கக்கூடியதாக இருக்கிறது. அதனை உண்மை யென்று நினைப்பது மயக்கமேயாம். ரஜஸ், ஸத்வம், தமஸ் முதலிய குணங்களுள்ள ஜனங்கள் மேற்காட்டிய குணங்களுள்ள இந்திரன் முதலிய தேவர்களைப் பூஜிக் கிறார்கள். அவர்கள் என்னுடைய அம்சமானாலும் அந்த எண்ணத்துடன் அவர்கள் உபாசிக்கவில்லை (பேதமாக

உபாஸிக்கிறார்கள்). "இவ்வுலகத்தில் யாகத்தைச்செய்து தேவர்களைப் பூஜித்து, சுவர்க்கத்தில் மிக்க போகங்களை அனுபவிப்போம். பின்பு பூமியில் மேலான குலத்தில் பிறந்து, மேலான கிருகஸ்தனாக விருப்போம்" என்று சங்கற்பித்து யாகம் முதலிய கர்மங்களை ஜனங்கள் அனுஷ்டிக்கிறார்கள்.

(வேதத்தில் கர்மகாண்டம் முழுவதும் புஷ்பத்திற்குச் சமமானது) (பழமல்லவென்று கருத்து. (உபநிஷத் காண்டமே பழமானது).) அப்படிப்பட்ட வேத வாக்கியங்களைக் கேட்டு மனங்கலங்கி, தன்னைத் தெரிந்தவனாக நினைத்துக் கர்வங்கொண்டிருப்பவர்கள் என்னுடைய வார்த்தையையும் நம்பமாட்டார்கள். ஆனதால் கர்ம காண்டம், தேவதா காண்டம், பிரம்ம காண்டம் என்ற மூவகையான வேதம் "ஆத்மா பிரம்மமேயாம்; சம்ஸாரியல்ல" என்று சொல்லுகிறது. மந்திரங்களும், அவைகளை வெளிப்படுத்தியவர்களும் இந்திரியங்களுக்குப் புலப்படாத விஷயங்களைச் சொல்லுகிறார்கள். அதனைச் சொல்வதே எனக்குப் பிரியமானது. (சுத்தமான அந்தக்கரணமுள்ளவர்களுக்கு இது தெரியும்; மற்றவர்களுக்குத் தெரியாது. அந்தக்கரணம் சுத்தமாகும் வரையில் கர்மத்தை விடக்கூடாதென்று கருத்து.) என்னைத் தவிர வேதத்தையும், வேதத்தின் உட்கருத்தையும் அறிந்தவர்கள் ஒருவருமில்லை யென்று இது முதல் அத்தியாயம் முடியும் வரையில் காட்டப்படுகிறது.) சப்த பிரம்மமாகிய வேதத்தின் சுரூபத்தையும், அர்த்தத்தையும் எளிதில் தெரிந்துகொள்ள முடியாது. சப்த பிரம்மம் பிராணன், இந்திரியம், மனது இவைகளின் சுரூபமாக இருக்கிறது. அதற்குக் கரையில்லை; ரகசியமான அர்த்தமுள்ளது; சமுத்திரம்போலப் பிரவேசிக்க முடியாதது. (சப்த பிரம்மம் ஸ்தூலம், சூட்சுமமென்று இருவகையுள்ளது. சூட்சு

மத்தின் சுரூபத்தைத அறியமுடியாது. பிராணமயமாக வுள்ளது பரமெனப்படுகிறது; மனோமயமாயுள்ளது பச்யந்தி என்ற பெயருள்ளது; இந்திரியமாயுள்ளது மத்யமா வெனப்படுகிறது. சப்த பிரம்மத்தின் சுருபங்கள் நான்கு. அவைகளை அந்தர்முகர்களான பிராம்மணர்கள் தெரிந்துகொள்வார்கள். மற்றவர்களுக்குத் தெரியாது. சரீரத்தின் மத்தியத்தில் மூன்று ஸ்தானங்கள் இருக்கின்றன. அவைகள் அதனைப் பிரகாசப்படுத்துகிறதில்லை. நான்காவது சுருபமாகிய வாக்கை மனிதர்கள் சொல்லுகிறார்கள்— சுருதி. அதனைச் சொல்லுகிறார்களே யொழிய அதன் உண்மையை அறியவில்லை என்று கருத்து.) தாமரைத் தண்டில் சூட்சுமமான நூல் காணப்படுவது போல் பிராணிகளுடைய சரீரத்தில் நாதம் ஒன்று இருக்கிறது. அதுவே சப்தப் பிரம்மத்தின் சூட்சும சுருபம். எங்கும் வியாபித்திருப்பவனும், பரப்பிரம்மமும், அளவற்ற சக்தியுள்ளவனுமான நான் அதற்கு அதிஷ்டாதாவாக இருக்கிறேன். அந்த நாதமென்பது ஓங்கார ரூபியாய்ச் சூட்சும சுருபியாக ஹிருதயத்திலிருக்கிறது. அந்த ஹிருதயாகாசத்திலிருந்து அந்த நாதம் பிராணனை உபாதியாகக்கொண்டு (உபநாதங்களுடன்) ஸ்பரிசம் முதலிய அட்சரங்களைப் பிரகாசப்படுத்தும். மனத்தை நிமித்தமாகக்கொண்டு அமிருதமயமாகிக் காயத்ரி முதலிய சந்தஸ் சுருபத்தை அடைகிறது.

(பட்டுப் பூச்சி இருதயத்திலிருந்து முகத்தின் வழியாகப் பட்டுக்களை உண்டுபண்ணுவது மேற்காட்டிய விஷயத்தில் உதாரணமாகிறது.) ஹிருதயத்திலிருந்து சூட்சுமமான நாதம் மேலே கிளம்பி, கண்டம் முதலிய ஸ்தானங்களில் சம்பந்தித்து ஸ்பரிசம் (ககாரம் முதல் மகாரம் வரையிலுள்ள எழுத்துக்கள்), ஸ்வரம் (உயிரெழுத்துக்கள்), ஊஷ்மங்கள் (ச, ஷ, ஸ, ஹ), அந்த

ஸ்தங்கள் (ய, ர, ல, வ) இவைகளை உண்டுபண்ணிக் கொண்டு வைதிக லௌகிக பாஷைகளால் அளவற்ற ஸ்தூல ரூபத்தை அடைகிறது. ஸ்தூல ரூபத்திலிருந்து சூட்சும ரூபத்தை அடைவதும் இப்படியே. காயத்ரி, உஷ்ணிக், அனுஷ்டுப், பிருஹதீ, பங்க்தீ, திருஷ்டுப், ஜகதீ, அத்யஷ்ட, அதிஜகதீ, அதிவிராட் என்ற சந்தசுக்களும் ஸ்தூல ரூபத்தில் அடங்குகின்றன. மேற்காட்டிய சந்தசுக்கள் ஒன்றைக்காட்டிலும் மற்றொன்று நான்கு அட்சரங்களால் அதிகமானவை. (இதுவரையில் ஸ்தூல ரூபத்தின் சுரூபத்தையும் முழுதும் அறிய முடியாதென்று காட்டப்பட்டது. இனி, அதன் அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளவும் முடியாதென்று காட்டப்படுகிறது.) வேதம் கர்மகாண்டத்தில் விதி வாக்கியங்களால் எதனை விதிக்கிறது? தேவதா காண்டத்தில் மந்திரங்களால் எந்த அர்த்தத்தைத் தெரிவிக்கிறது? ஞான காண்டத்தில் எதை அனுவாதம் செய்து நிஷேதித்தது" என்பதை என்னைத் தவிர வேறொருவனாலும் தெரிந்துகொள்ள முடியாது. ஆனதால் வேதத்தின் உட்கருத்து எனக்குத்தான் தெரியும். ஆனால் அதன் கருத்தை நீர் சொல்லும் என்று கேட்பீராகில் (வேதம் கர்மகாண்டத்தில் யக்ஞ சுரூபியாகிய என்னையே விதிக்கிறது; இந்திரன் முதலிய தேவ சுரூபியாக என்னையே சொல்லுகிறது. ஞானகாண்டத்தில் ஆத்மாவிடத்தில் ஆகாயமுண்டாயிற்றென்று ஆரம்பித்துப் பிரபஞ்சத்தை அனுவதித்து, அவைகள் பரமாத்மாவைக்காட்டிலும் வேறு அல்லவென்று நிஷேதித்து, பிரபஞ்சம் என்னுடைய சுரூபமென்று என்னையே நிரூபிக்கிறது.) வேதம் என்னையே முக்கிய அர்த்தமாகக்கொண்டு பிரபஞ்ச பேதங்கள் மாயையால் ஏற்பட்டவை என்று சொல்வதற்காக அவைகளை அனுவதித்துப் பின்பு பரப்பிரம்மத்தைக்

காட்டிலும் வேறான வஸ்து உலகத்திலில்லை என்று நிஷேதித்து சாந்தியை அடைந்தது. இதுவே வேதத்தின் முக்கிய கருத்து.) (முளையிலுள்ள ரஸமே முளையின் விஸ்தாரமாகிய கிளை முதலியவைகளில் பரவுகிறதுபோல் பிரணவத்தின் அர்த்தமாகிய பரமாத்மாவே அதன் விஸ்தாரமாகிய வேதத்தின் பொருளென்று கருத்து.)

குறிப்பு

காயத்ரீ :— இருபத்துநான்கு அட்சரமுள்ளது. உஷ்ணிக்- இருபத்தெட்டு அட்சரங்களுள்ளது. இப்படி ஒவ்வொரு சந்தஸைக் காட்டிலும் மற்றொன்று நான்கு அட்சரங்களால் அதிகமானது. உஷ்ணிக் முதல் உத்க்ருதி வரையில் சந்தஸ்ஸுக்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. உத்க்ருதி என்பது 104 அட்சரங்களுள்ளது. காயத்திரிக்கு முன் உக்தா, அத்யுக்தா, மத்யா, பிரதிஷ்டா, சுப்பிரதிஷ்டா என்று ஐந்து சந்தஸ்ஸுக்களுண்டு. ஒவ்வொரு சந்தஸுகளுக்கும் நான்கு பாதங்களுண்டு. ஒவ்வொரு பாதமும் சமான லட்சணங்களுள்ளதானால் அது சமவிருத்தம் எனப்படும். முதல் பாதமும் மூன்றாவது பாதமும் சமமான லட்சணமுள்ளதும், இரண்டாவது பாதமும் நான்காவது பாதமும் சமமானால் அர்த்த சமவிருத்தம் எனப் படும். நான்கு பாதங்களும் வேறு லட்சணமுள்ளவையானால் விஷமவிருத்தம் எனப்படும். ஒவ்வொரு சந்தஸ்ஸிலும் அவாந்தர பேதங்களுண்டு. அவைகளைப் பிங்களாசாரியர் முதலியவர்களால் செய்யப்பட்டுள்ள சந்தஸ் சாஸ்திரத்தில் கண்டுகொள்க.

---

# அத்தியாயம் 22

## தத்துவங்களின் சங்கியை

1—4. உத்தவர் பகவானை நோக்கி, "ஓ ஜகத்பதியும், நித்தியமூர்த்தியுமாகிய கிருஷ்ண ! மகரிஷிகள் தத்துவங்களை எவ்வளவென்று கணக்கிட்டிருக்கிறார்கள்?

நீர் இருபத்தெட்டு தத்துவங்களென்று சொன்னீர். அதனைக் கேட்டேன். சிலர் இருபத்தாறு தத்துவங்களென்கிறார்கள். மற்றுஞ் சிலர் இருபத்தைந்து தத்துவங்களென்கிறார்கள். பின்னுஞ் சிலர் ஏழு தத்துவங்களென்றும்; இன்னுஞ் சிலர் ஒன்பது தத்துவங்களென்றும், மற்றுஞ் சிலர் ஆறு தத்துவங்களென்றும், சிலர் நான்கு தத்துவங்களென்றும், பின்னுஞ் சிலர் பதினொரு தத்துவங்களென்றும், சிலர் பதினேழு தத்துவங்கள் என்றும், இன்னுஞ் சிலர் பதினாறு தத்துவங்களென்றும், சிலர் பதின்மூன்று தத்துவங்களென்றும் சொல்கிறார்கள். எந்தப் பயனை உத்தேசித்து மகரிஷிகள் பலவகையாகச் சொல்லுகிறார்கள்? அதன் உண்மையைச் சொல்லவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

5—17. அதனைக் கேட்ட பகவான் உத்தவரை நோக்கி, ''பிராம்மணர்கள் சொல்வது உண்மையே. எங்கும் எல்லாம் இருக்கின்றன. என்னுடைய மாயையை ஆசிரயித்து அவரவர்கள் தெரிந்துகொண்டதைச் சொல்லுகிறார்கள். அதெல்லாம் உண்மையே. (உண்மையில் தத்துவங்களென்பதே இல்லை.) இல்லாதவைகளை எவ்வளவென்று தான் சொல்லக்கூடாது. கானலைப் பார்த்து ஜலமென்று சொல்பவன் சொற்ப ஜலமென்று நினைத்தாலும், மிக்க ஜலமென்றும் நினைத்தாலும் அதனால் என்ன வித்தியாசம்? (ஒன்றுமில்லை) ஆனதால் மாயையால் இல்லாதவைகள் இருப்பதாகத் தோன்றுவதால் அவரவர்கள் தங்கள் புத்திக்குத் தக்கபடி சொல்லுகிறார்கள். ஆனதால் நான் சொல்வதே உண்மை. ஒவ்வொருவருடைய அந்தக்கரண விருத்திகளாகப் பரிணமத்தை அடைந்திருக்கும் என்னுடைய சக்திகளே இம்மாதிரியான விவாதத்திற்குக் காரணங்களாகின்றன. அவைகளைக் கடப்பது மிகவும்

கஷ்டம். மேற்காட்டிய அந்தக்கரண விருத்திகளின் சம்பந்தத்தால் பேதமுண்டாகிறது. சமம், தமம் இவைகள் சேர்ந்தால் பேத மற்றுப்போகும். அதன்பின் விவாதம் நசிக்கும். தத்துவங்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருப்பதால் (அனுப்பிரவேசம்) அவைகளைச் சொற்பமென்றும் அதிகமென்றும் சொல்லுகிறவர்களுடைய புத்திக்குத் தக்கவாறு சொல்லுகிறார்கள். காரணமாகிய தத்துவத்தில் காரிய தத்துவங்களும், காரிய தத்துவத்தில் காரண தத்துவங்களும் பிரவேசித்திருக்கின்றன. (மண்ணில் குடம்போல் காரண தத்துவங்களில் காரியங்கள் சூட்சுமரூபமாகவும், குடத்தில் மண்போல் காரியத்தில் காரணம் அனுகதமாகவும் இருக்கின்றன என்று கருத்து.) ஆனதால் தத்துவங்களின் காரண தத்துவங்கள் இவை, காரிய தத்துவங்கள் இவை என்பதையும், அவைகள் இவ்வளவென்பதையும் சொல்லும் வாதிகளுடைய வார்த்தையை உண்மையென்றே நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். அவை எல்லாவற்றிற்கும் யுக்தி ஏற்படலாம். புருஷனுக்கு அவித்தை அனாதியாக ஏற்பட்டிருப்பதால் அவனுக்கு ஆத்மஞானம் சுயமாய் உண்டாகிறதில்லை, ஆனதால் அவித்தையுள்ள புருஷனுக்கு சர்வக்ஞனாகிய பரமாத்மா ஞானத்தைக் கொடுப்பவராகிறார். (ஆனதால் பரமாத்மாவையும் சேர்த்து இருபத்தாறு தத்துவங்கள் என்று கருத்து.) புருஷன், ஈசுவரன் இவர்களுக்கு இயற்கையில் பேதமில்லை. அவர்களுக்குப் பேதத்தைக் கற்பிப்பது வீணனதேயாம். ஞானமென்பது சத்துவ குணத்தின் காரியமானதால் பிரகிருதியின் குணமேயாம். (இருபத்தைந்து தத்துவங்கள் காட்டப்பட்டன.) குணங்களுடைய ஸாம்யாவஸ்தையே பிரகிருதி எனப்படுகிறது. பரிபாலனம், சிருஷ்டி, சங்காரம் இவைகளுக்கு முறையே காரணங்களான சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய குணங்

கள் பிரகிருதியின் விசேஷங்களே யொழிய ஆத்மாவி னுடையதல்ல. ஞானம் சத்துவ குணத்தின் காரியம். கர்மம் ரஜோ குணத்தின் காரியம். அஞ்ஞானம் தமோ குணத்தின் காரியம். (ஆனதால் ஞானம் முதலியவை களும் பிரகிருதியின் குணங்களேயாம்.) குணங்களுடைய குறைவிற்குக் காரணமாக இருப்பது எதுவோ, அதுவே கால மெனப்படுகிறது. சூத்திராத்மாவாகிய மகத் தத்துவமே சுபாவமெனப்படுகிறது. [ஆனதால் காலமும், சுபாவங்களும் முன் காட்டிய இரண்டு பட்சங்க ளடங்கியவை என்று கருத்து.] மேலும் புருஷன், பிர கிருதி, மகத் தத்துவம், அகங்காரம், ஆகாயம், வாயு, தேஜஸ், ஜலம், பூமி ஆகிய ஒன்பது தத்துவங்களென்று என்னுல் முந்தி சொல்லப்பட்டது. காது, துவக், (தோல்) கண், மூக்கு, நாக்கு என்ற ஐந்து ஞானேந்திரியங் களும், வாக்கு, கை, கால், பாயு, உபஸ்தம் என்ற ஐந்து கர்மேந்திரியங்களும், மனது ஆகிய பதினொரு தத்துவங் களென்றும் சொல்லப்பட்டது. சப்தம், ஸ்பரிசம், ரஸம், கந்தம், ரூபம் ஆகிய ஐந்து விஷயங்களும் ஐந்து தத்து வங்களென்று சொல்லப்பட்டன. நடை, மல மூத்திரங் களை விடுவது, பேசுவது, வேலை செய்வது இவைகள் கர்மேந்திரியங்களுடைய காரியங்களானதால் வேறு தத்துவங்களல்ல.

18—29. சிருஷ்டியின் ஆரம்ப காலத்தில் பிரகிருதி யானது காரியம், காரணம் இவைகளுடைய சுரூபமாக இருந்து சத்துவம் முதலிய குணங்களைக்கொண்டு சிருஷ் டிக்கப்படும் வஸ்துக்களாக இருக்கும் அவஸ்தைகளைத் தரிக்கிறது. (ஐந்து மகா பூதங்கள், பதினொரு இந்திரியங் கள் ஆகிய பதினாறும் காரியங்களெனப்படுகின்றன. ஐந்து பூத மாத்திரைகள், அகங்காரம், மகத் தத்துவம் ஆகிய ஏழும் காரணங்களெனப்படுகின்றன.) புருஷன்

பரிணமத்தை அடையாமல் பார்த்துக்கொண்டு மாத்திரம் இருக்கிருன். (பரிணமத்தை அடையும் பிரகிருதியைக் காட்டிலும் அதனை அடையாத புருஷன் வேறு என்று காட்டப்பட்டது.) பிரகிருதியினிடமிருந்து உண்டான மகத் தத்துவம் முதலியவைகள் விகாரத்தை அடைந்து, புருஷனுடைய சங்கற்பத்தால் சக்தியை அடைந்து ஒன்ருடொன்று சேர்ந்து பிரகிருதியின் ஆச்சிரயத்தால் அண்டத்தை உண்டுபண்ணுகின்றன. ஆகாயம் முதலிய ஐந்து பூதங்கள் ஜீவன், ஆத்மா ஆகிய ஏழு தத்துவங்களென்று சிலருடைய அபிப்பிராயம். அவைகளிலிருந்து சரீரம், இந்திரியங்கள், பிராணன் இவைகள் உண்டாகின்றன. இவைகளுக்குள் ஒன்றை விட்டு ஒன்று பிரிந்து இருக்கிறதில்லை. தத்துவங்கள் ஆறு என்று சொல்லுபவருடைய மதத்தில் ஐந்து பூதங்கள், பரமாத்மா ஆகிய ஆறு தத்துவங்கள். தம்மிடமிருந்து உண்டான அவைகளைக்கொண்டு இந்த உலகத்தைச் சிருஷ்டித்து அதில் பிரவேசித்தார். தத்துவங்கள் நான்கு என்று சொல்பவர்களுடைய மதத்தில் பூமி, ஒலி, ஜலம், ஆத்மா ஆகிய நான்கு தத்துவங்கள் என்று கண்டுகொள்க. பூமி முதலியவைகள் ஆத்மாவினிடமிருந்து உண்டானவைகள். காரியத்திற்கு உற்பத்தியே யொழிய, காரணத்திற்கு உற்பத்தியில்லை. தத்துவங்கள் பதினென்று என்கிற மதத்தில் ஆகாயம் முதலிய ஐந்து பூதங்கள், இந்திரியங்கள் ஐந்து, ஆத்மா ஆகிய தத்துவங்கள் பதினுறு. பதினேழு தத்துவங்கள் என்ற மதத்தில் ஐந்து பூதங்கள், ஐந்து தன்மாத்திரைகள், ஐந்து இந்திரியங்கள், மனது, ஆத்மா என்று பதினேழு தத்துவங்கள். பதினுறு தத்துவங்களென்ற மதத்தில் மனத்தை ஆத்மாவாக வைத்துக்கொண்டு கணக்கிடப்பட்டிருக்கிறது. பதின்மூன்று தத்துவங்கள்

என்ற மதத்தில் ஐந்து பூதங்கள், ஐந்து இந்திரியங்கள், மனது, ஜீவாத்மா, பரமாத்மா ஆகிய பதின்மூன்று தத்துவங்கள். இம்மாதிரி ரிஷிகள் தத்துவங்களைப் பலவகையாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். (பிரகிருதி, புருஷன் இவர்களுக்குள்ள பேதத்தைக் காண்பிக்கிறதற்காக என்பது கருத்து.) மேற்காட்டிய எல்லா மதங்களும் நியாயமானவைகளே. எல்லா மதத்திற்கும் யுக்திகள் இருக்கின்றன. வித்துவான்களுக்கு எவைதான் அழகானவை அல்ல'' என்று சொன்னார்.

27—29. அதனைக் கேட்ட உத்தவர் பகவானை நோக்கி, ''ஓ கிருஷ்ணா! பிரகிருதி ஜடமானதாலும், புருஷன் ஜடத்தன்மை இல்லாதவனானதாலும் இவ்விருவர்களும விலட்சணர்கள் என்பது உண்மையே. ஆனாலும் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமலிருப்பதால் அவர்களுக்குப் பேதமிருப்பதாகத் தெரியவில்லை. பிரகிருதியின் காரியமாகிய சரீரத்தில் ஆத்மா காணப்படுகிறார். ஆத்மாவினிடத்தில் பிரகிருதி காணப்படுகிறது. ஆனதால் இவ்விருவர்களுக்கும் பேதம் இருக்கிறதென்பதை எப்படித் தெரிந்துகொள்ள முடியும்? இந்த என்னுடைய சம்சயத்தை யுக்தி பொருந்திய வார்த்தைகளால் நிவாத்திக்கவேண்டும். உம்முடைய அனுக்கிரகத்தால் பிராணிகளுக்கு ஞானமுண்டாகிறது. உம்முடைய மாயையால் அஞ்ஞானம் ஏற்படுகிறது. ஆனதால் உம்முடைய மாயையின் சக்தி உமக்குத் தெரியுமே யல்லாமல் பிறருக்குத் தெரியாது'' என்று கேட்டுக்கொண்டார்.

30—35. அதனைக் கேட்ட பகவான் உத்தவரை நோக்கி, ''ஓ புருஷர்களுள் சிறந்தவரே! பிரகிருதி, புருஷன் இவ்விருவர்களும் மிகவும் பேதமுள்ளவர்களே. பலவகையான விகாரங்களுள்ள சரீரம் முதலியவை குணங்களின் சேர்க்கையால் உண்டுபண்ணப்பட்டன.

என்னுடைய மாயை முக்குண சுரூபமாக இருந்து பேதத்தையும், பேத புத்தியையும் பலவகையாகக் குணங்களைக் கொண்டு உண்டுபண்ணுகிறது. பேதம் அனேக வகையானலும் ஸ்தூலமாக ஆத்யாத்மம், அதிதெய்வதம், அதிபூதம் என்று மூன்று வகையாக இருக்கிறது. பார்வை இந்திரியமே அத்யாத்மம். அந்த நேத்திர கோளத்தில் பிரவேசித்த சூரிய தேஜஸில் அதிதெய்வதம் எனப்படுகிறது. அந்த இரண்டும் ஒன்றை ஒன்று ஆசிரயித்திருக்கிறது. ரூபம் என்பது அதிபூதம் எனப்படுகிறது. இம்மூன்றும் ஒன்றை ஒன்று ஆசிரயித்தனவே. (பார்வை இந்திரியத்தால் ரூபம் கிரகிப்படுகிறது. அதனல் இந்திரியம் இருப்பதாயும், அதற்கு அதிதேவதை ஒன்று இருப்பதாயும் அறியப்படுகிறது. விகாரத்தை அடைவது, பலவகையாக இருப்பது, மற்றொன்றை அபேட்சிப்பது ஆகிய இவைகள் பிரகிருதியினிடத்தில் இருக்கின்றன என்று கருத்து.) மேற்காட்டிய மூன்று விதமான விகாரங்களுக்கும் ஆத்மா காரணமாக இருக்கிறர். அவர் தாமாகப் பிரகாசிப்பவர்; விகாரமற்றவர். (ஆனதால் பிரகிருதிக்கும் புருஷனுக்கும் மிகுந்த பேதமிருக்கிறது என்று காட்டப்பட்டது.) பார்வை இந்திரியத்தில் அத்யாத்மம் முதலிய மூன்று பேதங்கள் காட்டப்பட்டதுபோல் சர்மம், காது, நாக்கு, மூக்கு ஆகிய இந்திரியங்களிலும் சித்தத்திலும் மேற்கண்ட பேதங்கள் இருக்கின்றன. (தோலில், ஸ்பர்சம், வாயு என்றும், காதில் சிரவணம், சப்தம், திக்கு என்றும் நாக்கில் ஜிஹ்வா, ரஸம், வருணன் என்றும், மூக்கில் நாசிகா, கந்தம், அசுவினீ தேவதைகள் என்றும், சித்தத்தில் சித்தம், அறியக்கூடியது, வாசுதேவரென்றும், மனம், நினைக்கக்கூடியது, சந்திரன் என்றும், புத்தி, நிச்சயிக்கக்கூடியது, பிரம்மா என்றும், அகங்காரம், அகங்காரப்படக்கூடியது, ருத்திரன் என்

றும் மூன்று பேதங்கள்.) வைகாரிகம், தாமஸம், இந்திரியம் என்று மூன்று வகையான அகங்காரம் மோகத்திற்கு ஏதுவாக இருக்கிறது. அந்த அகங்காரத்திற்கு மகத் தத்துவம் காரணமாம். அதற்குப் பிரதானமே காரணம். அப்படிப்பட்ட மோகமானது ஆத்மாவின் உண்மையை அறியாததால் உண்டாகிறது. அதனாலேயே ஆத்மா இருக்கிறார், இல்லை என்ற வாதமும் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இந்த அகங்காரம் உண்மையில் இல்லாததானாலும் என்னுடைய சுரூபத்தை அறியாமல் வெளி விவகாரிகளாக இருப்பவர்களுக்கு அந்த அகங்காரம் கெடுதியை உண்டுபண்ணுகிறது" என்று சொன்னார்.

36–37. அதனைக் கேட்ட உத்தவர் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "ஓ பிரபுவே! உம்முடைய உண்மையை அறியாமல் இருக்கும் மூடர்கள் தங்களுடைய கர்மங்களைக் கொண்டு பலவகையான தேகத்தை அடைவதும் விட்டு விடுவதுமாக எப்படி எப்படி சம்ஸாரத்தை அடைகிறார்கள்? ஓ கோவிந்த! ஆத்மாவின் உண்மையை அறியாதவர்களால் அறிய முடியாத இந்த விஷயத்தை எனக்குச் சொல்லவேண்டும். நித்தியனான ஆத்மாவிற்கு ஜனன மரணங்களும், எங்கும் இருப்பவனாகிய ஆத்மாவிற்குச் சரீரத்தை விடுவது, சரீரத்தில் பிரவேசிப்பது முதலியவை எப்படிப் பொருந்துமென்பதையும் தெரிந்து கொண்டவர்கள் பெரும்பாலும் உலகத்திலில்லை. எல்லோரும் உம்முடைய மாயையால் மோகித்திருக்கிறார்கள்" என்று கேட்டார்.

38—60. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் உத்தவரை நோக்கி, "கர்ம மயமாகிய மனமானது ஐந்து இந்திரியங்களுடன் ஒரு தேகத்திலிருந்து மற்றொரு தேகத்திற்குச் செல்லுகிறது. அதைக் காட்டிலும் வேறாக

இருக்கும் ஆத்மா (அகங்காரத்தால்) அந்த மனத்தை அனுசரிக்கிறன். காமத்திற்கு அதீனமான மனம் நேரில் பார்க்கப்பட்டவையும், கேட்கப்பட்டவையுமான விஷயங்களைத் தியானஞ் செய்கிறது. அதனால் புதிதான விஷயங்களில் அபிநிவேசத்தை அடைந்து முந்திய விஷயங்களை மறந்துவிடுகிறது. கர்மாதீனமாகக் கிடைத்த சரீரத்தில் விசேஷ அபிநிவேசத்தை அடைந்து முந்திய சரீரத்தில் அகங்காரமற்று, அதனை மிகவும் மனது மறந்துவிடுகிறது. இப்படி முந்திய சரீரத்தை மனம் மறந்துவிடுவதே மரணமெனப்படுகிறது (தேகம்போல் மனம் நசிக்கிறதில்லை என்று கருத்து.) புதிதான சரீரத்தைச் சகல பிரகாரத்தாலும் அபிமானித்துத் தானென்று நினைப்பதே ஜனனமெனப்படுகிறது. மேற்காட்டிய மரண ஜனனங்களுக்குச் சொப்பன மனோரதங்களே உதாரணங்களாகின்றன. சொப்பனத்திலும் மனோரதத்திலும் முந்திய சரீரம் முதலியவைகளை மறந்து முந்தியே சித்தமாக இருக்கும் சரீரத்தை அபூர்வமென்று நினைக்கிறன். ஆனதால் அத்யாத்மம் முதலியவை மூவகையான பேதம் எல்லா இந்திரியங்களுக்கும் ஆசிரயமான மனத்தால் உண்டு பண்ணப்பட்டது. அந்தப் பேதம் ஆத்மாவிடத்தில் தோன்றுகிறதே யொழிய உண்மையிலில்லை. இப்படிப்பட்ட ஆத்மா உள் வெளி இந்தப்பேதங்களுக்குக் காரணமாக இருக்கிறது. (வெளியிலிருக்கும் விஷயங்களையும் உள்ளிருக்கும் சுகங்களையும் அனுபவிக்கிறனென்று கருத்து.) ஜீவன் சொப்பனத்தில் இல்லாதவையான சரீரங்களைப் பார்த்துக்கொண்டு பலவகையாகத் தோன்றுகிறனல்லவா ? ஒவ்வொரு க்ஷணத்திலும் சரீரங்கள் உண்டாகின்றன; நசிக்கின்றன. அதற்குக் காலம் காரணமாக இருக்கிறது. அந்தக் காலம் சூட்சுமமானதால்

மூடர்களுக்கு இப்படிச் சரீரம் உண்டாவதும், நசிக்கிறது மாக இருப்பது தெரியவில்லை. தீபச்சுவாலைக்குப் பரிணா மத்தாலும், ஆற்று வெள்ளத்திற்கு நடையாலும், மரங் களின் பழங்களுக்கு ரூபம் முதலியவைகளாலும் அவ ஸ்தா விசேஷங்கள் இருப்பதாக எப்படித் தெரிந்து கொள்ளுகிறோமோ, அப்படி சகலப் பிராணிகளுக்கும் வயோவஸ்தை முதலியவை ஏற்பட்டிருக்கின்றன. (உலகம் ஒவ்வொரு க்ஷணத்திலும் உண்டாவதும், நசிப் பதுமாக இருக்கிறது. அவஸ்தா பேதமுள்ளதாக இருப் பதால், தீபச்சுவாலை முதலியவைகள் போல என்று அனு மானத்தால் சித்திக்கிறது). தீபச்சுவாலை ஒவ்வொரு நிமி ஷத்திலும் வேறானதாலும் மிக்க சாம்யத்தால் அதுவே இது என்று தோற்றுகிறது. ஆற்றில் நீர் போய்க்கொண்டிருக்கையில் புதிது புதிதாக ஜலம் வந்து கொண்டிருந்தாலும் அதே ஜலமென்று தோன்றுகிறது. அதுபோலவே சரீரம் ஒவ்வொரு நிமிஷத்திலும் வேறாக இருக்கிறது. ஆனாலும் அதுவே இது என்று தோன்று கிறது. அப்படி நினைப்பதும், சொல்லுவதும் பொய் யானதேயாம். அவிவேகிகளின் ஆயுளும் வீணானதே யாம். மகாதேஜஸின் அம்சமான அக்கினி, கல்பம் வரை யில் நாசமில்லாததானாலும் கட்டையின் சம்பந்தத்தால் உண்டாவதுபோலும், கட்டை இல்லாவிட்டால் நசிக் கிறதுபோலும் எப்படித் தோன்றுகிறதோ, அப்படி மூட னாலும் உண்மையில் ஆத்மா உற்பத்தியற்றவனான தால் கர்ம வசத்தால் ஜனித்தவன்போலும் மரித்தவன் போலும் தோன்றுகிறான். அது மயக்கமேயாம். நிஷே கம் (மாதாவின் கர்ப்பத்தில் பிரவேசிப்பது), அதில் விருத்தி அடைவதாகிய கர்ப்பம், ஜனனம், பால்யம் (ஐந்து வயது வரையில்), கௌமாரம் (பதினாறு வயது வரையில்), யௌவனம் (நாற்பது வயது வரையில்), மத்திய

வயது (அறுபது வயது வரையில்), ஜரை (கிழத்தன்மை), மரணம் ஆகிய ஒன்பது அவஸ்தைகள் சரீரத்தைச் சார்ந்தவை. சரீரத்தின் சம்பந்தங்களும், மனோரத மயங்களுமான மேற்காட்டிய பலவகையான அவஸ்தைகளைப் பிரகிருதியின் சம்பந்தத்தால் ஒருவன் அனுபவிக்கிறான்; மற்றொருவன் விட்டுவிடுகிறான். (பகவானுடைய அனுக்கிரகமுள்ளவன் விட்டுவிடுகிறான். பிரகிருதியின் சுரூபத்தை அறியாதவன் மேற்கண்ட அவஸ்தைகளை அடைகிறான். சரீர தர்மங்களான அவஸ்தைகள் சாட்சியாக இருப்பவனுக்கில்லை என்று தாத்பரியம்.) பிதாவின் சரீரம் நசிப்பதையும், புத்திரனுக்குச் சரீரமுண்டாவதையும் பார்க்கிறோமல்லவா? அதனைக்கொண்டு தன்னுடைய சரீரத்திற்கும் உற்பத்தி நாசமிருக்கின்றன என்று அனுமானிக்கவேண்டும். சரீரத்தின் தர்மங்களான ஜனன மரணங்கள், அவைகளைப் பார்ப்பவனாகிய ஆத்மாவிற்கு இல்லை என்று தெரிந்துகொள்ளவேண்டும். மரம் விதையிலிருந்து உண்டாகிறது; நாளடைவில் நசிக்கிறது. இவைகளைப் புருஷன் பார்த்திருக்கிறான். அப்படிப்பட்ட புருஷன் அந்த ஜனன மரணங்களை அடைவானா? (அடைகிறதில்லை.) மரத்தைக் காட்டிலும் விலட்சணனாகவே இருக்கிறான். அதுபோலச் சரீரத்தின் தர்மங்களான ஜனன மரணங்களைப் பார்த்துக் கொண்டிருக்கும் புருஷன் சரீரத்தைக் காட்டிலும் வேறானவன். ஜனன மரணங்கள் அற்றவன்; மேற்காட்டிய வண்ணம் ஆத்மா பிரகிருதி விலட்சணனென்று தெரிந்துகொள்ளவேண்டும். அப்படித் தெரிந்துகொள்ளாத மூடன் விஷயங்களை உண்மையானவை என்று நினைத்து, அவைகளில் அபிநிவேசத்தை அடைந்து சம்சாரத்தை அடைகிறான். சத்துவ குணம் அதிகமாக இருந்தால் மகரிஷிகளாகவும் தேவர்களாகவும்; ரஜோ

குணம் அதிகமாக இருந்தால் அசுரர்களாகவும் மனிதர்களாகவும், தமோ குணம் அதிகமாக இருந்தால் பூதங்களாகவும் பசு பட்சிகளாவும் கர்மவசத்தால் ஜனிக்கிறான். நர்த்தனஞ் செய்பவர்களைப் பார்த்துத் தானும் எப்படி நர்த்தனஞ் செய்கிறானோ, கானஞ் செய்பவர்களைப் பார்த்துத் தானும் தாளம் போட்டுக்கொண்டு எப்படி கானஞ் செய்கிறானோ அப்படி புத்தியின் குணங்களைப் பார்த்திருக்கும் புருஷன் அவசனாக அவைகளை அனுசரிக்கிறான். (பிரபஞ்சத்தின் தர்மம் சாட்சியான ஆத்மாவிடத்தில் தோன்றுகிறது என்று தாத்பரியம்.) மேலும், உபாதி தர்மங்கள் உபாதி சம்பந்தமுள்ளவனிடத்தில் தோற்றுகின்றன. ஆற்றின் கரையிலிருக்கும் மரங்கள் ஜலத்தில் பிரதிபலிக்கும்பொழுது ஜலம் அசைந்தால் மரங்கள் அசைவதுபோல எப்படித் தோன்றுகின்றனவோ, தோஷமுள்ள கண்ணுக்குப் பூமி சுற்றுவதுபோல் எப்படித் தோன்றுகிறதோ, விஷயங்களைக் கிரகிக்கும் மனத்தால் எப்படி விஷயானுபவங்கள் ஏற்படுகின்றனவோ, அப்படி சம்ஸாரம் மித்தியையானதேயாம். சம்சாரமானது உண்மையிலில்லாததானாலும் சம்சாரம் நிவர்த்தியாகிறதில்லை. சொப்பனத்தில் கண்ட விஷயங்கள் எப்படிப் பொய்யானவையோ, அப்படியே விஷயங்களைத் தியானஞ் செய்யும் புருஷனுக்கு விஷயங்கள் உண்மை போலத் தோன்றுகின்றன. ஆனதால் ஓ உத்தவ! விஷயங்கள் ஆத்மாவைச் சார்ந்தவையல்ல; தோற்றமே யொழிய வேறில்லை; இது மயக்கமேயாம். அசத்தான இந்திரியங்களால் விஷயங்களை நீர் அனுபவிக்கவேண்டாம். (விஷயங்களை அனுபவிப்பதற்காக முயலவேண்டாம் என்று கருத்து.) பிறரால் நிந்திக்கப்பட்டாலும், அவமதிக்கப்பட்டாலும், ஏமாற்றப்பட்டாலும், அருவருக்கப்பட்டாலும், அடிக்கப்பட்டாலும், தடுக்கப்

பட்டாலும், விருத்திக்குக் கெடுதல் நேர்ந்தாலும், எச்சில் துப்பப்பட்டாலும், மூத்திரத்தால் நனைக்கப் பட்டாலும், ஈசுவரத் தியானத்திற்கு இடையூறு நேர்ந்தாலும், எவ்வளவு கஷ்டம் நேர்ந்தாலும் மனம் விகாரத்தை அடையாமல் தைரியத்துடன் ஆத்மாவைக் காப்பாற்றவேண்டும். அவனே க்ஷேமத்தை விரும்பியவனாவான்" என்றார்.)

61—62. அதனைக் கேட்ட உத்தவர் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "பேசுந் திறமையுள்ளவர்களுக்குள் சிறந்தவரே! பிறரால் செய்யப்படும் அவமானம் முதலியவைகளைப் பொறுத்திருப்பது மிகவும் சிரமமான காரியம். பிரகிருதி மிக்க பலமுள்ளது; ஆனதால் வித்துவான்களாலும் சகித்திருக்க முடியாது. உம்முடைய தர்மங்களில் நோக்க முள்ளவர்களும், உம்முடைய பாதங்களை ஆசிரயித்தவர்களும், சாந்தர்களுமான பக்தர்களைத் தவிர யாரால் மேற் கண்டபடி இருக்க முடியும்? ஆனதால் உம்மால் சொல்லப் பட்டதை நன்றாய் நான் தெரிந்துகொள்ளும்படி சொல்லவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

## அத்தியாயம் 23

### பிட்சு கீதை

பாகவதர்களுக்குள் சிறந்தவரான உத்தவரால் இம் மாதிரி கேட்கப்பட்ட பகவான் அவருடைய கேள்வியைப் பற்றிச் சிலாகித்து, "ஓ பிருகஸ்பதியின் சிஷ்யராகிய உத்தவ! துஷ்டர்களுடைய கெட்ட வார்த்தையால் கலங்கிய மனத்தைச் சமாதானஞ் செய்துகொள்ள எவனால்தான் முடியும்? அசத்துக்களுடைய கடுஞ்சொற்களால் துன்பத்தை அடைவதுபோல் பாணங்களால்

அடிக்கப்பட்டவன் துன்பத்தை அடையமாட்டான். ஒரு பிட்சு (சன்னியாசி) பிறரால் அவமதிக்கப்பட்டபொழுது தன்னுடைய முந்திய கர்மங்களின் பயனை நினைத்து எதனைச் சொன்னாரோ, அந்த மிக்க புண்ணியகரமான இதிஹாசத்தை இந்த விஷயத்தில் உதாரணமாகச் சொல்லுகிறேன்; சாவதானமாகக் கேளும். அவந்தி தேசத்தில் ஒரு பிராம்மணன் இருந்தான். அவன் மிக்க பணக்காரன். கிருஷி, வியாபாரம் ஆகிய இவைகளால் ஜீவிப்பவன்; கதர்யன்; (எவன் உலோபத்தால் தன்னையும், தர்ம காரியத்தையும் புத்திரர்களையும், களத்திரத்தையும், தேவர்களையும், அதிதிகளையும் பீடிக்கிறானோ அவன் கதர்யன் எனப்படுகிறான்.) மிக்க காமி; மிகவும் லுப்தன்; மிகுந்த கோப சுபாவமுள்ளவன்; ஞாதிகள், அதிதிகள் முதலியவர்களை அவன் வாக்கினால்கூடப் பூஜிக்கவில்லை. இப்படி ஒருவகையான புருஷார்த்தத்தையும் அடையாமல், தானும் போகங்களை அனுபவியாமலிருந்தான். இப்படி துஷ்ட சுபாவமுள்ளவனும், கதர்யனுமான அவனிடத்தில் புத்திரன், பந்துக்கள், களத்திரம், பெண்கள், வேலைக்காரர்கள் ஆகிய இவர்கள் பிரியப்படாமல் அவனுடைய நடையால் துக்கித்து அவனுக்கு இதத்தைச் செய்யவில்லை. இம்மாதிரி பணத்தைச் சேர்த்துவைத்துக்கொண்டு இரண்டு லோகத்தின் சுகத்தையும் இழந்து, தர்மம் காமம் இவைகளற்றவனாக இருந்ததால் அவனிடத்தில் பஞ்ச யக்ஞ தேவதைகள் கோபித்துக்கொண்டனர். அவர்களை அவமதித்ததால் புண்ணியம் குறைந்தது; அதனால் மிகவும் சிரமப்பட்டான்; சம்பாதித்த பொருளும் நசித்தது. அவனுடைய பணத்தில் சில பாகத்தை அவனுடைய ஞாதிகள் பிடுங்கிக்கொண்டார்கள்; சில பாகத்தைத் திருடர்கள் அபகரித்தார்கள்; மற்றும் சில பாகம் வீட்டில் நெருப்புப் பிடித்து நஷ்டமாயிற்று; இன்னும் சில பாகம் பூமி

யில் புதைத்துவைத்துக் காணாமற்போயிற்று; சில பாகம் அரசனால் அபகரிக்கப்பட்டது. இப்படிப் பலவகையாக அவனுடைய பணம் நஷ்டமாயிற்று. அதனால் அவன் தர்மம், காமம் இவைகளற்றவனானான். எல்லாப் பந்துக்களும் அவனை உபேட்சித்தார்கள். பணமில்லாமல் பந்துக்களால் அவமதிக்கப்பெற்று, கண்ணீரைப் பெருக்கித் துக்கித்தான். அப்பொழுது அவனுக்கு நிர்வேதம் (வைராக்கியம்) உண்டாயிற்று. அப்பொழுது அந்தப் பிராம்மணன், "என்னுடைய ஆத்மாவை வீணில் கஷ்டப்படுத்தினேன். எவன் பணத்திலேயே நோக்கம் உள்ளவனாக இருக்கிறானோ, அவனுக்குத் தர்மமாவது காமமாவது கிடைக்கிறதில்லை. கதர்யனுக்கு(உலோபிக்கு) பணமிருந்தால் பெரும்பாலும் அது அவனுக்குச் சுகத்தைக் கொடுக்கிறதில்லை; இவ்வுலகத்தில் ஆத்மாவுக்குச் சிரமத்தைக் கொடுக்கிறது; பரலோகத்தில் நரகத்தைக் கொடுக்கிறது. மிக்க உத்தமமான கீர்த்தியுள்ளவனானாலும், மேலான உத்தம குணங்கள் உள்ளவனானாலும் அவனிடத்தில் கொஞ்சமாவது உலோப குணம் இருந்தால் அது நற்குணங்கள் எல்லாவற்றையும் கெடுத்துவிடும். நல்ல அழகுள்ள சரீரத்தில் சொற்பமான குஷ்டமிருந்தால் அவ்வளவு அழகையும் குறைத்துவிடுகிறதல்லவா? பணத்தைச் சம்பாதிப்பது கஷ்டமான காரியம். கிடைத்த பணத்தை விருத்திசெய்வதிலும், அதனைக் காப்பாற்றுவதிலும் மிகவும் சிரமமிருக்கிறது. அந்தப் பணம் கெட்டுப் போனாலும், அனுபவித்துச் செலவானாலும் மனக்கவலையும், பயமும், மயக்கமும் உண்டாகின்றன. மேலும், திருடுவது, இம்சை, பொய் சொல்லுவது, டம்பம், காமம், கோபம் ஆகிய ஆறு அனர்த்தங்கள் பணம் சம்பாதிக்க முயற்சிப்பதால் உண்டாகின்றன. கர்வம், மதம், பேதம், விரோதம், விசுவாசமில்லாமலிருப்பது சண்டை செய்வது,

ஸ்திரீ, சொக்கட்டான் விளையாட்டு, மத்யம் ஆகிய ஒன்பது அனர்த்தங்களும் பணம் கிடைத்த பின்பு உண்டாகின்றன. மேற்காட்டிய பதினைந்து அனர்த்தங்கள் பணத்தாலேயே உண்டாகின்றன. பணமென்பது அனர்த்தங்களை உண்டுபண்ணக்கூடியதாகையால் க்ஷேமத்தையடைய விரும்பியவர்கள், பணத்தில் ஆசை வைக்கக் கூடாது. (தகப்பனானாலும், சகோதரர்களானாலும், களத்திரமானாலும், மித்திரர்களானாலும் பணத்திற்காகச் சினேகத்தை விட்டுவார்கள்) ஒரு காகணியைக் கொடுத்தால் சத்துருக்களும் மிக்க சினேகமுள்ளவர்களாவார்கள். (இருபது சோகிக்குக் காகணி என்று பெயர்; இது ஒரு நாணயம்.) ஆனதால் சொற்ப தனத்திற்காக மனிதர்கள் சினேகத்தை விட்டு விசேஷ கோபங்கொண்டு ஒருவருக்கொருவர் சண்டை செய்து உயிரை விடுகிறார்கள். இந்த மனித ஜன்மம் தேவர்களாலும் விரும்பக் கூடியது. அப்படிப்பட்ட ஜன்மத்தை அடைந்து, அதிலும் சிறந்த பிராம்மண ஜன்மத்தை அடைந்தும் பணத்தில் ஆசைகொண்டு எவன் தனக்கு இதத்தைச் செய்துகொள்ளவில்லையோ, அவன் நரகத்தை அடைகிறான். சுவர்க்கம், மோட்சம் ஆகிய இவைகளுக்கு சாதனமான இந்த மனித சரீரத்தை அடைந்தும் அனர்த்தத்தைக் கொடுக்கக்கூடிய பணத்தில் ஆசைப்படலாமா? (ஆசை வைக்கக்கூடாது என்று கருத்து.) மனிதனுடைய பணத்தில் தேவர்கள், மகரிஷிகள், பிதிருக்கள், ஞாதிகள், பந்துக்கள் ஆகிய இவர்கள் பாகமுள்ளவர்கள். அவர்களுக்கும் பிரித்துக்கொடாமல் பணத்தைச் சேர்த்துவைத்துக்கொள்பவன் தாழ்ந்த கதியை அடைவான். ஆனதால் நான் பணத்தில் ஆசைகொண்டு ஆத்மாவிற்கு இதமானதைச் செய்துகொள்ளாமல் வீணில் காலத்தைக் கழித்தேன்; பணமும் நாசமாயிற்று;

முதிர்ந்த வயதை அடைந்தேன்; சரீரத்தில் பலம் குறைந்தது; புண்ணியத்தைச் சம்பாதிப்பதற்குச் சாதனங்களான மேற்காட்டியவை இல்லாத நான் கிழத்தன்மையுடன் எதனைச் செய்வேன்? பணத்தால் அனர்த்தமுண்டாகிறது என்பதை நன்றாகத் தெரிந்துகொண்டவனாயும் வீணில் பணத்தைச் சம்பாதிக்க முயலுகிறான். ஆனதால் ஒருவனுடைய மாயையால் இந்த ஜனங்கள் மோகித்திருக்கவேண்டும். பணத்தால் என்ன பிரயோசனம்? பணத்தைக் கொடுப்பவைகளால் என்ன பயன்? காமங்களால் என்ன பயன்? மதத்தால் என்ன பிரயோசனம்? மிருத்யுவினால் பிடிக்கப்பட்டவனுக்கு ஜனனத்தைக் கொடுக்கக்கூடிய கர்மங்களால் தான் என்ன பிரயோசனம்? சகல தேவ சுரூபியாகிய பகவான் என்னிடத்தில் மிக்க பிரியமுள்ளவராக இருக்கிறாரென்பது நிச்சயம். அவருடைய அனுக்கிரகத்தால் எனக்கு இம்மாதிரியான அவஸ்தை நேர்ந்தது; சம்ஸாரத்திலிருந்து ஆத்மாவைத் தாண்டுவிக்கும் ஓடமான நிர்வேதமு முண்டாயிற்று. ஆனதால் எனக்கு ஆயுள் பாக்கியிருக்குமானால் தவஞ் செய்து சரீரத்தை இளைக்கச் செய்கிறேன். புருஷார்த்தத்தில் சாவதானனாகி ஆத்மலாபத்திலேயே சந்தோஷமுள்ளவனாக இருக்கிறேன். அப்பொழுது மூவுலகங்களுக்கும் அதிபதிகளான தேவர்கள் என்னை அனுக்கிரகிக்கட்டும். எனக்கு ஆயுள் சொற்பமாக இருந்தாலும் அதற்குள் புருஷார்த்தத்தை அடைவேன். கட்வாங்கர் என்பவர் ஒரு முகூர்த்தத்தில் பிரம்மபதத்தை அடையவில்லையா?" என்று யோசித்து அந்தப் பிராம்மணர் அகங்காரம் முதலியவைகளை விட்டு, சாந்தமனமுள்ளவராகிச் சன்னியாசஞ் செய்துகொண்டார். மேலும், அவர் ஒன்றிலும் ஆசையில்லாதவராகி, பிட்சைக்

காகக் கிராமத்திலும் நகரத்திலும் பிரவேசித்தார். அவருடைய மகிமை பிறருக்குத் தெரியாது. அழுக்குள்ள சரீரமுள்ளவரும், வயது முதிர்ந்தவருமான அந்தச் சன்னியாசியைக் கண்ட துஷ்டர்கள் கர்வங்கொண்டு பலவகையாக அவரை அவமதித்தார்கள். சிலர் அவருடைய திரிதண்டத்தைப் பிடுங்கிக்கொண்டார்கள். சிலர் கமண்டலுவையும், சிலர் ஆசனத்தையும், சிலர் ஜபமாலிகையையும், சிலர் கந்தை மரவுரி இவைகளையும் பிடுங்கிக்கொண்டார்கள். பின்னுமவர்கள் அவைகளைத் திருப்பிக்கொடுத்து, திரும்பவும் பிடுங்கிக்கொண்டார்கள். மேலுமந்த அவதூதர் பிட்சையெடுத்த அன்னத்தை ஆற்றங்கரையில் வைத்துப் புசிக்கும்பொழுது அதில் பாபிகளான ஜனங்கள் மூத்திரம்பெய்தார்கள்; எச்சிலைத் துப்பினார்கள். மௌனியாக விருக்கும் அவரைப் பேசச்செய்யவேண்டிச் சிலர் அடித்தார்கள். மற்றுஞ் சிலர் அதட்டினார்கள். சிலர் "இவன் திருடன்" என்று கயிற்றால் கட்டினார்கள். இன்னுஞ் சிலர் "இவன் மிக்க பணமுள்ளவனாக இருந்தான்; இப்பொழுது தரித்திரனானான்; பந்துக்கள் இவனை உபேட்சித்தார்கள். ஆனதால் தர்மசிந்தனையுள்ளவன்போல் வேடங்கொண்டு இந்த விருத்தியை அடைந்திருக்கிறான். ஆனதால் வஞ்சகன். அட, இவன் சிறந்த மலைபோல் மிக்க பலமுள்ளவன்; கொக்குப்போல நல்ல நிச்சயத்துடன் மௌனமாகக் காரியத்தைச் சாதித்துக்கொள்ளுகிறான்" என்று பரிகாசஞ் செய்து நிந்தித்தார்கள்.

இப்படி அந்தப் பிராம்மணனை விளையாட்டுக் கருவிகளான மரப் பொம்மைகளைப்போல் கட்டி உபத்திரவித்தார்கள். கிளிகளைக் கூட்டில் அடைப்பதுபோல் காராகிருஹத்தில் அடைத்தார்கள். இப்படி அந்தப் பிராமணன் துஷ்டர்களால் செய்யப்பட்ட பௌதிகமான தாபத்தை

யும், ஜ்வரம் முதலியவைகளால் நேர்ந்த தைஹிகமான தாபத்தையும், குளிர் முதலிய தெய்விகமான தாபத்தையும் எல்லாவற்றையும் சகித்திருந்தார். ஒவ்வொரு ஆபத்து வரும்பொழுது, "இது கர்மாதீனமாக வந்திருக்கிறது; இது நம்மால் அநுபவிக்கக்கூடியது" என்று நினைத்திருந்தார். அப்பொழுதும் அந்தப் பிராம்மணன் தம்முடைய் தர்மத்தை விடாமல் ஸத்வ குணத்தாலுண்டாகிய தைரியத்துடன் பின்வருமாறு சொல்லத் தொடங்கினார்: (எப்பொழுதும் பகவானைத் தியானஞ்செய்து அதனால் மனது, பிராணன், இந்திரியம், அதன் வியாபாரங்கள் இவைகளை ஜபிப்பது ஸாத்விகமான தைரியம்—பகவத்கீதை) எப்படியெனில், இந்த ஜனமானது சுகதுக்கங்களுக்குக் காரணமல்ல. (இவர்கள் நம்மை உபத்திரவிக்கிறார்களென்றாவது, சுகத்தையுண்டுபண்ணுகிறார்களென்றாவது நினைக்கக்கூடாது.) தேவதை, ஆத்மா, கிரஹங்கள், கர்மம், காலம் இவைகளும் காரணங்களல்ல. மனமே காரண மென்று சொல்லுகிறார்கள். அதுவே ஸம்ஸார சக்கரத்தை யுண்டுபண்ணுகிறது. (சக்கரம்போல் சுழன்று கொண்டிருப்பதால் ஸம்ஸாரம் சக்கரமென்று சொல்லப்பட்டது.) மனமானது குணங்களுடைய விருத்திகளை யுண்டுபண்ணுகிறது. அதனால் ஸாத்விக கர்மங்களும், ராஜஸ கர்மங்களும், தாமஸ கர்மங்களும், அவைகளால் தேவ சரீரம், மனித சரீரம், தாவர சரீரம் முதலியவைகளையும் புருஷன் அடைகிறான். விஷயங்களில் ஆசைப்படுகிற மனத்துடன் அதற்கு நியந்தாவாக இருந்தாலும் பரமாத்மா அதன் விருத்திகளில் சம்பந்தப்படாமல் வித்தியா சக்தியுள்ளவராகி ஜீவனுக்குத் தோழராகச் சாட்சியாக விருக்கிறார். இந்த ஜீவன் ஸம்ஸாரத்தைச் கொடுக்கும். அந்த மனத்தைத் தானென்று நினைத்து,

அதன் விருத்திகளை யடைந்து, விஷயங்களை அநுபவித்துக்கொண்டு ஸம்ஸாரத்தை அடைகிறான். தானம், வர்ணாசிரமங்களுக்குரிய தர்மத்தை அநுஷ்டிப்பது, நியமம், யமம், சாஸ்திரங்களைப் படிப்பது, கர்மங்கள், நல்ல விரதங்கள் (ஏகாதசியில் உபவாஸமிருப்பது முதலியவை) ஆகிய எல்லாம் மனத்தை அடக்குவதற்காகவே ஏற்பட்டிருக்கின்றன. மனத்தை அடக்குவதே மேலான சமாதி எனப்படுகிறது. தானம் முதலிய மேற்காட்டிய தர்மங்களால் எவனுடைய மனது அடக்கப்படுகிறதோ, அவன் செய்யக்கூடிய காரியமொன்றுமில்லை. எவனுக்கு மனம் கட்டுப்படவில்லையோ, விஷயங்களில் செல்லுகிறதோ, அவன் செய்யும் தானம் முதலியவையால் என்ன பயன்? சகல இந்திரியங்களும், அவைகளின் அதிஷ்டான தேவதைகளும் மனதிற்கு சுவாதீனர்களாக இருக்கிறார்கள்; மனம் ஒருவருக்கும் வசப்படுகிறதில்லை. அந்த மனம் பலசாலிகளைக் காட்டிலும் பலமுள்ளது. அதனை வசப்படுத்திக்கொள்பவன் தேவர்களுக்கும் தேவனாவான். மனம் ஜயிக்கமுடியாத சத்துரு. சகிக்கமுடியாத ஆசை, துவேஷம் முதலியவை அதற்கு வேகங்களாக இருக்கின்றன; மர்மத்தைப் பிளக்கக்கூடியது. அப்படிப்பட்ட மனத்தை ஜயிக்காமல் சிலர் பிறருடன் வீணான சண்டை செய்து சிலரைச் சத்துருக்களாகவும், சிலரை மித்திரர்களாகவும், சிலரை உதாசீனர்களாகவும் நினைக்கிறார்கள். அவர்கள் மூடர்களேயாம். இந்தச் சரீரம் மனத்தாலேயே ஏற்பட்டது. அப்படிப்பட்ட சரீரத்தை நானென்றும், புத்திரன் முதலியவர்களுடைய தேகத்தை என்னுடையதென்றும் நினைத்து, அதனால் சுரூப ஞானமற்றவர்களாகி மனிதர்கள "நான், இவன்" என்ற மயக்கத்தை அடைந்து ஸம்ஸாரத்தில் சுற்றுகிறார்கள். சுக துக்கங்களுக்கு இந்த ஜனம காரணமல்ல. காரணமாக விருக்கு

மானால் ஆத்மாவிற்கு அதனாலென்ன? ஆத்மா அஹர்த்த மானதால் அடிப்பது முதலியவைகளில் கர்த்தாவாக வாவது, கர்மமாகவாவது ஆகிறதில்லை. சரீரங்கள் ஒன்றுக்கொன்று அடித்துக்கொள்ளுகின்றனவே யொழிய வேறில்லை. தன்னுடைய நாக்கைத் தன்னுடைய பற்களால் கடித்துக்கொண்டால் யாரிடம் கோபிக்கிறது? அல்லது தேவதைகளே சுக துக்கங்களுக்குக் காரண மென்றாலும் அப்பொழுதும் ஆத்மாவிற்கு என்ன கெடுதி? விகாரிகளான தேவதைகளுக்கு அந்த சுக துக்கங்களே யொழிய, விகாரமற்றவனும் அகங்காரமற்றவனுமான ஆத்மாவிற் கொன்றுமில்லை. ஒரு அவயவத்தால் மற்றொரு அவயவம் அடிக்கப்படுமானால் அவைகளின் அதிஷ்டான தேவதைகளுக்கு அந்தத் துக்கமேயொழிய அவைகளைவிட வேறான புருஷனுடையதாகுமா? அவய வம் மற்றொரு அவயவத்தை அடித்தால் யாரைக் கோபித்துக்கொள்ளக்கூடும்? சுக துக்கங்களுக்கு ஆத்மாவே காரணமாகிறதென்று சொல்வோமானால், அது ஆத்மாவின் சுபாவமானதால் மற்றவையால் என்ன? எதனிடம் கோபிக்கிறது? ஆத்மாவைக் காட்டி லும் வேறான வஸ்து ஒன்றுமில்லை. இருக்குமானால் இருப்பதாகத் தோன்றும். அப்படித் தோன்றுவது பொய்யானதே. ஆனதால் சுகமென்பதும் துக்க மென்பதுமில்லை. ஜன்ம லக்கினத்திற்கு எட்டாவது, பன்னிரண்டாவது முதலிய ராசிகளிலிருக்கும் கிரஹங் களால் துக்கமுண்டாகிறது. சுப ஸ்தானங்களிலிருக்கும் கிரஹங்களால் சுகமுண்டாகிறது. ஆனதால் பிராணி களுக்கு நேரும் சுக துக்கங்களுக்கு நவக்கிரஹங்கள் காரணங்களென்று சொல்வோமானால் உற்பத்தியற்ற வனான ஆத்மாவிற்கு என்ன கெடுதி? உற்பத்தியுள்ள சரீரங்களுக்கு அந்த சுக துக்கங்களே யொழிய

வேறில்லை. ஆகாயத்திலிருக்கும் கிரஹங்களுக்குக் கிரஹங்களால் பீடையென்று சோதிட சாஸ்திர மறிந்தவர்கள் சொல்லுகிருர்கள். அந்த கிரஹங்களைக் காட்டிலும் புருஷன் வேறு. அந்தக் காலத்தில் ஜனித்த சரீரங்களைக் காட்டிலும் புருஷன் வேருக இருக்கிருன். ஆனதால் யாரிடத்தில் கோபித்துக்கொள்ளுகிறது? சுக துக்கங்களுக்குக் கர்மம் காரணமென்று சொல்வோமாஞல் அதனுலும் ஆத்மாவிற்கு ஒன்றுமில்லை. ஒரே வஸ்து ஜடமாகவும் ஜடமில்லாததாகவுமிருந்தால்தான் அப்படிச் சொல்வது பொருந்தும். அப்படிப்பட்ட வஸ்து ஒன்றுமில்லை. ஆனதால் கர்மமென்பதே இல்லை. சரீரம் ஜடமானது. இந்தப் புருஷன் சுத்த ஞான சுரூபியாக இருக்கிருன். சுக துக்கங்களுக்கு மூலமான கர்மமே இல்லை. அப்படியிருக்க, யாரிடத்தில் கோபித்துக்கொள்ள முடியும்? காலமே சுக துக்கங்களுக்குக் காரணம் என்று சொல்வதாஞலும், ஆத்மா கால சுரூபியானதால் ஆத்மாவிற்கு என்ன கெடுதி? [தன்ஞல் தனக்குக் கெடுதி நேரிடுகிறதில்லை என்று கருத்து.] அக்கினியின் அம்சமாகிய தீக்கு அக்கினியால் தாபம் ஏற்படுகிறதில்லை அல்லவா? பனியின் குளிர்ச்சியால் அதன் தாளிக்கு உபத்திரவம் ஏற்படுகிறதில்லை யல்லவா? உண்மையில் காலத்தைக் காட்டிலும் ஆத்மா விலட்சணன்; ஆனதாலும் சுக துக்கங்களில்லை. பிரகிருதியைக் காட்டிலும் விலட்சணரான ஆத்மாவிற்கு எந்தக் காலத்திலும் ஒன்ருலும் சுக துக்கங்களின் சம்பந்த மேற்படுகிறதில்லை. உண்மையிலில்லாததாஞலும் சம்ஸாரத்தைக் காண்பிப்பதான அகங்காரத்தின் சம்பந்தத்தால் ஏற்படுகிறது என்று தெரிந்துகொண்டவன் பிராணிகளிடத்தில் பயப்படமாட்டான். ஆனதால் முந்திய மகரிஷிகளான பெரியோர்களால் அனுஷ்டிக்கப்பெற்ற ஆத்மநிஷ்

டையை நான் அடைந்து, கரையற்ற சம்ஸாரத்தைத் தாண்டுகிறேன். அப்படிப்பட்ட ஆத்மநிஷ்டையும் பகவானுடைய பாத சேவையால் தான் கிடைக்கவேண்டும்" என்று (அந்த அவதூதர் கையிலிருந்த பொருள் போன பின் நிர்வேதத்தை அடைந்து, சன்னியாஸஞ் செய்து கொண்டு பூமியில் சஞ்சரித்து துஷ்டர்களால் அவமதிக்கப் பட்டும் மனங்கலங்காமல் "புருஷனுக்குச் சுகத்தையும் துக்கத்தையும் மற்றொருவன் உண்டுபண்ணுகிறானென்பதில்லை. அப்படி நினைப்பது மயக்கமேயாம். இவன் சத்துரு, இவன் மித்திரன், இவன் உதாசீனன் என்று நினைப்பது சம்ஸாரம்; அஞ்ஞானத்தால் ஏற்பட்டது" என்று சொன்னார்.)

61—62. ஓ உத்தவ! (ஆனதால் எப்படியாவது புத்தியால் மனத்தை அடக்கிக்கொள்ளும். என்னிடத்தில் மனத்தைச் செலுத்தினால்தான் மனத்தை ஜயிக்க முடியும். இதுவே யோகத்தின் சங்கிரகம். (மனத்தை அடக்கமுடியாவிடினும் இந்தக் கீதையைக் கேட்டு மனனஞ்செய்தால் அதனாலேயே அந்தப் பயன் கிடைக்கும்.)) இந்த அவதூத கீதையை மிக்க சிரத்தையுடன் எவன் கேட்கிறானோ, மனத்தில் தரிக்கிறானோ, பிறருக்குச் சொல்லுகிறானோ, அவன் சுகதுக்கங்களால் அவமதிக்கப்படமாட்டான். (சுகதுக்கங்களை ஜயிப்பானென்று கருத்து.)

# அத்தியாயம் 24

## ஸாங்கிய யோகம்

ஓ உத்தவ! முன்னோர்களான கபிலர் முதலியவர்களால் நிச்சயிக்கப்பெற்ற ஸாங்கியத்தைச் சொல்லுகிறேன். அதனைத் தெரிந்துகொண்டால் பேதபுத்தியாலேற்படும் சுகதுக்கம் முதலியவை நிவர்த்தியடையும். பிரளய காலத்திலும் விவேகிகளான புருஷர்களிருந்த கிருதயுகத்திலும், பிரபஞ்சம், சாட்சியாகவிருப்பவன் ஆகிய எல்லாம் பேதமற்ற பிரம்மத்தினிடமே இலயித்திருந்தது. பேதமற்ற பரப்பிரம்மமானது மாயையின் விலாசத்தால் வாக்கு, மனம் இவைகளுக்கு விஷயமாகவும் இருவகையாகவு மாயிற்று. அதில் ஒன்று பிரகிருதி. அது காரியம், காரணம் இவைகளின் சுரூபமாக விருக்கிறது. மற்றொன்று ஜீவன். அவனே புருஷனெனப்படுகிறான். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்கள் ஜீவர்களை அநுக்கிரகிக்க விரும்பிய காலசுரூபியான என்னால் பார்க்கப்பட்ட பிரகிருதியிடமிருந்து வெளிப்பட்டன. அந்தக் குணங்களிலிருந்து எல்லாவற்றிற்கும் ஆதாரமாக விருப்பதால் ஸூத்திரமென்ற மகத் தத்துவ முண்டாயிற்று; (கிரியா சக்தியுள்ள விகாரம் ஸூத்திரமென்றும, ஞானசக்தியுள்ள விகாரம் மகானென்றும் சொல்லப்படுகிறது.) அந்த மகத்தத்வம் விகாரத்தை யடையும்பொழுது அதனிடமிருந்து அகங்கார முண்டாயிற்று. அது தேகம் முதலியவைகளை ஆத்மாவென்று நினைக்கும் மயக்கத்தை யுண்டு பண்ணுகிறது. அந்த அகங்காரம், வைகாரிகம், ராஜஸம், தாமஸம் என்று மூவகையுள்ளது. தன்மாத்திரைகள் (சப்தம் முதலியவை), இந்திரியங்கள், மனம் ஆகிய இவைகளுக்குக் காரணமாயுள்ளது. தான் ஜடமா

ளுலும் சித்ரபரஸ வியாப்தமானதால் இரண்டு சுரூபமாகவு மிருக்கிறது. சப்தம் முதலிய தன்மாத்திரைகளான தாமஸாகங்காரத்திலிருந்து ஆகாசம் முதலிய மஹாபூதங்களுண்டாயின. (அவைகள் ஆவரண சுபாவமுள்ளவை.) ராஜஸாகங்காரத்திலிருந்து இந்திரியங்களுண்டாயின. (அவைகள் பிரவிருத்தி சுபாவமுள்ளவையானதால் அவை ராஜஸங்கள்.) சாத்விகமான அகங்காரத்திலிருந்து இந்திரியங்களுடைய அதிஷ்டான தேவதைகள் பதினொன்றும் உண்டாயின. பின்பு மகத்தத்வம் முதலியவைகளில் நான் பிரவேசித்ததால் அவைகள் ஒன்றோடொன்று சேர்ந்து காரியத்தைப் படைக்கும் சக்தியை அடைந்தன. பின்பு எனக்கு முக்கிய ஸ்தானமாகிய அண்டத்தைப் படைத்தன. (அண்டாபிமானியாக இருப்பவனுக்கு வைராஜனென்று பெயர்.) அந்த அண்டம் வெகுகாலம் ஜலத்திலிருந்தது. அதில் நான் நாராயணனாக ஆவிர்ப்பவித்தேன். அப்பொழுது என்னுடைய கொப்பூழிலிருந்து உலகங்களுக்குக் காரணமாயுள்ள ஒரு தாமரைமலர் வெளிப்பட்டது. அதில் நான்கு முகங்களுள்ள பிரம்மதேவனாக நான் வெளிப்பட்டேன். அந்தப் பிரம்மா தவஞ்செய்து என்னுடைய அநுக்கிரகத்தை அடைந்து, ரஜோ குணத்தால் எல்லா உலகங்களையும் உலகபாலர்களையும் படைத்தார். பூலோகம், புவர்லோகம், சுவர்லோகமென்ற மூவுலகங்களையும் சிருஷ்டித்தார். சுவர் லோகம் தேவர்களுக்கு வாசஸ்தானமாயிற்று. புவர்லோகமென்ற அந்தரிட்சம் பூதங்கள் வசிக்குமிடமாயிற்று. பூலோகம் மனிதர்களுக்கு வாசஸ்தலமாயிற்று. பிருகு முதலிய சித்தர்களுக்கு மூவுலகங்களுக்கு வெளியிலுள்ள மகர்லோகம், ஜனலோகம், சத்யலோகம இவைகள் வாசஸ்தலங்களாயின. பூமிக்குக் கீழாக இருக்கும் அதலம் முதலிய லோகங்கள் அசுரர்

களுக்கும் நாகங்களுக்கும் வாசஸ்தலங்களாயின. முக்குணங்களாலேற்படும் சகல கர்மங்களுடைய கதிகள் மூவுலகத்திற்குட்பட்டன. யோகம், தபஸ், சன்யாசம் இவைகளை அநுஷ்டிக்கும் ஸித்தர்கள் மகர்லோகம், ஜனலோகம், தபோலோகம், ஸத்தியலோகம் ஆகிய இவைகளில் சஞ்சரிப்பார்கள். என்னிடத்தில் பக்தி செய்பவர்கள் வைகுண்டத்தில் சஞ்சரிப்பார்கள். நான் காலசுரூபியாக இருந்து அவரவர்களுடைய கர்மத்திற்குத் தக்கவாறு பயனைக் கொடுத்துவருகிறேன். அப்படிப்பட்ட என்னால் கர்மத்தின் பயனை அநுபவிக்கும் இந்த ஜகத் ஸத்தியலோகம் வரையில் சம்ஸாரத்திலிருந்து மேலே கிளம்புகிறது (உத்தம கதியை அடைகிறது). பின்னும் ஸ்தாவர சரீரம் வரையிலுள்ள தாழ்ந்த ஜன்மத்தையுமடைந்து சம்ஸார ஸமுத்திரத்தில் அழுந்தியுமிருக்கிறது. மேலும் அணுவாக இருப்பது, மகத்தாக இருப்பது, இளைத்திருப்பது, பருத்திருப்பது முதலியவையெல்லாம் பிரகிருதி, புருஷன் ஆகிய இவர்களுடைய சேர்க்கையாலுண்டாகின்றன. (காரியத்தில் காரணம் வியாபித்திருக்கிறதென்று காட்டப்பட்டது.) எந்தக் காரியத்திற்கு எது ஆதியாகவும், அந்தமாகவும் இருக்கிறதோ அதுவே மத்யாவஸ்தையுமென்பது திண்ணம். குடத்திற்கு ஆதியான அவஸ்தையும், கடைசியான அவஸ்தையும் மண்ணாகவே இருக்கிறதானதால் மத்தியமமான அவஸ்தையும் மண்ணானதேயாம். காரியமாக விருந்த நிலைமை விவகாரத்திற்காக ஏற்பட்டதேயொழிய நித்தியமில்லை. தங்கத்தால் செய்யப்பட்ட வளை முதலிய ஆபரணங்களுக்கு ஆதியும், அந்தமும் சுவர்ணமேயாம். ஆனதால் மத்யமமான அவஸ்தையும் சுவர்ணமேயாம். எதனை ஆசிரயித்து முந்திய காரணம் மற்றொன்றை உண்டுபண்ணுகிறதோ, எது முன்னும் பின்னும் இருக்கிறதோ அதே ஸத்ய

மென்று சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. (பரம காரணமாகிய ஆத்மா ஸத்யனென்று சொல்வதற்காக வென்று கருத்து.) இந்த ஜகத்திற்கு உபாதான காரண மான பிரகிருதியும், ஜகத்திற்கு அதிஷ்டாதாவாகிய புருஷனும், குணங்களுடைய விகாரத்திற்குக் காரணமாகிய காலமும், பிரம்மசுரூபியான என்னுடைய சுரூபமேயொழிய வேறானவையல்ல. பிரகிருதி பரமாத்மாவின் சக்தி. அதற்கு ஆதாரமாக விருப்பது புருஷன், காலம், இம் மூன்றும் பிரம்மமாகிய என்னைவிட வேறானவையல்ல வென்று கருத்து.) பரமேசுவரனுடைய சங்கற்பமுண்டா கும்பொழுது பிரளய முண்டாகிறது. அது வரையில் சிருஷ்டி முன்பின்னாக (பிதா, புத்திரனென்று) தொடர்ந் திருக்கிறது. அது ஜீவனுடைய உபயோகத்திற்காக ஏற்பட்டது. காலசுரூபியான என்னால் வியாபிக்கப் பெற்றதும், சிருஷ்டி, பிரளயங்களுள்ளதுமான பிரம்மாண் டம் உலகங்களுடன் ஒவ்வொரு நாளும் நசிக்கிறது. (ஐந்து மகாபூதங்களை ஒன்றோடொன்று சேர்ந்து அண்டத்தைச் சிருஷ்டித்தன. அதில் பலவகையான சிருஷ்டிகளும், பிரளயங்களும் ஒவ்வொரு நாட்களிலும் ஏற்படுகின்றன. பின்பு அந்த அந்தப் பூதங்களும் வெவ்வேறாகப் பிரிந்தால் அண்டம் நசிக்கிறதென்று லயம் காட்டப்பட்டது.) அன்னத்தால் விருத்தியான சரீரம் அந்த அன்னத்தில் இலயிக்கிறது. (நூறு வர்ஷங்களாக மழைபெய்யாமல் அன்னமில்லாமல் இருக்கும்பொழுது சரீரமும் அதில் இலயத்தை அடைகிறதென்று கருத்து.) அந்த அன்னமானது விதையாக மாத்திரம் இருக்கிறது. அந்த விதை பூமியில் இலயிக்கிறது. (விதைத்தால் முளைக்கிறதில்லை யென்று கருத்து.) பூமி கந்தத்தில் இலயிக்கிறது. (பிரளயகால சூரியனாலும் சங்கர்ஷண னுடைய முகத்திலுண்டான அக்னியாலும் தபிக்கப்

பெற்று, பூமி சூட்சுமரூபமான கந்த தன்மாத்திரையாக ஆகிறதென்று தாத்பரியம்.) அந்தக் கந்தம் ஜலத்திலும், அந்த ஜலம் தன்னுடைய குணமாகிய ரஸத்திலும், அந்த ரஸம் ஜ்யோதிஸிலும், ஜ்யோதிஸ் தன்னுடைய குணமான ரூபத்திலும், அந்த ரூபம் வாயுவிடத்திலும், அந்த வாயு ஸ்பரிசத்திலும், அந்த ஸ்பரிசம் ஆகாயத்திலும், அந்த ஆகாயம் சப்தத்திலும் இலயிக்கின்றன. (தாமஸாகங்காரத்தின் காரியத்திற்கு, சப்தம் வரையில் இலயத்தை நிரூபித்து ராஜஸாகங்கார காரியங்களின் இலயத்தை நிரூபிக்கிறார்.) இந்திரியங்கள் தங்கள் தங்கள் அதிஷ்டான தேவதைகளில் இலயிக்கின்றன. (ராஜஸாகங்காரத்தில் இந்திரியங்கள் இலயிக்கின்றனவென்றே தாத்பரியம்.) அந்தத் தேவதைகள் அவைகளுக்கு நியந்தாவாகிய வைகாரிக மனத்தில் இலயிக்கின்றன. (மனமும் தேவதைகளுடன் வைகாரிகாகங்காரத்தில் இலயிக்கிறதென்று கருத்து.) தாமஸாகங்கார காரியமான சப்தம் தாமஸாகங்காரத்தில் இலயிக்கிறது. சகல ஜகத்தையும் மோகிக்கச்செய்யும் மூவகையான அகங்காரமும் மகத்தத்துவத்தில் இலயிக்கிறது. (ஜடாம்சத்தை விட்டு ஞான சக்தி, கிரியா சக்தி இவைகளுள்ளதாக மாத்திரமாகிறது.) ஞானக்கிரியா சக்தியுள்ளதானதால் மிக்க குணமுள்ள அந்த மகத்தத்வம் தனக்குக் காரணங்களான முக்குணங்களில் இலயிக்கிறது. அந்தக் குணங்கள் பிரகிருதியில் இலயிக்கின்றன. அந்தப் பிரகிருதி வியாபாரமற்ற காலத்தில் இலயிக்கிறது. அந்தக் காலம் மாயையைப் பிரவர்த்திக்கச்செய்பவரான மகாபுருஷனிடத்தில் இலயிக்கிறது. (உலகத்தைப் படைப்பவரான மகாபுருஷனுக்குக் காலம் உபகரணமாக இருப்பதால் சிருஷ்டிக்கக்கூடியதாகவு மிருக்கிறது. அதனால்தான் அவருடைய சுரூபமாகவிருக்கிறது. இந்த

விஷயம் 7-ம் ஸ்கந்தத்திலும், 10-ம் ஸ்கந்தத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.) அந்த மகாபுருஷனாகிய ஜீவன் ஆத்மாவிடத்தில் இலயிக்கிறான். (பிரகிருதியின் சம்பந்த மற்று, தம்முடைய சுரூபமாகவிருக்கிறானென்று கருத்து.) அந்த ஆத்மா தம்மிடத்திலேயே இருக்கிறார். (ஒன்றிலும் இலயிப்பதில்லையென்று கருத்து.) அந்த ஆத்மா உலகத்தின் சிருஷ்டி, பிரளயம் இவைகளுக்கு அதிஷ்டானமாக இருக்கிறார். இம்மாதிரியான உண்மையைத் தெரிந்து கொண்டவனுக்கு பேதஞானத்தாலுண்டாகும் மயக்கமுண்டாகுமா? அப்படி உண்டானாலும் இருதயத்தில் ஸ்திரமாகவிருக்குமா? சூரியன் உதயமான பின்னும் இருளிருக்குமா? காரணம், காரியம் இவைகளை அறிந்தவனாகிய என்னால் உமக்கு சாங்கிய யோகஞ் சொல்லப்பட்டது. இது இருதயத்திலிருக்கும் அகங்காரத்தை நிவர்த்திக்கக்கூடியது. இதைப் பிரதிலோமமாகவும், அநுலோமமாகவும் சொன்னேன்" என்றார்.

---

# அத்தியாயம் 25

## ஸத்வம் முதலிய குணங்களின் விருத்திகள்

1—9. (பிரகிருதி, புருஷன் இவர்களுடைய சுரூபத்தை நன்றாகத் தெரிந்துகொண்டவனானாலும் முக்குணங்களின் விருத்திகளை ஜயிக்காவிடில் சுகதுக்கங்களுடைய சம்பந்தமிருக்கும். ஆனதால் அவைகளை ஜயிக்கும் உபாயத்தை நிரூபிப்பதற்காக முக்குணங்களின் விருத்திகளை நிரூபிக்கிறார்.) ஓ புருஷர்களுக்குள் சிறந்தவராகிய உத்தவ! ஒன்றோடொன்று சேராமல் தனித்திருக்கும் குணங்களில் எந்தக் குணத்தின் சம்பந்தத்தால் புருஷன் எப்படி இருப்பானென்பதைச் சொல்லுகிறேன், தெரிந்துகொள்ளும். வெளியிலிருக்கும் இந்திரியங்கள், மனம் இவைகளை ஜயிப்பது, பொறுமை, விவேகம்,

தனக்குரிய தர்மத்தை அநுஷ்டிப்பது, உண்மை பேசுவது, தயை, முன்பின் ஆலோசிப்பது, கிடைத்ததைக் கொண்டு சந்தோஷிப்பது, செலவழிப்பதில் நோக்கம், வைராக்கியம், ஆஸ்திக புத்தி, கெட்ட காரியத்தைச் செய்வதில் வெட்கம், கொடுப்பது, வணக்கம், ஆத்மாவிடத்திலேயே பிரீதி இவைகள் சத்துவகுணத்தின் வியாபாரங்களாகும். ஆசை, அதற்காகச் செய்யப்படும் வியாபாரம், மதம், ஆசைப்பட்ட வஸ்து கிடைத்தும் சந்தோஷப்படாமலிருப்பது, கர்வம், காமனையால் தேவதைகளைப் பிரார்த்திப்பது, பேதபுத்தி, விஷய போகத்தில் ஆசை, மதத்தால் சண்டை செய்வதில் ஆசைப்படுவது, தோத்திரத்தில் பிரியமுள்ளவனாக இருப்பது, பரிகசிப்பது, தன்னுடைய மகிமையைச் சொல்லிக்கொள்வது, பலத்தால் காரியத்தைச் செய்ய முயற்சிப்பது ஆகிய இவைகள் ரஜோகுணத்தின் விருத்திகளாகின்றன. கோபம், செலவு செய்வதில் நோக்கமில்லாமலிருப்பதாகிய உலோபம், பொய் பேசுவது, (அசாஸ்திரீயமானதைப் பிரமாணம் என்று சொல்வது), பிறருக்குத் துரோகஞ் செய்வது, பிறரை யாசிப்பது, தர்மிஷ்டன்போல அபிநயஞ் செய்வதாகிய டம்பம், சண்டை, சிரமம், சோகம், மோகம், துக்கம், தைன்யம், தூக்கம், இது எனக்குக் கிடைக்குமென்ற ஆசை, பயம், ஜடத்தன்மை ஆகிய இவைகள் தமோகுணத்தின் விருத்திகள். சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களுடைய விருத்திகளைத் தனியே மேற்காட்டியவண்ணம் பெரும்பாலும் வர்ணித்தேன். அவைகளின் சேர்க்கையால் உண்டாகின்றவைகளைச் சொல்லுகிறேன், கேளும். மனம், தன்மாத்திரைகள், இந்திரியங்கள், பிராணன் இவைகள் சேர்ந்து, "நான், என்னுடையது" என்ற அகங்கார முண்டாகிறது. அம்மாதிரியான புத்தி முக்குணங்களுடைய சேர்க்கையா லுண்டாகிறது.

(மனம் முதலியவை சாத்விக ராஜஸ தாமஸங்களான தால் அவைகளுடைய சேர்க்கையா லுண்டாகிறதென்று கருத்து. நான் சாந்தன், எனக்குச் சாந்தியிருக்கிறது; நான் காமமுள்ளவன், எனக்குக் காமமிருக்கிறது; நான் கோபமுள்ளவன், எனக்குக் கோபமிருக்கிறதென்று நினைப்பதால் முக்குணங்களுடைய சேர்க்கையா லுண்டா கிறதென்று தாத்பரியம்.) மேலும் தர்மம், அதர்மம், காமம் இவைகளில் எப்பொழுது நோக்கமுள்ளவனாக இருக்கிறானோ, அப்பொழுது முக்குணங்களுடைய சேர்க் கையே அதற்குக் காரணமாகிறது. இன்னும் சத்துவ குணத்தால் சிரத்தையும், ரஜோ குணத்தால் ஆசையும், தமஸ்ஸால் தனமும் கிடைக்கிறது. பின்னும் புருஷன் பிரவிருத்தி தர்மத்தில் ஆசைப்படுவதும், கிருகஸ்தாசிர மத்தை அடைவதும், அதிலும் ஆசிரம தர்மங்களை யநுஷ் டிப்பதும் குணங்களுடைய சேர்க்கையா லுண்டாகும் விருத்திகளேயாம். மேற்காட்டிய சத்துவ குணத்தின் விருத்திகள் எவனிடத்தில் காணப்படுகின்றனவோ, அவனை சத்துவகுணமுள்ளவனென்றும், காமம் முதலிய வைகளுள்ளவனை ரஜோகுணமுள்ளவனென்றும், கோபம் முதலியவையுள்ளவனை தமோகுணமுள்ளவனென்றும் தெரிந்துகொள்ளவேண்டும்.

10—12. புருஷர்களானாலும் ஸ்திரீகளானாலும் பயனை உத்தேசியாமல் தனக்குரிய கர்மங்களைச் செய்து என்னைப் பூஜிப்பவர்களை சத்துவகுணமுள்ளவர்களென்று தெரிந்து கொள்ளும். எவர்கள் "இது எனக்கு ஈசுவரனுடைய அநுக்கிரகத்தா லுண்டாகட்டும்" என்று தங்களுக்குரிய கர்மங்களை அநுஷ்டித்து என்னை யுபாஸிக்கிறார்களோ, அவர்கள் ரஜோகுணமுள்ளவர்கள். எவர்கள் சத்துருக் களைக் கொல்வது முதலியவைகளையுத்தேசித்து என்னைப் பூஜிக்கிறார்களோ, அவர்கள் தமோகுணமுள்ளவர்கள்.

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் ஜீவனுக்கே யொழிய எனக்கு அவைகளுடைய சம்பந்தமேயில்லை. ஏனென்றால், அவைகள் ஜீவனுடைய உபாதியான சித்தத்தில் பிரகாசிக்கின்றன. அவைகளால் தேகம் முதலியவைகளில் சம்பந்தப்பட்டு ஜீவன் கட்டுப்படுகிறான். (நான் ஒன்றிலும் சம்பந்தப்படாமல் அந்தக் குணங்களுக்கு நியந்தாவாக ஸ்ருஷ்டி முதலியவைகளைச் செய்தாலும் நித்யமுக்தனாக விருக்கிறேன். ஆனதால் எனக்கும் ஜீவனுக்கும் மிக்க பேதமிருக்கிறதென்று தாத்பரியம்.) இதர பதார்த்தத்தைப் பிரகாசிக்கச் செய்வதும், நிர்மலமும், சாந்தமுமான ஸத்வகுணம், எப்பொழுது ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் ஜயிக்குமோ, அப்பொழுது முறையே சுகம், தர்மம், ஞானம் முதலியவை புருஷனுக்கு உண்டாகின்றன. (சமம் தமம் முதலியவைகளும் கிடைக்குமென்று கருத்து.) ஆசையை யுண்டுபண்ணுகிறதும், பேதபுத்தியைக் கொடுப்பதும், பிரவிருத்தி சுபாவமுள்ளதுமான ரஜோகுணம் தமோகுணத்தையும், சத்துவகுணத்தையும் எப்பொழுது ஜயிக்குமோ, அப்பொழுது துக்கம், கர்மம், கீர்த்தி, சம்பத்து ஆகிய இவைகளை அடைவான். (ரஜோகுணம் ஆசைக்குக் காரணமாயிருப்பதால் அது மேலாக இருக்கும்பொழுது கீர்த்தி, சம்பத்து ஆகிய இவைகளில் ஆசைப்படுகிறான். பேதபுத்திக்குக் காரணமாக விருப்பதால் துக்கத்தை அடைகிறான். "இரண்டு என்ற எண்ணத்தால் பயம் நேரும்"— சுருதி. பிரவிருத்தி சுபாவமுள்ளதானதால் கர்மத்தை விரும்புகிறான்.) விவேகத்தை மாற்றக்கூடியதும், சுரூபத்தை மறைக்கக்கூடியதும், சோம்பலை யுண்டுபண்ணக் கூடியதுமான தமோகுணமானது ரஜோகுணத்தையும், ஸத்துவகுணத்தையும் ஜயித்து எப்பொழுது தான் மேலாகவிருக்குமோ அப்பொழுது சோகம், மோகம்,

தூக்கம், இம்சை, ஆசை இவைகளை யடைகிறுன்; (மனதானது விஷயங்களால் கலங்காமல் எப்பொழுது தெளிந்திருக்குமோ, இந்திரியங்கள் அதன் காரியங்களைச் செய்யாமல் எப்பொழுது சும்மாவிருக்குமோ, எப்பொழுது வியாதி முதலிய பயமில்லாமலிருப்பதும், மனத்தினிடத்தில் ஆசையில்லாமலிருப்பதும் ஏற்படுமோ அப்பொழுது ஸத்துவ குணம் விருத்தியாயிருக்கிறதென்று தெரிந்துகொள்ளும். அப்படிப்பட்ட மனமே என்னைத் தெரிந்துகொள்ளுகிறதற்குக் காரணமாகும்.) எப்பொழுது மனமானது பல விஷயங்களில் சென்று கலங்குகிறதோ, புத்தி, இந்திரியங்கள் ஆகிய இவைகளும் விஷயங்களில் செல்லுகின்றனவோ, கர்மேந்திரியங்களுக்கு சுவாதீனப்படவில்லையோ, மனமும் அலைந்துகொண்டிருக்கிறதோ அப்பொழுது ரஜோகுணம் விருத்தி யடைந்திருக்கிறதென்று தெரிந்துகொள்ளும். எப்பொழுது சித்தமானது சூருபமாக ஆகாமல் மறையுமோ, மனமும் லயிக்குமோ, அப்பொழுது தமோகுணம் அதிகமாகவிருக்கிறதென்று தெரிந்துகொள்ளும். ஸத்வ குணம் விருத்தியானல் தேவர்களுக்குப் பலமுண்டாகிறது; ரஜோ குணம் விருத்தியானல் அசுரர்களுக்குப் பலம் விருத்தியாகிறது; தமோகுணம் விருத்தியானல் ராக்ஷஸர்களுக்குப் பலம் உண்டாகிறது. ((நிவர்த்தி சுபாவமுள்ள இந்திரியங்களைத் தேவர்களென்றும், பிரவிருத்தி சுபாவமுள்ள இந்திரியங்களை அசுரர்களென்றும், மோக சுபாவமுள்ள இந்திரியங்களை ராக்ஷஸர்களென்றும் இவ்விடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.) சத்துவகுணத்தால் ஜாக்ரதவஸ்தையும், ரஜோகுணத்தால் சொப்பனமும், தமோகுணத்தால் தூக்கமும் உண்டாகின்றன.) இந்த மூன்று அவஸ்தைகளிலும் தொடர்ந்திருக்கும் ஆத்மாவாகவிருப்பதே துரியா

வஸ்தை யெனப்படுகிறது. பிரம்மலோகம் வரையிலுள்ள ஜனங்கள் ஸத்துவகுணத்தால் உத்தமலோகத்தை அடைகிறார்கள்.) தாவரம் முதலியவைகள் தமோகுணத்தால் தாழ்ந்த ஜன்மத்தை அடைகின்றன. ரஜோகுணத்தால் மனித ஜன்மம் உண்டாகிறது.) ஜீவன் சரீரத்தை விட்டு வெளியில் செல்லும்பொழுது ஸத்துவகுணம் மேலாகவிருந்தால் அவர்கள் சுவர்க்கலோகத்தை யடைவார்கள். மரணகாலத்தில் ரஜோகுணம் அதிகமாகவிருந்தால் பூலோகத்தை (மனுஷ்ய ஜன்மத்தை) அடைவார்கள். தமோகுணம் அதிகமாகவிருந்தால் நரகத்தை (தாவரம் முதலிய ஜன்மத்தை) அடைவார்கள். ஒரு குணமும் விருத்தியடையாமல் நிர்க்குணமாக விருப்பவர்கள் என்னை அடைவார்கள் (உயிரோடிருந்தாலும்). என்னை அடையவேண்டுமென்ற எண்ணத்தால் செய்யப்படும் கர்மமும், அல்லது பயனை யுத்தேசியாமல் அனுஷ்டிக்கும் கர்மமும் ஸாத்விகமாகும்; பயனை யுத்தேசித்துச் செய்யும் கர்மம் ராஜஸமாகும். பிறருடைய இம்சையை உத்தேசித்துச் செய்யப்படும் கர்மம் தாமஸமாகும்.(டம்பம், மாத்ஸரியம், கோபம் இவைகளால் செய்யப்படும் கர்மமும் தாமஸமெனப்படும்.) ஆத்மா, சரீரம் முதலியவைகளைக் காட்டிலும் விலட்சணன் என்று தெரிந்துகொள்வது சாத்விக ஞானமாகும். சரீரம் முதலியவைகளுடைய உண்மையைத் தெரிந்துகொள்வது ராஜஸ மெனப்படும். பிரகிருதிக்கு வசப்பட்டு ஜடனாகவிருப்பது தாமஸமெனப்படும். என்னையே தியானித்துக்கொண்டிருப்பது நிர்க்குண ஞானமெனப்படும். (மேற்காட்டியபடி ஞானம் நாலு வகை) வனத்தில் வசிப்பது சாத்விகமான வாசம்; கிராமத்தில் வசிப்பது ராஜஸ வாசம்; சொக்கட்டான் விளையாடுமிடத்தில் வசிப்பது தாமஸ வாசம்; என்னிடத்திலேயே வசிப்பது நிர்க்குண வாசம். விஷயங்களில்

பற்றுதலில்லாமல் செய்பவன் சாத்விகன்; அபி நிவேசத்துடன் செய்பவன் ராஜஸன்; இதனால் இன்னது கிடைக்குமென்பதை யறியாமல் செய்பவன் தாமஸன்; என்னையே ஆசிரயித்து அகங்காரமற்றிருப்பவன் நிர்க் குணன். ஆத்மாவைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்ற சிரத்தை, சாத்துவிகம்; கர்மத்திலுள்ள சிரத்தை ராஜ ஸம்; அதர்மத்தில் சிரத்தையிருந்தால் அது தாமஸம். என்னைச் சேவிப்பதில் ஏற்படும் சிரத்தை நிர்க்குணம். ஹிதத்தைக் கொடுக்கக்கூடியதும் எளிதில் கிடைத்தது, மான ஆகாரம் சாத்விகமாகும். இந்திரியங்களுக்குப் பிரியமான ஆகாரம் ராஜஸ மெனப்படும். உபத்திரவத் தைக் கொடுக்கக்கூடியதும், அசுத்தமும், எனக்கு நிவே தனம் செய்யப்படாததுமான ஆகாரம் தாமஸமாகும். ஆத்மவிஷயமான சுகம் ராஜஸம். மோகத்தாலும், தைன்யத்தாலும் உண்டாகும் சுகம் தாமஸ மெனப்படு கிறது. மகா வாக்கியத்தின் அர்த்தத்தையறிந்து என்னைத் தெரிந்துகொள்வதாலுண்டான சுகம் நிர்க்குண மெனப் படும். ஆனதால் திரவியம், தேசம், பலம், சுகம், காலம், ஞானம், கர்மம், அவஸ்தை (சொப்பனம் முதலியவை) செய்பவன், சிரத்தை, தேவசரீரம் முதலிய ஆகிருதி, மரணகாலத்திலுள்ள நிலைமை ஆகிய எல்லாம் முக்குணங் களின் சுரூபமாகவே யிருக்கின்றன. மேலும் பார்க்கப் பட்டது, கேட்கப்பட்டது, நினைக்கப்பட்டது ஆகிய எல் லாம் முக்குணங்களேயாம். அவைகள் பிரகிருதி புருஷர் களை ஆசிரயித்திருக்கின்றன. ஆனதால் குணம், கர்மம் இவைகளால் ஸம்ஸாரம் ஏற்படுகிறது. சித்தத்தில் பிரகாசிக்கும் இந்தக் குணங்களை ஜயித்து எவன் பக்தி யோகத்தை அனுஷ்டித்து என்னையே தியானிக்கிறானோ, அவன் மோட்சத்தையடைவதற்குத் தகுதியாக ஆகிறான். இந்த மனுஷ்ய சரீரம் ஞானம் விஞ்ஞானம் இவைகளைக்

கொடுக்கக்கூடியதாகவிருப்பதால் அந்தச் சரீரத்தை யடைந்த விவேகி குணங்களில் ஆசைப்படாமல் என்னை உபாஸிக்கவேண்டும். எப்படியெனில், விஷயங்களில் ஆசைப்படாமல் இந்திரியங்களை ஜயித்து சாத்விக மானவைகளையே உபயோகித்துவந்தால் சத்துவகுணம் விருத்தியாகும்; ரஜஸ், தமஸ் இரண்டும் ஜயிக்கப்படும். பின்பு சாந்தமான புத்தியால் ஒன்றையும் அபேட்சியாமல் சத்துவகுணத்தையும ஜயிக்கவேண்டும். இப்படி குணங்களை விட்ட ஜீவன லிங்கசரீரத்தை விட்டு என்னை அடைவான். இப்படி ஜீவன் லிங்க சரீரம், சித்தத்தில் பிரகாசிக்கும் குணங்கள் இவைகளை விட்டுப் பிரம்மமாகிய என்னை அடைந்து வெளியிலிருக்கும் விஷயசுகத்தையாவது, அவைகளை நினைபபதாலுண்டாகிய அந்தக்கரண சுகத்தையாவது நினைக்கமாட்டான். (மறுபடியும் ஸம்ஸாரத்தை அடையமாட்டானென்று கருத்து.)

## அத்தியாயம் 26

### யோக நிஷ்டை

**1—25.** என்னுடைய சுரூப ஞானத்திற்குக் காரணமான இந்த மனுஷ்ய சரீரத்தை அடைந்து பக்தி யோகத்தைச் செய்துகொண்டிருப்பவன், தன்னிடத்திலேயே நியந்தாவாகவிருப்பவனும், ஆனந்த சுரூபியும் பரமாத்மாவுமாகிய என்னை அடைவான். மேலுமவன் ஞானுப்பியாஸஞ்செய்து ஜீவனுக்கு உபாதியான பிரகிருதியால் விடப்பட்டு மாயாமயங்களான குணங்களை அவஸ்துவாக நினைத்தவனுனதால் அவைகளில் சம்பந்தப்படமாட்டான். ஆனாலும் சிசினம், வயிறு இவைகளைத் திருப்திசெய்துவைப்பதிலேயே நோக்கமுள்ள அஸத்துக்களுடன் ஒருபொழுதும் சேரக்கூடாது. அப்படிச்

சேருவானாகில் குருடனால் வழிகாட்டப்பட்டு அவன் பின் சென்ற குருடன்போல் நரகத்தை யடைவான்.) சக்கரவர்த்தியும் மிகுந்த கீர்த்தியுள்ளவனுமான புரூரவஸ் என்ற அரசன் ஊர்வசியை விட்டுப் பிரிந்து துக்கித்து, பின்னொருகால் குருக்ஷேத்திரத்தில் அவளைக் கண்டு கந்தர்வனால் கொடுக்கப்பட்ட அக்னியால் ஊர்வசி உலகஞ் சென்று அவளை யடைந்து சந்தோஷத்தை யடைந்தார். அப்பொழுது அவருக்கு வைராக்கிய முண்டாயிற்று. அப்பொழுது இம்மாதிரி சொன்னார்: ஊர்வசியைவிட்டுப் பிரிந்த காலத்தில் அந்த அரசன் எப்படியிருந்தாரென்றால், படுக்கையில் தன்னைவிட்டு ஊர்வசி செல்லும்பொழுது அரசன் பைத்தியங்கொண்டவன்போல் வஸ்திரமில்லாமல், "ஊர்வசி! உன்னை நமஸ்கரிக்கிறேன்; உன்னைவிட்டுப் பிரிவதனால் மிகுந்த துக்கத்தையடைகிறேன்; உன்னிடத்திலுள்ள ஆசையால் மழைக்காலத்து இராத்திரிகள் போவதையும் வருவதையும் நான் அறியவில்லை. விஷயபோகங்களை அனுபவித்தும் போதுமென்ற திருப்தி யுண்டாகவில்லை" என்று சொல்லிக்கொண்டு அவளைப் பின்தொடர்ந்தார். அப்படிப்பட்ட அரசன் வைராக்கியம் வந்தபிறகு பின் வருமாறு சொல்லலானார்: எப்படியெனில், காமத்தால் கலங்கிய மனமுள்ள எனக்கு மிகுந்த மோகம் உண்டாயிற்று. ஊர்வசியால் ஆலிங்கனம் செய்து கொள்ளப்பட்டுச் சென்ற காலம் தெரியாமலேயே ஆயுளைக் கழித்தேன். சூரியன் உதயமானதும், சூரியன் அஸ்தமயத்தை யடைந்ததையும் அறியாமல் அநேக வர்ஷங்கள் கழிக்கப்பட்டன. என்னுடைய மோகம் ஆச்சரியப்படக்கூடியது; அந்த மோகத்தால் என்னுடைய ஆத்மாவை நான் சக்கரவர்த்தியானாலும் விளையாட்டு மிருகம்போல் ஸ்திரீக்கு சுவாதீனப்படுத்தினேன்.

மேலும் இராஜ்யம், ஸைன்யம் இவைகளுடன் சக்கரவர்த்தியாயிருக்கும் என்னை மறந்து பைத்தியங்கொண்டவன்போல் வஸ்திரமில்லாமல் அழுதுகொண்டு அவள் பின் சென்றேன். என்னுடைய தேஜஸ், மகிமை முதலியவைகளை விஞ்யின பின் காலால் உதைக்கும் பெண் கழுதையை ஆண் கழுதை தொடருவதுபோல் என்னை விட்டுப்போகும் ஊர்வசியின் பின் சென்றேன். எவர்களுடைய மனம் ஸ்திரீகளால் அபகரிக்கப்படுகிறதோ, அவன் வித்வானாகவிருந்து என்ன பயன்? தபஸ்வியாகவிருந்தும், என்ன பிரயோசனம்? சன்னியாஸியானாலும், ஏகாந்தமான ஸ்தலத்திலிருப்பதாலும் மௌனத்தாலும் என்ன பிரயோசனம்? பின்னும் எருதுபோலவும், கழுதைபோலவும், ஸ்திரீகளால் ஜயிக்கப்பட்டு மூடனாகித் தன்னை பண்டிதனென்று நினைத்துத் தனக்கு அனுகூலம் இன்னதென்று தெரிந்துகொள்ளாமலிருந்த என்னை நிந்திக்கவேண்டும். அநேக வர்ஷ காலம் ஊர்வசியின் அதரபானஞ்செய்தும் எனக்குப் போதுமென்ற திருப்தியுண்டாகவில்லை. அக்னியில் நெய்யை ஆஹுதி செய்தால் அதனால் அக்னி ஜ்வலிக்குமேயொழிய அணையுமா? வியபிசாரிணியான ஊர்வசியால் அபகரிக்கப்பெற்ற என்னுடைய சித்தத்தைத் திருப்புவதற்கு ஆத்மாராமராகிய பகவானைத் தவிர வேறு யாரால் முடியும்? அந்த ஊர்வசி எனக்கு நல்ல புத்தியை யுபதேசித்தாள். அப்படியும் எனக்கு மோகம் நிவர்த்தியடையவில்லை. ஆனதால் இந்த விஷயத்தில் அவள் எனக்கு அபகாரம் செய்தவளல்ல. இந்திரியங்களை ஜயிக்காதவனாகிய நானே எனக்கு அபகாரம் செய்துகொண்டேன். கயிற்றைக் கண்ட ஒரு புருஷன் அதனுடைய சுரூபத்தை அறியாமல் அதனை சர்ப்பமென்று நினைத்து அதனைக் கண்டு பயந்தால் கயிற்றின்மீது தோஷமுண்டா? இந்தச் சரீரமானது

அசுத்த பதார்த்தங்களால் பூர்ணமானது; நாற்ற முள்ளது; அப்படிபபட்டதை வாசனையுள்ளதென்றும், சுத்தமென்றும் நினைத்ததும் அவித்தையா லல்லவா? மேலும் சரீரம் யாருக்குச் சொந்தமென்று விசாரிப்போமாகில் ஒருவருக்கும் சொந்தமென்று சொல்லமுடியாது. இதனை யுண்டுபண்ணின தாய் தந்தைகளுக்குச் சொந்தமா? களத்திரத்திற்குச் சொந்தமா? யஜமானனுக்குச் சொந்தமா? அல்லது அக்னிக்குச் சொந்தமா? நாய் கழுதை இவைகளுக்குச் சொந்தமானதா அல்லது மித்திரர்களுக்குச் சொந்தமானதா? இப்படி ஒருவருடையது என்று சொல்லமுடியாததும், கடைசியில் மிகத் தாழ்ந்த அவஸ்தையுள்ளதும், அசுத்தமானதுமான இந்தச் சரீரத்தில் எவன் ஆசைப்படுவான்? இந்தப் பெண்ணினுடைய முகம் மிக்க அழகுள்ளது, நல்ல மூக்குள்ளது, சிரிப்புள்ளது என்று சொல்லித் தோல், மாமிசம், ரக்தம், நரம்பு, மேதஸ், எலும்பு இவைகளுடைய கூட்டத்தைக் கண்டு சந்தோஷப்படும் மனிதர்களுக்கும் அமேத்தியம் மூத்திரம் இவைகளில் ரமிக்கும் புழுக்களுக்கும் என்ன வித்தியாசம்? ஆனதால் விவேகியாக விருப்பவன் ஸ்திரீகளிடத்திலும் அவர்களிடத்தில் ஆசைப்பட்டவர்களிடத்திலும் ஸங்கஞ்செய்யக்கூடாது. விஷயம், இந்திரியம் இவைகளின் சேர்க்கையால் மனங் கலங்குகிறது. இந்திரியங்களுக்கு விஷயங்களின் சம்பந்தம் ஏற்படாவிட்டால் மனம் கலங்குகிறதில்லை. முந்தி பார்க்கப்படாததும், கேட்கப்படாததுமான வஸ்துக்களில் ஆசை உண்டாகிறதில்லை. இந்திரியங்களை அடக்கினால் மனமும் அடங்கிவிடும். வித்வான்களானாலும் காமம் முதலிய ஆறு சத்துருக்களை ஜயிப்பது அரிது. என்னைப் போன்ற அவிவேகிகளால் ஜயிக்கமுடியுமா? ஆனதால் ஸ்திரீகளுடனும் அவர்களிடத்தில் ஆசைப்பட்டவர்

களுடனும் சகவாஸம் செய்யக்கூடாது" என்று அந்த புரூரவஸ் சொல்லிக்கொண்டு ஊர்வசியின் உலகத்தை விட்டுத் தன்னிடத்தில் நான் இருப்பதாகத் தெரிந்து கொண்டு ஞானத்தால் மோஹத்தை நிவர்த்தித்துச் சாந்தியை அடைந்தார்.

26—35. ஆனதால் புத்தியுள்ளவன் துஷ்டர்களுடன் சேராமல் சாதுக்களுடன் சேரவேண்டும். சாதுக்கள் நல்ல வார்த்தைகளால் மனக்கவலையை நிவர்த்திப்பார்கள். ஒன்றையும் அபேக்ஷிக்காதவர்களும், என்னிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தியவர்களும், மிகவும் சாந்தர்களும், எல்லாவற்றையும் சமமாகப் பார்ப்பவர்களும், என்னுடையதென்ற அகங்காரமற்றவர்களும், சுகதுக்க மில்லாதவர்களுமான புருஷர்களே சாதுக்களெனப்படுவார்கள். அந்த சாதுக்கள் என்னுடைய கதையை எப்பொழுதும் கானஞ் செய்வார்களானதால் அவர்களைச் சேவிப்பவர்கள் பாபமற்றுப் பரிசுத்தர்களாவார்கள். என்னுடைய கதைகளை எவர்கள் கேட்கிறார்களோ, எவர்கள் கானஞ் செய்கிறார்களோ, எவர்கள் ஆதரவுடன் அனுமோதிக்கிறார்களோ, அவர்களுக்குச் சிரத்தையும் என்னிடத்தில் பக்தியும் உண்டாகும். அளவற்ற குணமுள்ளவனும், ஆனந்த சுரூபியும், அனுபவ சுரூபியும், பரப்பிரம்மமுமான என்னிடத்தில் பக்திசெய்யும் சாதுவிற்கு எதுதான் கிடைக்காது? அக்னி பகவானை ஆசிரயித்தவனுக்குக் குளிர் எப்படி நிவர்த்தியடையுமோ, அதுபோல சாதுக்களைச் சேவிப்பவனுக்கு சம்ஸார பயம் நிவர்த்தியாகிறது. ஜலத்தில் மூழ்குகிறவனுக்குக் கெட்டியான கப்பல்போல சம்சார சமுத்திரத்தில் மூழ்கிக் கிளம்புகிற ஜனங்களுக்குப் பிரம்மத்தை யறிந்த சாதுக்கள் க்ஷேமத்தைச் செய்கிறார்கள். பிராணிகளுக்கு அன்னம் எப்படி ஜீவனைக் காப்பாற்றுகிறதோ, உபத்திரவம் அடைந்தவர்களை நான்

எப்படி காப்பாற்றுகிறதோ, மரணமடைந்தவர்களுக்குத் தர்மம் எப்படி சுகத்தைக் கொடுக்கிறதோ, அதுபோல சம்சாரத்தில் பயந்தவர்களுக்கு சாதுக்கள் சரணமாயிருக்கிறார்கள்.) (சூரியன் உதயமானால் ஒரு கண்ணை மாத்திரம் பிரகாசிக்கச் செய்கிறார். சாதுக்கள் அநேக கண்களைக் கொடுக்கிறார்கள்.) (சகுண ஞானம், நிர்க்குண ஞானம்) ஆனதால் சாதுக்களே தேவதைகள்; சாதுக்களே பந்துக்கள்; சாதுக்களே ஆத்மா; சாதுக்களே நான்; புரூரவஸ் என்னும் சக்கரவர்த்தி இம்மாதிரி வைராக்கியத்தை அடைந்து, ஊர்வசியின் உலகத்தில் ஆசையற்று ஆத்மாராமராக இந்தப் பூமியில் சஞ்சரித்தார்.

---

# அத்தியாயம் 27

## கிரியா யோகம்

1—5. உத்தவர் கிருஷ்ணனை நோக்கி, "ஓ பிரபுவே! எந்த பக்தர்கள் எதிலிருந்து எப்படி உம்மைப் பூஜிக்கிறார்கள்? உம்மை ஆராதிப்பதாகிய கிரியா யோகத்தைச் சொல்லும். நாரதர், பகவானாகிய வியாசர், ஆசாரியரான பிருகஸ்பதி ஆகிய இவர்கள் இந்தக் கிரியாயோகமே மனிதர்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியதென்று அடிக்கடி சொல்லுகிறார்கள். தாமரை மலர்போன்ற உம்முடைய முகத்திலிருந்து தெரிந்து கொண்ட கிரியா யோகத்தைப் பிரம்மதேவர் தம்முடைய புத்திரர்களான பிருகு முதலியவர்களுக்கு எப்படி சொன்னாரோ, பகவானாகிய பரமசிவன் பார்வதிக்கு எப்படி சொன்னாரோ, அதனை அப்படி எனக்கு உபதேசியும். இந்தக் கிரியா யோகம் எல்லா ஜாதிகளுக்கும், எல்லா ஆசிரமங்களுக்கும், ஸ்திரீகளுக்கும், சூத்திரர்களுக்கும் மேலான

க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியது. ஓ தாமரைக்கண்ணா! இது கர்மபந்தத்தை நிவர்த்திக்கக்கூடியது. ஓ உலக பாலர்களுக்கும் அதிபதியே! பக்தனும், பிரீதியுள்ளவனு மாகிய எனக்கு அதனை யுபதேசியும்" என்று கேட்டார்.

6—33. அதனைக் கேட்ட ஸ்ரீகிருஷ்ணன் உத்தவரை நோக்கி, "ஓ உத்தவ! என்னுடைய பூஜாவிதியை நிரூபிக்கும் கர்மகாண்டத்திற்கு முடிவில்லை. ஆனதால் அதைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். (என்னுடைய பூஜா விதி வைதிகம், தாந்திரிகம், மிச்ரம் என்று மூன்று வகையானது.) மேற்காட்டியவைகளில் இஷ்டமான மார்க்கத்தால் என்னைப் பூஜிக்கலாம். தன்னுடைய ஜாதிக்கு வேதத்தில் சொல்லியபடி உபநயனஞ் செய்து துவிஜனாகிய புருஷன் சிரத்தையுடன் என்னை எப்படிப் பூஜிப்பானோ, அதனைச் சொல்லுகிறேன், தெரிந்துகொள்ளும். பிரதிமை, பூமி, அக்னி, சூரியன், ஜலம், இருதயம், பிராமணன் ஆகிய இவைகளில் எதிலாவது தனக்குக் குருவாகிய என்னைக் கபடமற்றுப் பக்தியுடன் பூஜாதிரவியங்களைக்கொண்டு பூஜிக்கவேண்டும். பற்களைச் சுத்திசெய்துகொண்டு மந்திரங்களாலும், மண் முதலியவைகளாலும் ஸ்நானஞ்செய்து சுத்தனாகி வேதத்தால் விதிக்கப்பெற்ற சந்தியோபாஸ்தி முதலிய கர்மங்களைச் செய்து, நல்ல எண்ணத்துடன் என்னுடைய பூஜையைச் செய்ய வேண்டும். கல்லால் செய்யப்பட்டது, மரத்தால் செய்யப்பட்டது, லோகத்தால் செய்யப்பட்டது, சந்தனம் முதலியவையால் எழுதப்பட்டது, சித்திரத்தி லெழுதப்பட்டது, மண்ணினால் செய்யப்பட்டது, மனத்தால் தியானிக்கப்பட்டது, இரத்தினத்தால் செய்யப்பட்டது என்று பிரதிமை எட்டு வகை. பின்னும் சலம் அசலமென்று இருவகை (சலம் - அசைவது ; அசலம் — அசையாதது). பிரதிஷ்டை செய்யப்பட்ட பிரதிமை

பகவானுடைய ஸான்னித்தியமுள்ளது; ஸ்திரமான பிரதிமையில் ஆவாகனம், உத்வாஸனம் இரண்டுஞ் செய்ய வேண்டியதில்லை ஸ்திரமில்லாத பிரதிமைகளில் சில வற்றில் அவைகளைச் செய்யவேண்டும்; சிலவற்றில் செய்யவேண்டாம் (மண் பிரதிமையில் ஆவாகனம் உத்வாஸனஞ் செய்யவேண்டும்; ஸாளக்கிராமத்தில் அவைகளைச் செய்யவேண்டாமென்று கருத்து) பூமியில் அவ்விரண்டையும் செய்யவேண்டும். எழுதின பிரதிமை தவிர மற்றவைகளுக்கு ஸ்நானஞ் செய்விக்கலாம். எழுதின பிரதிமைகளுக்குப் புரோக்ஷணமே ஸ்நானமாகும். ஸாமான்ய ஜனங்கள் பூஜா திரவியங்களைச் சம்பாதித்து வைத்துக்கொண்டு பூஜிக்கவேண்டும். பக்தன் கிடைத்ததைக்கொண்டு பூஜிக்கலாம். என்னை ஹிருதயத்தில் பூஜிப்பவன மனோமயமான திரவியங்களால் பூஜிக்கலாம். பிரதிமையைப் பூஜிக்கும்பொழுது அதற்கு ஸ்நானம், அலங்காரம் இவைகளைச் செய்யவேண்டும். பூமியில் யந்திரத்தைப் போட்டு மந்திரங்களால் தேவதைகளை ஸ்தாபிக்கவேண்டும். அக்னியில பூஜிப்பதானல் நெய்யால் நனைக்கப்பட்ட ஹவிஸ்ஸை ஹோமஞ் செய்யவேண்டும். சூரியனிடத்தில் பூஜிப்பதனல் நமஸ்காரம், அர்க்யம் முதலியவைகளால் பூஜிப்பது மேலானது. ஜலத்தில் பூஜிப்பதானல் தர்ப்பணம் முதலியவையால் பூஜிக்கலாம். என்னுடைய பக்தனல் சிரத்தையுடன் ஸமர்பிக்கப்படுவது ஜலமானலும், அது மேலனதே. சந்தனம், தூபம், தீபம், புஷ்பம், அன்னம் முதலியவை சமர்ப்பிக்கப் பெற்ருல் அது மேலென்பதில் என்ன ஆக்ஷேபம்? பூஜைக்குஉபயோகமான ஸாமக்கிரிகளைச் சம்பாதித்து வைத்துக்கொண்டு சுத்தனுகி, பகவானை நமஸ்கரித்து, கிழக்கு நுனியாகப் போடப்பட்ட தர்ப்பத்தின் மீது கிழக்கு முகமாகவாவது, வடக்கு முகமாகவாவது உட்

கார்ந்து பூஜிக்கவேண்டும். ஸ்திரமான பிரதிமையானால் அதற்கு எதிர்முகமாக உட்கார்ந்து பூஜிக்கலாம். பின்பு தான் அங்கந்யாஸம், கரந்யாஸம் இவைகளைச் செய்துகொண்டு மூலமந்திர ந்யாஸஞ்செய்யப்பட்ட என்னுடைய பிரதிமையைக் கையால் தொட்டு நிர்மால்யம் முதலியவைகளை யெடுத்துச் சோதிக்கவேண்டும். பின்பு பூர்ணகும்பம், ப்ரோக்ஷண பாத்திரம் இவைகளைச் சந்தனம், புஷ்பம், அக்ஷதம் முதலியவைகளால் அலங்கரித்து விதிப்படி ஸ்தாபிக்கவேண்டும். அந்தத் தீர்த்தத்தால் பூஜாமண்டபத்தையும், பூஜா திரவியங்களையும், தன்னையும் ப்ரோக்ஷித்துக்கொள்ளவேண்டும். பாத்யம், அர்க்கியம், ஆசமனியம் இவைகளுக்காக மூன்று பாத்திரங்கள் வைத்து அவைகளில் அந்தத் தீர்த்தத்தைச் சேர்த்து, அதற்குரிய திரவியங்களை அவைகளில் போடவேண்டும். (சியாமை, அருகு, தாமரைமலர், விஷ்ணுக்ராந்தம் இவைகளைப் பாத்ய பாத்திரத்தில் சேர்க்கவேண்டும். சந்தனம், புஷ்பம், அக்ஷதம், யவம், தர்ப்பத்தின் நுனி, எள்ளு, வெள்ளைக்கடுகு, அருகு இவைகளை அர்க்கிய பாத்திரத்தில் சேர்க்கவேண்டும். ஜாதி, லவங்கம், தக்கோலம் இவைகளை ஆசமனிய பாத்திரத்தில் சேர்க்கவேண்டும்.) அந்த மூன்று பாத்திரங்களையும், ஹிருதயமந்திரம், சிரோமந்திரம், சிகாமந்திரம், காயத்ரி இவைகளால் அபிமந்திரிக்கவேண்டும். பின்பு சரீரத்தை வாயு, அக்னி இவைகளால் சுத்திசெய்து ஹ்ருதய புண்டரீகத்திலுள்ள அணுவான என்னுடைய கலையைத் தியானிக்கவேண்டும். அந்தக் கலை நாதத்தின் முடிவில் ஸித்தர்களால் தியானஞ்செய்யப்பெற்றது. (அகாரம், உகாரம், மகாரம், பிந்து, நாதம் என்று பிரணவத்திற்கு ஐந்து அம்சங்கள். எந்த ஸ்வரமானது வேதத்தின் ஆதியிலும் அந்தத்திலு மிருக்கிறதோ, பிரகிருதி

சம்பந்தமுள்ள அதனைக்காட்டிலும் எவர் மேலானவரோ, அவர் பரமேசுவரன்—சுருதி.) அதனைத் தியானித்து, அதனால் சரீரம் முழுதும் வியாபித்த பின் (தீபத்தின் காந்தியால் வீடு பிரகாசிப்பதுபோல் ஜீவகலை சரீரத்தில் பிரகாசித்தபின்) அதனை மானசீகமான உபசாரத்தால் பூஜித்துத் தன்மயனாகி, பிரதிமையை ஆவாஹன ஸ்தாபன முத்திரைகளால் ஸ்தாபித்துப் பூஜிக்கவேண்டும். தர்மம் முதலிய எட்டுக் கால்களால் ஆசனத்தைச் செய்து பாத்யம், அர்க்கியம், ஆசமனீயம் இவைகளைக் கொடுத்து, ஒன்பது சக்திகளுடன், எட்டுத்தளங்களுள்ளதும், காய், தாது இவைகளால் பிரகாசிப்பதுமான ஆஸனத்தில் என்னை வைத்து வேதம், தந்திரம் இவைகளின் பயன் கிடைப்பதற்காகப் பூஜிக்கவேண்டும். (ஆஸனத்திற்கு எட்டுப் பாதங்கள், தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் இவைகளை அக்னி முதலிய கோணங்களிலும், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைசுவரியம் ஆகிய இவைகளைக் கிழக்கு முதலிய திக்குகளிலும் பகவானுடைய ஆஸனத்திற்குக் கால்களாகப் பாவிக்கவேண்டும். இந்த எட்டுமே எட்டுத்தளம். அதன்மீது சந்திரன், அதன் மீது சூரியன், அதன்மீது பகவானை ஒன்பது சக்திகளுடன் தியானிக்கவும். விமலா, உத்கர்ஷிணீ, ஞானா, கிரியா, யோகா, பிரஞ்ஞா, ஸத்யா, ஈசனா, அனுக்கிரஹா என்று எட்டுச் சக்திகள்) சுதர்சனம், பாஞ்சஜன்யம், கதை, நந்தகம், பாணம், சார்ங்கம், ஹலம் (கலப்பை), முஸலம், ஆகிய இந்த எட்டு ஆயுதங்களை எட்டுத் திக்குகளிலும், கௌஸ்துபம், ஸ்ரீ வத்ஸம் இவைகளை மார்பிலும், நந்தன், சுநந்தன், பிரசண்டன், சண்டன், மஹாபலன், பலன், குமுதன், குமுதேக்ஷணன் ஆகிய பார்ஷதர்களை எட்டுத் திக்குகளிலும், கருடனை எதிரிலும், துர்க்கை, விநாயகன்,

வியாஸர், விஷ்வக்ஸேனர் இவர்களை நான்கு கோணங்களிலும், குருக்களை வாம பாகத்திலும், இந்திரன் முதலிய உலகபாலர்களைக் கிழக்கு முதலிய திக்குகளிலும் பகவானுக்கு அபிமுகமாக வைத்து அர்க்கியம் முதலியவையால் பூஜிக்கவேண்டும். தனக்கு விபவமிருந்தால் சந்தனம், விளாமிச்சை வேர், கற்பூரம், குங்குமப்பூ, அகரு இவைகளால் வாஸித்த தீர்த்தத்தால் ஒவ்வொரு நாளும் ஸ்நான மந்திரங்களை ஜபித்து அபிஷேகஞ் செய்விக்கவும். ஸ்வர்ணகர்ம என்று ஆரம்பிக்கும் மந்திரத்தையும், மகாபுருஷ வித்யையையும், புருஷஸூக்தத்தையும், ராஜனம் முதலிய ஸாமங்களையும், ரௌஹிணம் முதலியவைகளையும் உச்சரித்து ஸ்நானஞ்செய்விக்கவும். மேலும் வஸ்திரம், உபவீதம், ஆபரணம், மார்பு, கன்னம் இவைகளில் மகரிகாதி பத்திரங்களெழுதுவது, சந்தனம் பூசுவது, புஷ்பமாலை இவைகளால் என்னுடைய பக்தன் என்னை மிக்க பிரேமையுடன் அலங்கரிக்கவேண்டும். பின்னும் பாத்யம், ஆசமனியம், சந்தனம், புஷ்பம், அக்ஷதம், தூபம், தீபம், அன்னம் முதலியவைகளைச் சிரத்தையுடன் ஸமர்ப்பிக்கவேண்டும். ஐசுவரியமிருக்குமானால் வெல்லம் கலந்த பாயஸம், நெய், முறுக்கு, அதிரஸம், மோதகம், ஸம்யாவம் (கோதுமையால் செய்யப்பட்டவை), தயிர், மற்ற வியஞ்ஜனங்கள் இவைகளை நிவேதனஞ் செய்யவேண்டும். பர்வங்களில் அப்யங்கம், புளிக்காப்பு முதலியவை காண்பிப்பது, தந்ததாவனம், அபிஷேகம், அன்னம் முதலிய நிவேதனம், கானம், நர்த்தனம் இவைகளை ஒவ்வொரு ஸமயத்திலும் விபவத்திற்குத் தக்கவாறு நடத்தவேண்டும். (இனி அக்னியில் பூஜிக்கும் முறை காட்டப்படுகிறது)

34—35. அவரவர்களுடைய ஸூத்திரத்தில் சொல்லியபடி மேகலை (சுற்றியிருப்பது), ஆழம் இவைகளுள்ள

தாகக் குண்டஞ்செய்து அதில் அக்னியைப் பிரதிஷ்டை செய்து நான்கு புறங்களிலும் இறைந்திருப்பதை அக்னியில் கையால் சேர்த்துவைக்கவேண்டும். சமித்தை மந்திரபூர்வமாக அக்னியில் வைப்பதாகிய அன்வாதானத்தை அநுஷ்டித்து அக்னியின் வடபுறத்தில் ஹோமத்திற்கு உபயோகமான திரவியங்களை வைத்து (ஆஸாதித்து) புரோக்ஷணி பாத்திரத்திலுள்ள தீர்த்தத்தால் அவைகளைப் புரோக்ஷித்து அக்னியில் என்னைத் தியானிக்கவேண்டும். எப்படியெனில், உருக்கிவிட்ட சுவர்ணத்திற்குச் சமமான காந்தியுள்ளவராகவும், சங்கம், சக்கரம், கதாயுதம், தாமரைமலர் இவைகளுள்ளவராகவும், நான்கு கைகளுள்ளவராகவும், சாந்தராகவும், தாமரைமலரிலிருக்கும் தாதுக்களின் நிறம்போன்ற பீதாம்பரத்தைத் தரித்திருப்பவராகவும், கிரீடம், வளை, அரைஞாண், தோள்வளை இவைகளால் பிரகாசிப்பவரும், ஸ்ரீவத்ஸம், வனமாலை, கௌஸ்துபம் இவைகளால் பிரகாசிக்கும் மார்புள்ளவராகவும் என்னை அக்னியில் தியானஞ் செய்து, நெய்யில் நனைத்த ஸமித்துக்களை அக்னியில் வைத்து என்னைப் பூஜிக்கவேண்டும். பின்பு ஆகாரம். ஆஜ்யபாகம் இவைகளை ஹோமம் செய்யவேண்டும். (பிரஜாபதயே, இந்திராய என்பது ஆகாரமெனப்படும், அக்னயே, ஸோமாய என்பது ஆஜ்யபாகம்) மேலும் மூலமந்திரத்தாலாவது (அஷ்டாக்ஷரம்) புருஷஸூக்தத்தின் பதினாறு ரிக்குக்களாலாவது ஹோமஞ்செய்யவேண்டும். பூஜையின் கிரமப்படி தர்மம் முதலியவைகளை யுத்தேசித்தும் ஹோமஞ்செய்யவேண்டும். பின்பு ஸ்விஷ்டகிருத் ஹோமஞ் செய்யவும். அதன்பின் அக்னி மண்டலத்திலிருக்கும் பகவானைப் பூஜித்து நமஸ்கரித்துப் பார்ஷதர்களுக்குப் பலிஹரணங் கொடுக்கவும். நாராயண சுரூபமான பரப்பிரம்மத்தை ஸ்மரித்துக்கொண்டு மூலமந்தி

ரத்தை ஜபிக்கவேண்டும். பின்பு ஆசமனங் கொடுத்து நிர்மால்யத்தை விஷ்வக்ஸேனருக்கு நிவேதனஞ் செய்ய வும். பச்சைக்கற்பூரம் முதலிய வாசனைத் திரவியங்களுள்ள தாம்பூலத்தை நிவேதனஞ்செய்யவேண்டும். என்னுடைய சரிதங்களைக் கானஞ்செய்தும், நர்த்தனஞ்செய்தும், என் கதையைப் பிறருக்குச் சொல்லிக்கொண்டும் பகவானிடத் தில் பிரீதியுள்ளவனாக இருக்கவேண்டும். புராணத்தில் சொல்லிய ஸ்தோத்திரங்களாலும், பிராகிருதமான ஸ்தோத் திரங்களாலும் ஸ்தோத்திரஞ்செய்து, "ஓ பகவன்! என்னி டத்தில் தயவு செய்யும்" என்று தண்டம்போல் நமஸ் கரிக்கவேண்டும். நமஸ்கரிக்கவேண்டிய விதி எப்படி யெனில், தலையால் என்னுடைய பாதங்களையும், வலது கை யால் என்னுடைய வலது பாதத்தையும், இடது கையால் இடது பாதத்தையும் தொட்டுக்கொண்டு நமஸ்கரிக்க வேண்டும். மேலும், "ஓ ஈச! மிருத்யுவாகிய முதலையுள்ள சம்ஸார சமுத்திரத்தில், பயந்து உம்மைச் சரணமடைந் திருக்கும் என்னைக் காப்பாற்றும்" என்று பிரார்த்திக்க வேண்டும். பின்பு நிர்மால்யத்தைச் சிரஸில் வைத்துக் கொண்டு உத்வாஸனஞ் செய்யக்கூடிய பிரதிமையா னால் தன்னுடைய ஹ்ருதய கமலத்தில் இருக்கும் ஜோதி ஸில் உத்வாஸனஞ் செய்யவேண்டும். பிரதிமைகளுக் குள் எந்தப் பிரதிமையில், எப்பொழுது, எதில் சிரத்தை இருக்குமோ அதில் அப்பொழுது என்னைத் தியானித் துப் பூஜிக்கலாம். ஏனென்றால் சகல பிராணிகளிடத் திலும் தன்னிடத்திலும் (பூஜிப்பவனிடத்திலும்) நான் வசிக்கிறேன். (பிரதிமைகளுக்குள் இது முக்கியம்; இது முக்கியமல்ல என்ற பேதமில்லை என்று கருத்து.) இப் படி வைதிகம், தாந்த்ரிகம் ஆகிய பூஜா விதிகளைக் கொண்டு என்னைப் பூஜித்தால் அவனுக்கு இவ்வுலகத்தி லும், பரலோகத்திலும் க்ஷேமத்தை நான் கொடுக்கிறேன்.

என்னுடைய பிரதிமையைப் பிரதிஷ்டை செய்து கெட்டி யாகக் கோயில் கட்டிவைத்துப் புஷ்பத்தோட்டம் போட்டு, பூஜை, பர்வம் முதலியவைகளில் உத்ஸவம் ஆகிய இவை கள் சாசுவதமாக நடக்கும்படி கிராமங்கள், கடைகள் முதலியவைகளை ஏற்படுத்தி வைக்கவேண்டும். இப்படிச் செய்பவன் எனக்குச் சமமான ஐசுவரியத்தை அடை வான். என்னுடைய பிரதிமையைப் பிரதிஷ்டை செய்வ தால் சக்கரவர்த்தியாவான். கோயில் கட்டிவைத்தால் மூவுலகத்திய இராஜ்யத்தை அடைவான். பூஜை முதலியவைகளால் பிரும்மலோகத்தை அடைவான். மூன்றையும் செய்தவன் என்னுடைய ஸாம்யத்தை யடை வான். இப்படி எவன் என்னைப் பூஜிக்கிறானோ அவன் பக்தியோகத்தை அடைவான். அந்தப் பக்தியோகத் தைப் பயனை உத்தேசியாமல் செய்வதால் என்னையே அடைவான். எவன் பிராம்மணர்களுக்கும், தேவதை களுக்கும் கிராமம் முதலியவைகளைக் கொடுத்து, பின்பு அதனை அபகரித்துக்கொள்ளுகிறானோ, எவன் பிறரால் கொடுக்கப்பட்ட தேவபிராம்மண தனத்தை அபகரிக் கிறானோ அவன் பதினாயிரக்கணக்கான வருஷங்கள் அமேத்யத்தைப் புசிக்கும் பன்றியாக ஜனிப்பான். மேற் காட்டிய நல்ல கர்மங்களைச் செய்பவர்கள், உதவிசெய்த வர்கள், செய்வித்தவர்கள், அதனை அனுமோதித்தவர் கள் ஆகிய இவர்கள் எல்லோரும் பரலோகத்தில் அதன் பயனில் பாகஸ்தர்களாகிறார்கள்.

# அத்தியாயம் 28

## ஞான யோகத்தின் சுருக்கம்

**1—10.** (பிறருடைய சுபாவத்தையாவது, நடையை யாவது ஞானயோகத்தை அனுஷ்டிப்பவன் சிலாகிக்கவுங் கூடாது, நிந்திக்கவும் கூடாது.) பிரகிருதி, புருஷன் ஆகிய இவர்களால் சகல உலகமும் வியாபித்திருப்ப தாகவும், சகல உலகமும் ஒருவராகிய பகவானுடைய சுரூபமென்றும் பார்க்கவேண்டும். (எவன் பிறருடைய சுபாவங்களையும் கர்மங்களையும் துதிக்கிருனே, நிந்திக் கிருனே, அவன் மித்யையானவைகளில் அபிநிவேசம் உள்ளவனானதால் ஞான நிஷ்டையிலிருந்து சீக்கிரத்தில் நழுவிவிடுவான்.) ராஜஸ அகங்கார காரியங்களான இந்திரி யங்கள் தங்கள் தங்கள் வேலையைச் செய்யாமலிருக்கும் பொழுது (தூக்கத்தால்) தேகத்திலிருக்கும் ஜீவன் மனோமாத்திரனாக இருந்து மாயையை (சொப்பனத்தை) அடைகிருன். அந்த மனமானது இலயித்திருக்கும் பொழுது பிரஞ்ஞையற்று மிருத்யுவுக்குச் சமமான ஸுஷுப்தியை அடைகிருன். இதுபோலவே பேதபுத்தி யுள்ள புருஷன் விக்ஷேபத்தையும், இலயத்தையும் அடைகிருன். (பிராஞ்ஞனுடைய சேர்க்கையால் விசுவ னுக்குப் போகம், க்ஷயம் ஆகிய பிரம்சம் எப்படி ஏற்படு கிறதோ, அப்படி அஞ்த்மாவின் சம்பந்தத்தால் ஆத் மாவிற்கு சுரூபஞானம் மறைக்கப்படுகிறது என்று தாத் பரியம்.) துவைதம் மித்தியையானதால் அவஸ்துவான துவைதத்திற்குள் எது நல்லது ? எது கெட்டது ? எவ் வளவு நல்லவை ? எவ்வளவு கெட்டவை ? வாக்கினல் சொல்லப்படுகிறவையும், கண்ணல் பார்க்கப்பெற்றவை யும், மனத்தால் நினைக்கப்பெற்றவையுமான வஸ்துக்கள் யாவும் மித்யை யானவையேயாம். பிரதிபிம்பம், எதிர்

ஒலி, முத்துச்சிப்பியில் வெள்ளி என்கிற பிரமமாகிய ஆபாஸம் ஆகிய இவைகள் உண்மையானவை இல்லாத வையானாலும் எப்படி காரியத்தைச் செய்கின்றனவோ, அப்படி தேகம் முதலியவைகள் உண்மையானவை யல்லாததானாலும் ஞானத்தால் அஞ்ஞானம் நசிக்கிறவரையில் பயத்தைக் கொடுக்கின்றன. (சிருஷ்டியை நிரூபிக்கும் சுருதிகளே துவைதத்தைச் சொல்லுகின்றன. அதை உண்மையல்லவென்று எப்படிச் சொல்லலாம் என்றால் இரண்டு சுலோகங்களால் சமாதானம் சொல்லப்படுகிறது.) (இந்த உலகம் முழுவதும் பரமாத்மாவின் சுரூபமாய் அந்தப் பிரபுவே உலகத்தைச் சிருஷ்டிக்கிறார்; ரட்சிக்கிறார்; சங்கரிக்கிறார்; அந்தப் பிரபுவின் சுரூபமாகிய உலகம் சிருஷ்டிக்கப்படுகிறது; காப்பாற்றப்படுகிறது; சங்கரிக்கப்படுகிறது; (சிருஷ்டிக்கப்படுவது, சிருஷ்டிப்பவன்; காப்பாற்றப்படுவது, காப்பாற்றுகிறவன்; சங்கரிப்படுவது, சங்கரிப்பவன்; இவைகள் ஒன்று என்று கருத்து.) (ஆனதால் ஆத்மாவைக் காட்டிலும் உண்மையில் வேறான வஸ்து உலகத்தில் இல்லை.) ஆனாலும் அத்யாத்மம் முதலிய மூன்று பேதங்கள் ஆத்மாவைக் காட்டிலும் வேறாக இருப்பதாக ஆத்மாவிடத்தில் தோன்றுகின்றன (உண்மையில் இல்லை). இந்த மூன்று பேதங்களுக்குக் காரணமில்லை; ஆனதால் உலகம் மாயையால் தோன்றுகிறது. முக்குணங்களுடைய பேதத்தால் அத்யாத்மம் முதலிய பேதங்களுள்ளதாகத் தோன்றுகிறது. என்னால் சொல்லப்பட்ட ஞானம் விஞ்ஞானம் இவைகளுடைய நிஷ்டையை அடைந்தவன் ஒருவரையும் தோத்திரம் செய்யவும் மாட்டான். (சூரியன் எங்கும் சமமாகச் சஞ்சரிப்பான். எந்த வஸ்துவிற்கு உற்பத்தியும் நாசமுமிருக்கின்றதோ, அந்த வஸ்து உண்மையில் இல்லாததென்றே நிச்சயிக்கவேண்டும். ஜகத்

உற்பத்தி நாசமுள்ளதென்பதை பிரத்தியட்சம், அனுமானம், வேதம், ஆத்மானுபவம் ஆகிய நான்கு பிரமாணங்களால் தெரிந்துகொள்ளலாம்.) (குடம் முதலியவை உண்டாகிறதையும், நசிப்பதையும் நேரில் பார்க்கிறோம். அதனால் அந்த விஷயத்தில் பிரத்யட்சம் பிரமாணமாகிறது. கண்ணுக்குப் புலப்படும் பிருதிவி முதலியவை ஆதி அந்தம் இவைகளுள்ளவை, அவயவங்களுள்ளவை. எது அவயவங்களுள்ளதோ அது ஆதி அந்தம் இவைகளுள்ளது என்ற அனுமானமும் பிரமாணமாகிறது. இந்திரியங்களுக்குப் புலப்படாத ஆகாயம் முதலியவை விஷயத்தில் வேதம் பிரமாணமாகிறது. ஆத்மானுபவம் உண்டானால் பிரபஞ்சம் யாவும் ஆதி அந்தமுள்ளவை என்று தெரியும். ஆனதால் ஒன்றிலும் ஆசை வைக்காமல் சஞ்சரிக்கவேண்டும்'' என்றார்.

11—12. அதனைக் கேட்ட உத்தவர் ஸ்ரீ கிருஷ்ண பகவானை நோக்கி, "சாட்சியாகிய ஆத்மா சேதனனானதால் அவனுக்கும் ஸம்ஸார சம்பந்தமில்லை. சரீரம் முதலியவை அசேதனங்களானதால் அவைகளுக்கும் ஸம்ஸார சம்பந்தமேற்பட நியாயமில்லை. ஸம்ஸாரமோ இருப்பதாகத் தோற்றுகிறது. ஓ ஈச! அது யாரைச் சார்ந்தது? (சாட்சியான ஆத்மாவினுடையதா? அல்லது பார்க்கப்படும் ஜடமான ஜகத்தினுடையதா? ஒருவருடையதுமல்ல. ஸம்ஸாரமே இல்லையென்று சொல்வோமானால் காணப்படுகிறதே அது ஒருவருடையதன்று எனக் கருத்து.) ஆத்மா நாசமற்றவர்; குணமற்றவர் (ராகத்துவேஷமில்லை); சுத்தர் (புண்ய பாபமற்றவர்); தாமாகப் பிரகாசிப்பவர் (மற்றொரு பிரகாசத்தை அபேக்ஷிக்கிறதில்லை); ஒன்றாலும் மறைக்கப்படாதவர்; (அளவிடக்கூடாத ஞானமுள்ளவர்; வியாபகர்); தேகமோ ஜடம். அக்னி எப்படி பிரகாசிக்கச்செய்யும் வஸ்துவோ, கட்டை

எதனால் பிரகாசிக்கப்படுகிறதோ, அப்படி ஆத்மாவும் தேகமும் பிரகாசமும், பிரகாச்யமுமாக இருக்கிறது. அதற்குள் ஸம்ஸாரம் யாரைச் சேர்ந்தது? அதனைச் சொல்லு"மென்று கேட்டார்.

13-46. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் உத்தவரை நோக்கி, "தேகம், இந்திரியங்கள் ஆகிய இவைகள் தன்னைச் சார்ந்தவையென்று நினைத்து அவைகளில் அபிமானம்வைத்து எப்பொழுது ஆத்மா அவைகளுடன் சம்பந்தப்படுகிறானோ, அப்பொழுது ஸம்ஸாரம் அவனுக்கு உண்டாகிறது. அவைகளில் அபிமானமற்றிருக்கும் விவேகிக்கு அந்த ஸம்ஸார மிருக்கிறதில்லை. (ஆத்மா சுயப்ரகாசனானாலும், இயற்கையில் ஒன்றிலும் சம்பந்தப்படாதவனானாலும் தன்னுடைய சுரூபத்தைத் தெரிந்துகொள்ளாததால் ஸம்ஸார முண்டாகிறதென்று கருத்து.) சொப்பனம் உண்மையிலில்லாததனாலும் விஷயங்களை மனத்தால் தியானஞ்செய்யும் புருஷனுக்கு சொப்பனத்தில் அனர்த்தங்க ளுண்டாகிறதுபோல, தேகம் முதலியவை உண்மையிலில்லாதவையானாலும் ஆத்மாவிற்கு ஸம்ஸாரம் நிவர்த்தியாகிறதில்லை. (சொப்பனத்தில் சிங்கம் முதலியவைவையைப் பார்த்துப் பயப்படுகிறான். உண்மையில் சிங்கமில்லை; ஆனாலும் பயத்தை அடைகிறான். அதுபோலவே மித்யா பூதங்களான சரீரம் முதலியவைகளை ஸத்யங்களென்று நினைத்து துக்கத்தை அடைகிறானென்று கருத்து.) மேலும் தூங்கிக்கொண்டிருப்பவனுக்கு சொப்பனம் பலவகையான அனர்த்தங்களைக் கொடுக்கிறது; விழித்துக்கொண்டபின் அந்த சொப்பனம் அந்தப் புருஷனுக்கு மோகத்தை யுண்டுபண்ணுகிறதில்லை. அது போலவே விஷயங்களுடைய உண்மையை அறியாதவனுக்கு அவைகள் (உண்மையிலில்லாதவையானாலும்) மோகத்தை யுண்டுபண்ணுகின்றன. ஞானிக்கு அவை

களில், மோகமேற்படுகிறதில்லை. சோகம், ஸந்தோஷம், பயம், கோபம், உலோபம், மோகம், மதம், ஜனனம், மிருத்யு ஆகிய இவைகள் அகங்காரத்திற்கேயொழிய ஆத்மாவினுடையவை அல்ல. (அகங்காரமில்லாத ஸுஷுப்தியில் மேற்கண்ட சோகமோஹாதிகள் இல்லை. "நான் சுகமுள்ளவன், நான் துக்கமுள்ளவன்" என்ற ஞானம் அப்பொழுதில்லை. சுகம் முதலியவை தேகத்தின் தர்மங்களேயொழிய ஆத்மாவினுடையவையல்ல.) சரீரம் முதலியவைகளில் அபிமானமுள்ளவனே சரீரத்திற்குள்ளிருக்கும் ஜீவனெனப்படுகிறான். குணங்கள், கர்மம் இவைகளுள்ள அவனே சூட்சுமங்களான உபாதிகளின் சம்பந்தத்தால் சூத்ராத்மாவென்றும், மகான் என்றும் பலவகையாகச் சொல்லப்படுகிறான். அவன் கால சுரூபியான பரமேசுவரனுக்கு சுவாதீனனாகி ஸம்ஸார சக்கரத்தில் சுற்றுகிறான். (அஹங்காரத்தின் சம்பந்தத்தால் ஜீவனுக்குப் பந்தமேற்பட்டிருக்கிறது. ஞானத்தால் அஞ்ஞானம் நிவர்த்தியடையும். அந்தக் காலத்தில் ஜீவன்முக்தனாகிறான்.) மனம், வாக்கு, பிராணன், சரீரம், கர்மம் ஆகிய இவைகளடங்கிய ஸம்ஸாரத்திற்கு மூலமில்லை. மூடத்தனத்தால் பல ரூபங்களாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (இந்திரஜால வித்தையால் காணப்படும் வஸ்துக்கள் போன்றது.) ஆனதால் நல்ல ஆசாரியனை உபாஸித்து ஞானத்தை அடைந்து அந்த ஞானமாகிய கூர்மையான கத்தியால் அந்த ஸம்ஸாரத்தைத் தொலைத்து ஒன்றிலும் பற்றுதலில்லாமல் சஞ்சரிக்கவேண்டும். இந்த உலகத்திற்கு எது பரம காரணமோ (உலகத்திற்கு முன்பிருந்ததோ), எது ஜகத்து நசித்தாலுமிருக்கிறதோ, எது காலசுரூபமாகவிருக்கிறதோ, அது மத்யகாலத்திலுமிருக்கிறது. (ஜகத்து அந்தப் பிரம்ம சுரூபமென்று கருத்து.)

வேதத்தாலும், தபஸினாலும் (தனக்குரிய தர்மத்தை யனுஷ்டிப்பது), அநுபவமாகிய பிரத்யட்சத்தாலும், ஆசாரியருடைய உபதேசமாகிய ஐதிஹ்யத்தாலும், அநுமானத்தாலும் தெரிந்துகொள்வதே ஞான மெனப்படுகிறது. (எது இந்த உலகத்திற்குக் காரணமாக இருக்கிறதோ, எதனால் இந்த உலகம் பிரகாசிக்கிறதோ, அந்த ப்ரம்ம சுரூபமாகவே பிரபஞ்ச மிருக்கிறது. பிரபஞ்சத்தைக் காட்டிலும் வேறானதல்ல என்ற நிச்சயம் வேதம் முதலியவைகளால் ஏற்படவேண்டும். அந்த விவேகமே ஞான மெனப்படுகிறது.) தங்கத்தால் வளை முதலிய ஆபரணங்கள் செய்யப்பட்டால் ஆபரணமாகச் செய்யப்படுவதற்கு முற்காலத்திலும், ஆபரணத்தை உருக்கின பின்பும் தங்கமாக இருக்கிறது. அதனால் ஆபரணமாக இருக்குங்காலத்திலும் தங்கமே வளை முதலியபெயரால் விவரிக்கப்படுகிறதேயொழிய வளை முதலியவை தங்கத்தைக் காட்டிலும் வேறானதல்ல. அதுபோல் பலவகையான ஜகத்து என்ற வியவகாரத்திற்கு நானே காரணம். (என்னைக்காட்டிலும் பிரபஞ்சம் வேறானதல்லவென்று கருத்து.) ஜாக்ரத், சொப்பனம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தையுள்ள மனம், அதன் அவஸ்தைகளுக்குக் காரணங்களான மூன்று குணங்களும், காரியமான அதிபூதம், காரணமான அத்யாத்மம், கர்த்தாவாகிய அதிதெய்வம் ஆகிய இவைகளடங்கிய பிரபஞ்சம் மூன்று அவஸ்தைகளில்லாத ஞானசுரூபியான எவரை ஆசிரயித்துப் பிரகாசிக்கிறதோ, எவருடைய பிரகாசமில்லாமற் போனால் பிரபஞ்சம் பிரகாசிக்கிறதில்லையோ, அந்தப் பர ப்ரம்மமே ஸத்ய வஸ்து. (ஜகத்து அநித்யமென்று கருத்து.) எது முந்தியும், பிந்தியும் இல்லையோ, அது மத்திய காலத்திலுமில்லை. வியவகாரத்திற்கு மாத்திரம் உபயோகப்

படுகிறது.) எல்லாவற்றிற்கும் காரணராகிய பரமாத்மாவினால் படைக்கப்பெற்று அவராலேயே பிரகாசிக்கப் பெற்றதுமான ஜகத்து அந்தப் பரமாத்ம சுரூபமேயொழிய வேறில்லையென்று என்னுடைய அபிப்பிராயம். ("ரூபம் பெயர் இவைகள் வியவகாரத்திற்கு உபயோகங்கள்; ஸத்யங்களல்ல. மண்ணென்பதே ஸத்யம்" "இதெல்லாம் பரப்ரம்மமே" சுருதிகள்) இந்தப் பிரபஞ்சம் உண்மையில் பிரம்மத்தைக் காட்டிலும் வேறாகவில்லாமலிருந்தாலும் தோன்றுகிறதல்லவா? இது பரமாத்மாவின் காரியமேயாம். பிரம்மம் எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்வதும் தானாகப் பிரகாசிப்பதுமாக இருக்கிறது. ஆனதால் இந்திரியங்கள், தன்மாத்திரைகள், மனம், ஐந்து பூதங்கள் முதலிய விசித்திரமான பிரபஞ்சம் பரப்ரம்மமேயாம். மேற்காட்டிய வண்ணம் பிரம்ம சுரூபத்தைக் காட்டக்கூடிய வேதம் முதலிய பிரமாணங்களைக்கொண்டு சரீரம் முதலியவைகளை ஆத்மாவல்லவென்று நிச்சயித்து சகல ஸம்சயங்களையும் நிவர்த்தித்துக்கொண்டு ஆத்மானந்தத்தால் ஸந்தோஷத்தை அடைந்து, விஷயங்களில் ஆசை வைக்காமல் உபாதியை அடையவேண்டும். சரீரம் பிருதிவியின் விகாரமானதால் அது ஆத்மாவல்ல. இந்திரியங்களும், அவைகளுடைய அதிஷ்டான தேவர்களும், பிராணன், மனம், புத்தி, மகத் தத்துவம், அஹங்காரம் ஆகிய இவை சரீரம்போல ஆசிரயித்து ஜீவிப்பவைகளானதால் ஆத்மாவல்ல. வாயு, ஜலம், அக்னி, தேஜஸ், ஆகாயம், பூமி, சப்தம் முதலிய விஷயங்கள், பிரகிருதி ஆகிய இவைகள் ஜடங்களாகையால் அவைகளும் ஆத்மாவல்ல. ஆகவே, என்னுடைய சுரூபத்தை அடைந்தவனுக்கு இந்திரியங்களை அடக்குவதால் என்ன குணமேற்படும்? இந்திரியங்கள் விக்ஷேபத்தை

அடைந்தால் அதனால் என்ன தோஷம்? மேகங்களால் மறைக்கப்பட்டிருக்கும்பொழுது சூர்யனுக்கு என்ன தோஷம்? மேகங்களால் மறைக்கபபடாததால் சூரியனுக்கு என்ன குணம்? பிரகாச சுரூபியான பரமாத்மாவிற்குப் பிரகாசிக்கப்படும் வஸ்துக்களுடைய குண தோஷ சம்பந்தமில்லையென்று சூரிய திருஷ்டாந்தத்தால் காட்டப்பட்டது. இனி ஒன்றிலும் பரமாத்மா சம்பந்தப்படாமலிருப்பதால் பிரபஞ்சத்தின் குணதோஷங்கள் ஆத்மாவிடத்தில் சம்பந்திக்கிறதில்லை என்பதில் ஆகாயம் உதாகரணமாகச் சொல்லப்படுகிறது. வாயு, அக்னி, ஜலம், பூமி ஆகிய இவைகளுடைய குணங்களாகிய உலர்த்துவது, தகிப்பது, ஊறச்செய்வது, புழுதியுள்ளதாகவிருப்பது முதலியவைகளும், ருதுக்களின் குணங்களான உஷ்ணம், குளிர்ச்சி ஆகிய இவைகளும் ஆகாயத்தில் சம்பந்திக்கிறதில்லை. அதுபோல அகங்காரத்தைக்காட்டிலும் மேலான பரமாத்மாவிடத்தில் சம்சாரத்திற்குக் காரணமாயிருப்பவைகள் சம்பந்திக்கிறதில்லை. ஆனாலும் ஸ்திரமாக என்னிடத்தில் பக்திசெய்து மனத்தின் மலமாகிய ரஜோ குணத்தை நிவர்த்தித்துக் கொள்ளும்வரையில் மாயையால் செய்யப்பட்ட விஷயங்களில் சம்பந்திக்கக்கூடாது. மனிதர்களுடைய சரீரத்தில் வியாதி ஏற்பட்டால் அதனை நன்ருக வைத்தியம்செய்து நிவர்த்திக்கவேண்டும். அப்படிச் செய்யாமல் சொற்பமாக வைத்தியஞ் செய்யப்பட்டால் பின்பு அது விருத்தியாகி எப்படி உபத்திரவிக்கிறதோ அப்படி நன்ருக ஞானத்தையடையாத புருஷனுக்கு விஷய வாஸனைகளும் கர்மங்களும் உபத்திரவத்தை யுண்டுபண்ணும்.) (நல்ல ஞானத்தையடையாதவன் முக்தனைப்போலத் தனிஷ்டப்படி இருக்கக்கூடாதென்று காட்டப்பட்டது.) ஞானுப்யாசஞ்செய்யும் மனிதர்களுக்குத் தேவர்கள் புத்திரன் முதலிய பந்துக்

களாகவிருந்து விக்னஞ் செய்வார்கள். அப்படி அவர்களால் தடுக்கப்பட்டு எவர்கள் ஸித்தியை அடையவில்லையோ, அவர்கள் அடுத்த ஜனமத்தில் முந்திய ஜன்மத்தின் அப்யாஸ பலத்தால் யோகத்தை அப்யஸிப்பார்களேயொழியக் கர்மத்தை அநுஷ்டிக்கமாட்டார்கள். மூடனாகிய மனிதன் ஏதோ ஒரு வாஸனையால் தூண்டப்பட்டு மரணம் வரையில் கர்மங்களைச்செய்கிறான். அதனால் சுகதுக்கங்களையு மடைகிறான். (வித்துவானாக இருப்பவன் பிரகிருதியின் காரியமான சரீரத்திலிருந்தாலும் ஆத்ம சுகானுபவத்தால் சந்தோஷமடைந்து விஷயங்களில் ஆசையில்லாமல் கர்மங்களைச் செய்வதனால் ஸந்தோஷத்தையாவது துக்கத்தையாவது அடையமாட்டான். (வித்வான், மூடன் ஆகிய இருவர்களும் கர்மங்களைச் செய்பவர்களானாலும் மூடன் நான் என்னுடையதென்ற அஹங்காரத்துடன் கர்மங்களை யனுஷ்டிக்கிறான். வித்வானாக இருப்பவனுக்கு மேற்காட்டிய அஹங்காரமில்லை. இதுவே இவ்விருவர்களுக்குமுள்ள பேதம்.) ஆத்மாவிடத்தில் புத்தியைச் செலுத்திய ஞானியாகிய புருஷனுக்குச் சரீரம் உட்கார்ந்திருப்பது, படுத்திருப்பது, நடப்பது, எழுந்திருந்து, நிற்பது, மூத்திரத்தை விடுவது, இன்னும் மற்ற கர்மங்களைச் செய்வது முதலியவைகள் தெரியா. (சரீரத்தையே யறியாத புருஷன் அதனால் செய்யப்பட்ட கர்மங்களில் விகாரத்தை யடைவானா?) (சொப்பனத்தில் கண்ட வஸ்துக்களைத் தூங்கி விழித்தவன் எப்படி உண்மையில்லை என்று தெரிந்துகொள்ளுகிறானோ அது போல ஞானியாகவிருப்பவன் அஸத்தான இந்திரிய விஷயங்கள்) அநேகங்களாக இருப்பதால் அவைகள் பொய்யானவைகளென்று அனுமானத்தால் தெரிந்து கொள்கிறான், தூங்கி விழித்தவனுக்கு சொப்பனத்தில் கண்ட வஸ்துக்கள் வாஸனா ரூபமாகச் சில காலம் தோன்

றிருலும் அவைகள் சுயமாகவே எப்படி மறைந்துவிடுகின் றனவோ, அப்படி அஸத்தான இந்திரிய விஷயங்கள் ஞானிக்கு வாஸனு பலத்தால் சொற்ப காலம் தோன்றிரு லும் அவைகள் சுயமாகவே மறைந்துவிடும். அஞ்ஞான முள்ள காலத்தில் (பந்தனுக இருக்கும்பொழுது) குணங் களாலும், கர்மங்களாலும் பலவகைகளாகவிருக்கும் சரீரம் இந்திரியம் முதலியவை ஆத்மாவிடத்திலிருப்பதாகத் தெரிந்துகொள்ளப்பட்டிருந்தன. ஞானம் உண்டானபின் அந்த அப்பியாஸம் நிவர்த்தியாயிற்று. ஆத்மா எப் பொழுதும் ஒரேவகையாக இருக்கிருரேயொழிய விகா ரத்தை யடையவில்லை. (நெல், குற்றுவதால் அந்த சுரூபத்தை விட்டு அரிசியாக ஆவதுபோலப் பந்தனு யிருந்த அவஸ்தையை விட்டு முக்தனுகிய அவஸ்தையை யடைந்த ஆத்மா ஏன் விகாரத்தை யடையமாட்டான்? என்று பூர்வபக்ஷம் நிவர்த்திக்கப்பட்டது.) சூரியனு டைய உதயமானது மனிதர்களுடைய கண்களுக்கேற் பட்டிருந்த பிரதிபந்தகமான இருளைப் போக்கடிக்கிறதே யொழிய கடம் முதலிய பதார்த்தங்களைப் புதிதாக உண்டுபண்ணுகிறதில்லை. அதுபோல இது ஆத்மா இது அநாத்மாவென்ற ஞானம் உண்டானல் அது அஞ் ஞானத்தை நிவர்த்திக்கிறது. எப்பொழுதுமுள்ள ஆத்ம வஸ்து ஒரேமாதிரியாகவே விகாரத்தை யடையாமலிருக் கிறது.) இந்த ஆத்மா எப்பொழுதும் நம்மால் அடையப் பட்டவர்; தாமாகப் பிரகாசிப்பவர்; (அஞ்ஞானமாகிய மலம் அவரிடத்தில் கிடையாதென்று காட்டப்பட்டது.) உற்பத்தியற்றவர்; அளவிடக்கூடாதவர்; மிக்க விபூதி யுள்ளவர்; எல்லாவற்றையும் அனுபவிப்பவர்; ஒருவர் தனக்கு சமமான இரண்டாவது வஸ்து அற்றவர்; வாக்குக்கு எட்டாதவர்; வாக்கு, பிராணன் இவை களுக்குச் சேஷ்டையைக் கொடுப்பவர்; சுத்தனுகிய

ஆத்மாவிடத்தில் பேதபுத்தி முதலியவை மனத்தின் பிரமமேயாம். இம்மாதிரியான பேத புத்திக்கு ஆத்மா தான் ஆசிரயம்; வேறு ஆசிரயம் இல்லை. சிலர் நாம ரூபங்களுள்ளதும், ஐந்து பூதங்களாலேற்பட்டதுமான இந்த உலகமானது நேரில் பார்க்கப்படுகிறதனால் இது உண்மையானதேயாம். வேதாந்தத்திற் சொல்லிய அர்த்தங்கள் யாவும் அர்த்தவாதங்களேயாம்" என்று சிலர் சொல்லுகிறார்கள். அவர்கள் தங்களைத் தாங்களே வித்வான்களென்று நினைத்தவர்கள். அவர்களுடைய மதத்திற்குக் காரணம் ஒன்றுமில்லை. உண்மையை யறிந்தவர்கள் அப்படிச் சொல்லமாட்டார்கள். (ஆத்மா கர்த்தாவல்ல, போக்தாவல்ல, பரமானந்த சுரூபி என்று சொல்லும் உபநிஷத் வாக்கியங்கள் கர்மாங்கங்களாக ஆக மாட்டா. ஜகத் நாமரூபமுள்ளதானதாலும் ஐந்து பூதங்களால் ஏற்பட்டதானதாலும் சொப்பனம்போல் உண்மையானதல்ல என்று கருத்து.) மேற்காட்டிய ஞானயோகத்தையனுஷ்டிக்கும் புருஷனுக்கு விக்னங்கள் நேருமானால் அவைகளில் சிலவற்றை யோகதாரணையினாலும், சிலவற்றை வாயு தாரணையுள்ள ஆஸனங்களாலும் சிலவற்றைத் தபஸ்ஸாலும், மந்திரத்தாலும், ஔஷதத்தாலும், சிலவற்றை என்னுடைய தியானம், நாமஸங்கீர்த்தனம் முதலியவையாலும், யோகேசுவரனை அனுவர்த்திப்பதாலும் நிவர்த்தித்துக்கொள்ளவேண்டும். சிலர் மேற்காட்டிய உபாயங்களால் ரோகம் முதலியவைகளை நிவர்த்தித்துக்கொண்டு சரீரத்தை யௌவன வயதுள்ளதாகச் செய்துகொண்டு, அணிமா முதலிய ஸித்திகளுக்காக முயலுகிறார்கள். (மரத்தில் பழுக்கும் பழம்போல் சரீரம் அநித்தியம். ஆத்மாவே நித்தியம். ஆனதால் ஞானயோகத்தைச் செய்யாமல் அணிமா முதலிய ஸித்திகளை விரும்புவது பெரியோர்களால் ஒப்புக்கொள்ளத்

தகுந்ததல்ல. அந்த முயற்சி வீணானதேயாம்; யோகாப்பியாஸம் செய்கிற புருஷனுக்குச் சரீரத்தில் ரோகம் முதலியவைகளில்லாமல் இருக்குமானால் என்னிடத்தில் மனத்தைச் செலுத்துவதாகிய ஸமாதியைச் செய்யாமல் இந்தச் சரீரத்திலேயே நோக்கமுள்ளவனாக இருக்கக் கூடாது. மேற்காட்டிய யோகத்தைச் செய்துகொண்டு ஒன்றிலும் ஆசையில்லாமல் என்னையே ஆசிரயித்திருப்பவனுக்கு விக்னங்கள் உண்டாகிறதில்லை; ஆத்மானந்தமுள்ளவனாக ஆய்விடுவான்.

## அத்தியாயம் 29

### பக்தி யோகத்தின் சுருக்கம்

*1-6.* அதனைக் கேட்ட உத்தவர் பகவானை நோக்கி, "ஓ அச்யுத! மனத்தை ஜயிக்காதவன் மேற்காட்டிய பக்தியோகத்தை அனுஷ்டிக்க முடியாதென்று நினைக்கிறேன். ஆனதால் பிரயாசமின்றி இந்த யோகம் சித்திக்கும் உபாயத்தை எனக்குத் தெரியும்படி சொல்ல வேண்டும். ஓ தாமரைக் கண்ண! மனத்தை அடக்குகின்ற யோகிகள் அதனை யடக்க முடியாமல் பெரும்பாலும் கஷ்டப்படுகிறார்கள். விவேகிகளாக இருப்பவர்கள் ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய உம்முடைய பாதாரவிந்தத்தையே சுகமாக ஆசிரயிப்பார்கள். உம்மிடத்தில் பக்தி செய்தவர்கள் யோகத்தாலும், கர்மத்தாலும் கர்வத்தை அடையமாட்டார்கள். உம்முடையமாயையால் மோகிக்கமாட்டார்கள். எவர்கள் உம்மிடத்தில் பக்தி செய்யவில்லையோ, அவர்கள் 'நாம் கர்மானுஷ்டானஞ் செய்பவர்கள், யோகத்தை அறிந்தவர்கள்' என்று கர்வங்கொண்டு உம்முடைய மாயையால் மோகத்தை

அடைவார்கள். பிரம்மா முதலிய தேவர்களால் கிரீடம் படும்படி நமஸ்கரிக்கப்பெற்ற பாதங்களுள்ளவரானாலும் நீர் ராமாவதாரத்தில் வானரங்களுடன் சினேகஞ் செய்துகொண்டீரல்லவா? அப்படிப்பட்ட நீர் அனன்யமாகப் பக்தி செய்பவர்களுக்கு சுவாதீனராய் இருக்கிறீர் என்பதில் ஆச்சரியமில்லை. மேலும், ஆசிரயித்தவர்களுக்கு எல்லாப் புருஷார்த்தத்தைக் கொடுப்பவரும், சகலப் பிராணிகளுக்கும் ஆத்மாவாகவும் பிரியருமான உம்மை விட்டு, பலி முதலிய பக்தர்களிடத்திலும் உம்மால் செய்யப்பட்ட அனுக்கிரகத்தையறிந்த எந்தப் புருஷன் வேறு தேவதையை உபாசிப்பான்? சுவர்க்கம் முதலிய அற்பமான பயன்கள் இந்திரிய போகத்திற்காக உபயோகப்படுகின்றன. அவைகளை அடைந்தவன் உம்மை உடனே மறந்துவிடுவான். ஆனதால் அவைகளை எவனாவது விரும்புவானா? உம்முடைய பாதத்தில் ஒட்டிய தூளிகளை அடைந்த எங்களுக்கு எந்தப் புருஷார்த்தந்தான் கிடைக்காது? (எல்லாம் கிடைக்கும்.) பகவானாகிய நீர் சகல பிராணிகளுடைய இருதயத்தில் அந்தர்யாமியாக இருந்தும், வெளியில் ஆசாரியரூபியாக இருந்தும், விஷய வாசனைகளை நிவர்த்தித்துத் தம்முடைய சுரூபத்தைப் பிரகாசிக்கச் செய்கிறீர். இப்படி உம்மால் செய்யப்பட்ட உபகாரத்தை நினைத்துக் கவிகள் (பிரம்மத்தை அறிந்தவர்கள்) பிரம்மதேவருடைய ஆயுளாகிய நூறு வருஷங்கள் பதிலுபகாரம் செய்தாலும் அதற்கு அது பதிலாகாது. மிக்க ஆனந்தத்துடன் உம்முடைய சுரூபத்தைத் தெரிந்துகொள்வதே அதற்குப் பதிலுபகாரமாகும்" என்று கேட்டார்.

7-34. இம்மாதிரி மிக்க பிரியத்துடன் கேட்ட உத்தவருடைய வார்த்தையைக் கேட்டு, உலகத்தை விளை

யாட்டுக் கருவியாகக் கொண்டவரும் சத்துவம் முதலிய குணங்களால் விஷ்ணு, பிரம்மா, ருத்திரன் என்ற மூன்று சரீரங்களுள்ளவருமான சர்வேசுவரன் அன்பு பொருந்திய சிரிப்புடன் பின்வருமாறு சொல்லலானார்; எப்படியெனில், "ஓ உத்தவ! (மிகுந்த க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய என்னுடைய தர்மங்களை உமக்குச் சொல்லுகிறேன். அவைகளைச் சிரத்தையுடன் அனுஷ்டித்தால் ஜயிக்கமுடியாத சம்சாரத்தை ஜயிக்கலாம். எந்தக் கர்மங்களைச் செய்தாலும், என்னையே நினைத்துக் கொண்டு என்னுடைய தர்மங்களிலேயே நோக்கமுள்ளவனாகி, பகவானுடைய சந்தோஷத்திற்காக இவைகளைச் செய்கிறேனென்று செய்யவேண்டும். என்னுடைய பக்தர்களான சாதுக்கள் வசிக்கும் புண்ணிய க்ஷேத்திரங்களில் வசிக்கவேண்டும்.) தேவர்கள், அசுரர்கள், மனுஷ்யர்கள் இவர்களில் யார் என்னிடத்தில் பக்தியுள்ளவர்களோ, அவர்கள் செய்த காரியங்களைச் செய்யவேண்டும். தனியாகவாவது மற்றவர்களுடன் சேர்ந்தாவது வருஷோத்ஸவம் முதலியவைகளைச் செய்வித்து கானம், நர்த்தனம், முதலிய ராஜோபசாரத்தால் என்னைப் பூசிக்கவேண்டும். மேலும் எல்லாப் பிராணிகளிடத்திலும், தன்னிடத்திலும் நானிருப்பதாகவும், உள்ளிலும் வெளியிலும் பூர்ணனாகவும், மற்றொன்றினாலும் மறைக்கப்படாமலும், ஆகாயம் போல் ஒன்றிலும் சம்பந்திக்காமலும் நானிருப்பதாகப் பார்த்து, சுத்த சித்தனாக இருக்கவேண்டும். ஓ மிக்க புத்தியுள்ளவரே! மேற்காட்டியபடி சகல பிராணிகளையும் நானென்று பாவித்து, பிராம்மணன், சண்டாளன், திருடன், பிராம்மண பக்தன், சூரியன், அக்கினி, கடுமையான சுபாவமுள்ளவன், சாந்தன் இவர்களைத் தன்னுடைய ஞானத்தால் சமமானவர்களென்று பார்ப்பவனே

பண்டிதனென்று என்னுடைய எண்ணம். (மனிதர்களி டத்தில் நானிருப்பதாக எப்பொழுதும் சிந்திக்கும் புருஷ னுக்குச் சண்டை, அசூயை, அவமானம், அகங்காரம் இவைகள் நிவர்த்தியாகும்.) மேலும் அப்படி இருப்ப வனைப் பார்த்து, அவனுடைய தோழர்கள் பரிகாசஞ்செய் தாலும் 'நான் மேலானவன், அவன் தாழ்ந்தவன்' என்ற தால் உண்டாகிய வெட்கம் நேர்ந்தாலும், அவைகளை விட்டு ஈசுவரன் ஜீவரூபியாகிய எல்லாவற்றிலும் இருக் கிறுரென்று நினைத்து நாய், சண்டாளன், விருஷபம், கழுதை முதலிய எல்லாவற்றையும் நமஸ்கரிக்கவேண்டும். எதுவரையில் சகல பிராணிகளும் பகவத் சுரூபமென்ற நிச்சயமுண்டாகவில்லையோ, அதுவரையில் வாக்கு, மனம் சரீரம் இவைகளால் மேற்காட்டியபடி அப்பியசிக்க வேண் டும்.) எல்லாவற்றையும் ஈசுவரனென்று பார்ப்பதாகிய ஞானத்தை அப்பியசித்தவனுக்கு எல்லா வஸ்துவும் பிரும்ம சுரூபமாகவே தோன்றும். அப்பொழுது எல்லா பந்தங்களும் அற்றுப்போம்; ஒன்றிலும் ஆசைப்படமாட் டான். (மனத்தாலும், வாக்கினுலும், சரீரத்தாலும், காமத்தாலும் என்னை ஆசிரயித்திருக்கும் மார்க்கமே மேலானதென்று என்னுடைய அபிப்பிராயம். மேற் காட்டிய என்னுடைய தர்மத்தை ஆரம்பித்தால் கொஞ்ச மேனும் கெடுதி ஏற்படாது. காமனையற்ற இந்தத் தர்ம மானது என்னுலேயே நிச்சயிக்கப்பெற்றது. (மனு முத லியவர்களால் சொல்லப்பட்டதன்று என்று கருத்து.) உலகத்தில் வீணை முயற்சியாலும் பயனை உத்தேசி யாமல் என்னிடத்தில் சமர்ப்பிக்கப்படுமானுல் அது தர்ம மாகவே ஆகிறது.) சத்திய சுரூபியும், மரணதர்மம் இல் லாதவருமான என்னை அசத்தியமும் நாசமுள்ளதுமான சரீரத்தால் அடைவதே புத்திமான்களுடைய புத்தி. அதுவே மனீஷா எனப்படுகிறது. ஓ சாதுவே! பக்தி

யோகத்தை விஸ்தாரமாகவும் சுருக்கமாகவும் உமக்குச் சொன்னேன். இது தேவர்களாலும் அடையாதது. ஸ்பஷ்டமான யுக்திகளுள்ள ஞானத்தைப்பற்றி அடிக்கடி உமக்குச் சொன்னேன். இதைத் தெரிந்துகொண்ட புருஷன் ஸம்சயங்களற்றவனாகி மோக்ஷத்தை அடைவான். உம்முடைய கேள்விக்கு நன்றாக என்னால் சொல்லப்பட்ட பதிலை எவன் மனத்தில் தரிக்கிறானோ அவன் பரப்பிரம்மத்தை அடைவான். (என்னால் உபதேசிக்கப்பட்ட தர்மம் சநாதனமானது, ரகசியமானது. இதனை என்னுடைய பக்தர்களுக்கு எவன் உபதேசிக்கிறானோ அந்தப் பிரும்மோபதேஷ்டாவான புருஷனுக்கு என்னுடைய ஆத்மாவைக் கொடுக்கிறேன்.) எவன் பரிசுத்தமான இந்த என்னுடைய உபதேசத்தை ஒவ்வொரு நாளும் உரக்கப் படிக்கிறானோ அவன் ஞானமாகிய தீபத்தால் என்னைத் தரிசித்துச் சுத்தனாவான். எவன் இதைச் சிரத்தையுடன் கேட்கிறானோ அவன் என்னிடத்தில் பக்தியை அடைகிறான்; கர்மத்தால் கட்டப்படமாட்டான். ஓ உத்தவ! தோழனே! பிரும்ம சுரூபத்தை நன்றாகத் தெரிந்துகொண்டீரா? உம்முடைய மனத்திலிருக்கும் சோகம், மோகம் இவைகள் நிவர்த்தியாயினவா? இதனை டம்பமுள்ளவனுக்கும், நாஸ்திகனுக்கும், வஞ்சகனுக்கும், கேட்க விருப்பமில்லாதவனுக்கும், பக்தியில்லாதவனுக்கும், துஷ்டனுக்கும் உபதேசிக்க வேண்டாம். மேற்காட்டிய தோஷங்களில்லாதவனும் பிராம்மண பக்தியுள்ளவனும் இதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற பிரியமுள்ளவனும், சாதுவும், சுத்தனுமாய் இருப்பவனுக்கு உபதேசிக்கலாம். சூத்திரர்களுக்கும், ஸ்திரீகளுக்கும் பக்தியிருக்குமானால் அவர்களுக்கும் உபதேசிக்கலாம். அமிருதத்தைக் குடித்தவனுக்கு

வேறு குடிக்கக்கூடிய வஸ்துவில் எப்படிப் பிரியமிருக்காதோ, அதுபோல இதனைத் தெரிந்துகொண்டவனுக்குத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயம் வேறே பாக்கியிராது. மேலும் ஞானம், கர்மம், யோகம், கிருஷி முதலிய வார்த்தை தண்ட நீதி இவைகளால் எவ்வளவு பிரயோசனம் மனிதர்களுக்கு ஏற்படுகிறதோ, அந்த நான்கு விதமான பயனாகவும் உமக்கு நான் இருக்கிறேன். மனிதன் எப்பொழுது எல்லாக் கர்மங்களையும் விட்டு என்னிடத்தில் ஆத்மாவைச் சமர்ப்பிக்கிறானோ அப்பொழுது எனக்குப் பிரியனாகிறான். மேலுமவன் மோக்ஷத்தை அடைந்து என்னுடைய ஆத்மாவாக ஆவதற்குத் தகுந்தவன் ஆகிறான்" என்றார்.

35—46. அதனைக் கேட்ட உத்தவர் உத்தமசுலோகராகிய பகவானுடைய வார்த்தையைக் கேட்டு அதிகச் சந்தோஷமடைந்து ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி அதனால் கண்டமடைத்துப் பேச முடியாதவராகி மௌனமாக இருந்து சிநேகத்தால் கலங்கிய மனத்தைத் தைரியத்தால் ஸ்திரப்படுத்திக்கொண்டு தம்மைக் கிருதார்த்தரென்று நினைத்து, பகவானுடைய பாதங்களில் தலைபடும்படி நமஸ்கரித்து, கைகூப்பி ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "என்னை ஆசிரயித்திருந்த மோகமாகிய இருள் உம்முடைய சன்னிதான மகிமையால் ஓடிப்போயிற்று. பிரம்மதேவருக்கும் பிதாவாகிய ஓ பகவன்! அக்கினியினருகில் இருப்பவனுக்குக் குளிராவது, இருளாவது இருக்குமா? ஞானமாகிய தீபம் உம்முடைய மாயையால் அபகரிக்கப் பெற்றிருந்தாலும் என்னிடத்திலுள்ள கருணையால் அதனைத் திருப்பிக் கொடுத்தீர். ஆனதால் உம்மால் செய்யப்பட்ட உபகாரத்தை நினைத்திருப்பவன் உம்முடைய பாதத்தைவிட்டு மற்றவைகளைச் சரணமடைவானா? மேலும் தாசார்கர்கள், விருஷ்ணிகள், அந்தகர்கள், சாத்

வதர்கள் ஆகிய இவர்களிடத்தில் எனக்குச் சினேகம் மிகவும் ஸ்திரமாக இருந்தது. அதுவும் சிருஷ்டியின் விருத்திக்காக உம்முடைய மாயையால் ஏற்பட்டதேயாம். அதனை ஆத்மஞானமாகிய கத்தியால் வெட்டினீர். ஓ மகாயோகியே! உம்மைச் சரணமடைந்திருக்கிறேன். உம்மை நமஸ்கரிக்கிறேன். தாமரை மலர்போன்ற உம்முடைய பாதங்களில் எனக்கு ஸ்திரமான பக்தி உண்டாகும்படியான உபாயத்தை எனக்கு உபதேசியும்" என்று கேட்டுக்கொண்டார்.

43—44. அதனைக் கேட்ட பகவான் உத்தவனை நோக்கி, "ஓ உத்தவ! என்னுடைய ஆஞ்ஞையால் பதரிகாச்ரமத்திற்குச் செல்லும். அவ்விடத்திலிருக்கும் அலகநந்தையைத் (கங்கை) தரிசிப்பதாலும், ஸ்நானஞ் செய்வதாலும், ஆசமனீயம் செய்வதாலும் சகல பாவங்களையும் நிவர்த்தித்துக்கொண்டு சுத்தராவீர். மேலும் நீர் மரவுரியை உடுத்திக்கொண்டும், காட்டிலுண்டான கிழங்கு முதலியவைகளைப் புசித்து, சுகத்தில் விருப்பமில்லாதவராகிக் குளிர், உஷ்ணம் முதலிய விஷயங்களைச் சகித்து நல்ல சுபாவமுள்ளவராகி இந்திரியங்களை ஜயித்து, ஒரே இடத்தில் சென்ற புத்தியால் மனத்தை அடக்கி, சாந்தராகி ஞானம், விஞ்ஞானம் இவைகளை அடைந்து என்னால் உபதேசிக்கப்பெற்றதை மனனஞ்செய்யும். அப்படி மனத்தால் விசாரித்து வாக்கு, சித்தம் ஆகிய இவைகளை என்னிடத்தில் செலுத்தி, என்னுடைய தர்மத்திலேயே நோக்கமுள்ளவராக இருக்கவேண்டும். அதன்பின் முக்குணங்களால் ஏற்பட்ட வகைகளைத் தாண்டி என்னை அடைவீர்" என்று அநுக்கிரகித்தார்.

45—47. எவரைத் தியானஞ்செய்தால் ஸம்ஸாரம் நிவர்த்தி யடையுமோ, அந்த ஸ்ரீ கிருஷ்ணனால் மேற்

காட்டிய வண்ணம் அநுக்கிரகிக்கப்பெற்ற உத்தவர் ஸ்ரீகிருஷ்ணனைப் பிரதக்ஷிணஞ் செய்து அவருடைய பாதங்களில் தமது தலை படும்படி நமஸ்காரஞ் செய்தார். மேலும் அவர் சுகதுக்கங்களற்றவராளுலும், அந்தச் சமயத்தில் பகவானை விட்டுப் பிரிய மனமில்லாமல் கண்ணீரைப் பெருக்கினுர். பின்னுமவர் ஸ்ரீ கிருஷ்ணன் மீதுள்ள பிரியத்தால் அவரை விட்டுப் பிரிய மனமில்லாமலு மிருந்தார். அதனைக் கண்ணுற்ற ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடைய பாதுகைகளைக் கொடுத்தார். அவைகளை உத்தவர் தலையில் வைத்துக்கொண்டு அடிக்கடி பகவானை நமஸ்கரித்து, பதரிகாசிரமத்தை நோக்கிப் புறப்பட்டார். மகா பாகவதராகிய உத்தவர் பகவானையே இருதயத்தில் தியானித்துக்கொண்டு பதரிகாசிரமஞ் சென்று தவஞ் செய்து பகவான் அநுக்கிரகித்தபடி பரப்பிரம்மமாக ஆனுர்.

48—49. யோகேசர்களால் சேவிக்கப்பெற்ற பாதங்களுள்ள ஸ்ரீ கிருஷ்ணனுல் மேற்காட்டியவண்ணம் பாகவதராகிய உத்தவருக்கு ஞானமாகிய அமிருதம் கொடுக்கப்பட்டது (உபதேசிக்கப்பட்டது). அதுவும் பக்தி மார்க்கமும் ஒன்றே. (ஆனந்த சமுத்திரத்தால் கிடைத்தது.) அப்படிப்பட்ட இதனை எவன் சிரத்தையுடன் கொஞ்சமாவது சேவிக்கிருனே, அவனுடைய சம்பந்தமுள்ளவனும் மோக்ஷத்தை அடைவான். வண்டானது புஷ்பத்திற்குக் கெடுதியில்லாமலேயே அதன் ரஸத்தை (தேனை) எப்படிக் கிரகிக்கிறதோ, அப்படி பகவான் தம்மால் வெளியிடப்பட்ட வேதத்தை அநுசரித்து அதன் சாரமாகிய ஞான, விஞ்ஞானத்தையும், சமுத்திரத்திலிருந்து அதன் சாரமாகிய அமிருதத்தையும் எடுத்து அதற்கு அதிகாரிகளான தம்முடைய சேவகர்களுக்குக் கொடுத்தார். (பிரவிருத்தி மார்க்கத்தில்

நோக்கமுள்ள தேவர்களுக்கு அமிருதத்தைக் கொடுத்து, கிழத்தன்மை, மரணம் இவைகளால் நேரும் பயத்தை நிவர்த்தித்தார். நிவிருத்தி மார்க்கத்தில் நோக்கமுள்ள உத்தவர் முதலிய அதிகாரிகளுக்கு ஞானமிருதத்தைக் கொடுத்து சகல பயங்களையும் நிவர்த்தித்தார். அப்படிப்பட்ட விஷ்ணுவென்று பெயர்பெற்றவரும், புராண புருஷருமான புருஷோத்தமரை நமஸ்கரிக்கின்றேன்.

## அத்தியாயம் 30

### ஸ்ரீ கிருஷ்ணன் யது வம்சத்தைச் சங்கரித்தது

1—4. பரீக்ஷித்து மஹாராஜன் சுகரை நோக்கி, "பாகவதர்களுக்குள் சிறந்தவராகிய உத்தவர் பதரிகாவனம் சென்றபின் சகல பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் என்ன செய்தார்? யது குலத்திற்குப் பிராம்மண சாபம் நேர்ந்ததால் தாமும் அந்தச் சாபத்தை யனுசரித்து சகல ஜனங்களுக்கும் பிரியமான தம்முடைய சரீரத்தை எப்படி விட்டார்? எந்தச் சரீரத்தைப் பார்த்த ஸ்திரீகள் தங்கள் நேத்திரங்களை அதிலிருந்து திருப்பிக்கொள்ள முடியாதவர்களாக இருந்தார்களோ, ஸாதுக்கள் எந்தச் சரீரத்தைக் காதுகளின் வழியாக மனத்தில் வைத்துக் கொள்ளுகிறார்களோ, அவர்களுடைய மனத்தை விட்டு, எது நகருகிறதில்லையோ, எதனுடைய காந்தியைப்பற்றிக் கவிகள் வர்ணித்ததால் அந்தக் காவியம் மேன்மையை அடைகிறதோ, பாரத யுத்தத்தில் அர்ஜுனனுடைய இரதத்தி லுட்கார்ந்திருந்த எந்தச் சரீரத்தைத் தரிசித்து மரணமடைந்தவர்கள் பகவத் சாரூப்யத்தை அடைந்தார்களோ, அந்தச் சரீரம் பகவானால் எப்படி விடப்பட்டது?" என்று கேட்டார்.

5—25. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "ஸ்ரீ கிருஷ்ணன் துவாரகா நகரத்தில் நேர்ந்த அபசகுனங்களைப் பார்த்து ஸுதர்மா வென்ற சபையிலிருக்கும் யாதவர்களை நோக்கி, "மிக்க உற்பாதங்கள் இதோ காணப்படுகின்றன. இதனால் எல்லோருக்கும் நாசம் சமீபித்திருக்கிறதென்று தெரியவருகிறது. நம்முடைய குலத்திற்குப் பிராம்மணர்களுடைய சாபமும் ஏற்பட்டிருக்கிறது. அது நிவர்த்திக்க முடியாதது. ஆனதால் இனி இவ்விடத்தில் ஒரு முகூர்த்த காலங்கூடத் தாமதிக்கக்கூடாது. ஸ்திரீகளும், பாலர்களும், வயது முதிர்ந்தவர்களும் சங்கத்வாரமென்ற விடத்திற்குப் போகட்டும். நாமெல்லோரும் பிரபாஸ க்ஷேத்திரத்திற்குப் போவோம். அவ்விடத்தில் ஸரஸ்வதீ நதி மேற்கு முகமாக ஓடுகிறது. இவ்விடத்தில் ஸ்நானஞ்செய்து சுத்தர்களாகி, உபவாஸமிருந்து மிக்க சாவதானர்களாகி, தேவதைகளுக்கு அபிஷேகம், அலங்காரம் முதலியவைகளைச் செய்து பூஜிப்போம். மிகுந்த அதிருஷ்டமுள்ளவர்களான பிராம்மணர்களையும் பூஜிப்போம். கோதானம், பூமி தானம், சுவர்ண தானம், வஸ்திர தானம், கஜ தானம், அசுவ தானம், கிருக (வீடு) தானம், ரததானம் இவைகளைச் செய்வோம். தேவதைகளையும், பிராம்மணர்களையும், பசுக்களையும் பூஜித்தால் க்ஷேமமுண்டாகும்; அரிஷ்டம் நிவர்த்தியாகும்" என்றார். அதனைக் கேட்ட யாதவர்களுக்குள் பெரியோர்கள் அப்படியே செய்வோமென்று சொல்லி, கப்பல்களிலேறி, சமுத்திரத்தைத் தாண்டி ரதங்களின் மீதேறி, பிரபாஸஞ் சென்றார்கள். அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணனால் சொல்லப்பட்டபடியே க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய எல்லாக் கர்மங்களையும் செய்தார்கள். பின்பு அவர்கள் தெய்வச் செயலால் புத்தி மயக்கமடைந்து மைரேயமென்ற உத்தமமான மதுவைக்

குடித்தார்கள். அதைக் குடித்தவர்களுடைய மனம் பிரமிக்கும். அவர்கள் இயற்கையில் மிக்க சூரர்கள்; மதுபானஞ் செய்து மதத்தை அடைந்தார்கள்; ஸ்ரீ கிருஷ்ணனுடைய மாயையால் மூடர்களானார்கள். அதனால் ஒருவரோடு ஒருவர் சண்டைசெய்து மிக்க கோபத்துடன் கத்தி, வில், பாணம், கதாயுதம், தோமரம் ஆகிய இவைகளால் அடித்துக்கொண்டார்கள். யானை, குதிரை, ரதம், கோவேறு கழுதை, ஒட்டகம், விருஷபம், காலாட்கள் முதலியவைகளுடன் ஒருவரையொருவர் எதிர்த்தார்கள். இப்படி அவர்கள் அடித்துக்கொண்டது காட்டில் யானைகள் தந்தங்களால் அடித்துக்கொண்டாற் போலிருந்தது. பிரத்யும்னன் ஸாம்பனுடனும், அக்ரூரர் போஜன் இவர்களும், அனிருத்தர் ஸாத்யகி இவர்களும், சுபத்திரன், ஸங்கிராமஜித் இவர்களும், ஸுசாருகதன் இவர்களும், ஸுமித்திரன் ஸுரதன் இவர்களும் சேர்ந்து யுத்தஞ் செய்தார்கள். பின்னும் உல்முகன், ஸஹஸ்ரஜித், பானு முதலிய மற்றவர்களும் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டார்கள். இப்படி அவர்களுக்கு மோகமுண்டாவதற்கு ஸ்ரீ கிருஷ்ணனுடைய மாயையே காரணம். தாசார்ஹர்கள், போஜர்கள், அந்தகர்கள், விருஷ்ணிகள், ஸாத்வதர்கள், மதுக்கள், (அற்புதக் கணக்கான) சூரசேனர்கள் ஆகிய எல்லாரும் சிநேகத்தை விட்டு அடித்துக்கொண்டார்கள். புத்திரர்கள் பிதாக்களுடன் சண்டைசெய்தார்கள். மேலும் ஸகோதரன், ஸகோதரியின் புத்திரன், பெண்ணின் புத்திரன், பிதாவின் ஸகோதரன், அம்மான், மித்திரன், பந்து, ஞாதியென்ற சிநேகத்தை மறந்து அடித்துக்கொண்டார்கள். பின்பு பாணங்களும், விற்கழிகளும், ஆயுதங்களும் ஒடிந்தன. அப்பொழுது சமுத்திரக் கரையில் முளைத்திருக்கும் கோரைகளைப் பிடுங்கிக்கொண்டார்கள்.

அவைகள் வஜ்ரம்போலும் தோமரம்போலும் கெட்டியான வையாக இருந்தனவானதால் அவைகளை யெடுத்துக் கொண்டு அடித்துக்கொண்டார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் சண்டைசெய்யவேண்டாமென்று அவர்களைத் தடுத்தார். அப்படியும் அதனைக் கேளாமல் ஸ்ரீ கிருஷ்ணனையும், பலராமனையும் சத்ருவாக நினைத்து அவர்கள் அடிப்பதற்காக ஓடிவந்தார்கள். இப்படி ஸ்ரீ கிருஷ்ணனுடைய மாயையால் மோகித்து, பிராம்மண சாபத்தை வியாஜமாகக்கொண்டு யாதவர்கள் கோரைகளால் அடித்துக்கொண்டு மரணமடைந்தார்கள். மூங்கில் ஒன்றோடொன்று உராய்வதால் உண்டாகும் அக்னி அதனை எரிப்பதுபோல் அவர்களுடைய சண்டையாலுண்டான கோபம் அவர்களுடைய குலத்தை நாசஞ் செய்தது. இப்படி யாதவ குலம் நாசமான பின் ஸ்ரீ பகவான் பூமியின் பாரம் நிவர்த்தியடைந்ததென்று நினைத்தார்.

26—32. அப்பொழுது பலராமன் சமுத்திரக்கரையில் பரமபுருஷனைத் தியானஞ்செய்வதாகிய யோகத்தைச் செய்து, பரமாத்மாவிடத்தில் தமது ஆத்மாவைச் சேர்த்து, பூலோகத்தைவிட்டுப் பரலோகஞ் சென்றார். இப்படி பலராமன் சென்றபின் ஸ்ரீ கிருஷ்ணன் அசுவத்த மரத்தின் அடியில் மௌனமாக உட்கார்ந்தார். அப்பொழுது பகவானுடைய சுரூபம் நான்கு கைகளுள்ளதாகவும், தம்முடைய காந்தியால் பிரகாசிப்பதும், புகையில்லாமல் தணலாக இருக்கும் அக்னிபோல் திக்குகளில் இருளைப்போக்கி பிரகாசிக்கச் செய்கிறதாகவும், ஸ்ரீ வத்ஸமென்ற அடையாளமுள்ளதாகவும், மேகம்போல் கறுத்த திருமேனியுள்ளதும், சுவர்ணம்போலப் பிரகாசிக்கும் தேஜஸுள்ளதாகவும், மனோகரமான இரண்டு பீதாம்பரங்களைத் தரித்ததாகவும், அழகிய புன்சிரிப்புள்ள தாமரை

மலர்போன்ற முகமுள்ளதாகவும், கறுத்தும் சுருண்டவையுமான தலைமயிர்களுள்ளதாகவும், தாமரை மலர்கள் போல அழகான நேத்திரங்களுள்ளதாகவும், பிரகாசிக்கும் மகர குண்டலங்களுள்ளதாகவும், கடிசூத்திரம் (அரைஞாண்), யக்ஞோபவீதம், கிரீடம், வளை, தோள்வளை, ஹாரம், பாதஸரம், முத்திரை, கௌஸ்துபம் ஆகிய இவைகளால் அலங்கிருதமாகவும், வனமாலையுள்ளதாகவு மிருந்தது. மேலும் சக்கரம் முதலிய ஆயுதங்கள் திவ்ய ரூபத்துடன் பகவானை உபாசித்துக்கொண்டிருந்தன. அப்போது பகவான் தாமரைமலர்போலச் சிவந்திருக்கும் இடது பாதத்தை வலது தொடையில் வைத்துக்கொண்டிருந்தார்.

33—38. அந்தச் சமயத்தில் ஜரனென்ற ஒரு வேடன் காட்டில் சஞ்சரித்து வரும்பொழுது ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதத்தைப் பார்த்து, அதை மானுடைய முகமென்று நினைத்து ஒரு பாணத்தால் அடித்தான். அந்தப் பாணத்தின் நுனியில் இரும்பு உலக்கையில் எஞ்சிய துண்டு வைக்கப்பட்டிருந்தது. பின்பு அந்த வேடன் நான்கு கைகளுடன் பிரகாசிக்கும் பகவானைப் பார்த்துப் பயந்து அவருடைய சமீபஞ் சென்று அவரை நமஸ்கரித்தான். பின்னுமவன் பகவானை நோக்கி, "உத்தம சுலோக! பிரபுவே! மதுசூதனா! அறியாத் தன்மையால் உமக்கு அபராதஞ்செய்தேன். பாவியான என்னுடைய குற்றத்தைப் பொறுத்துக்கொள்ள வேண்டும். எவரை நினைத்தால் அஞ்ஞானமாகிய இருள் விலகுமென்று சொல்லுகிறார்களோ, அப்படிப்பட்ட மஹாவிஷ்ணுவாகிய உமக்கு அபராதஞ் செய்தேன். ஆனதால் நான் இனி இம்மாதிரி செய்யாமலிருக்கும்படி பாவியும், வேடனுமான என்னைத் தண்டியும். உம்முடைய மாயையின் காரியத்தைப் பிரம்மதேவரும், அவருடைய

புத்திரர்களான ருத்திரர், பிராஜாபதிகள், வேதத்தைக் கண்டுபிடித்த மஹரிஷிகள் ஆகிய எல்லாரும தெரிந்து கொள்ளவில்லை. மிக்க பாவியான எனக்கு அந்த உம்முடைய மாயாகாரியம் எப்படித் தெரியும்?" என்று கேட்டுக்கொண்டான்.

39—40. அதனைக் கேட்ட பகவான், வேடனை நோக்கி "அட! ஜரா! பயப்படவேண்டாம். எழுந்திரு. என்னுடைய அபிப்பிராயப்படி நீ செய்தாய். என்னுடைய உத்தரவின்படி புண்ணியசாலிகள் செல்லுமிடமான சுவர்க்க லோகத்திற்குப் போ" என்று அனுக்கிரகித்தார். இப்படி தமதிஷ்டப்படி மனித வடிவங்கொண்ட பகவான் அநுக்ரகித்தவுடன் அந்த வேடன் மூன்று தடவை பகவானைப் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து விமானத்தின் மீதேறி சுவர்க்கலோகஞ் சென்றான்.

41—50. அப்பொழுது தாருகன் ஸ்ரீ கிருஷ்ணனைத் தேடி, துளஸியின் வாசனையுள்ள காற்றினால் பகவானிருப்பிடத்தைத் தெரிந்துகொண்டு அவ்விடம் வந்து ரதத்தை விட்டிறங்கி, அசுவத்த மரத்தின் அடியில் சக்கரம் முதலிய ஆயுதங்களால் உபாசிக்கப் பெற்றுப் பிரகாசிக்கும் பிரபுவைத் தரிசித்து நமஸ்கரித்தான். பின்னுமவன் பகவானை நோக்கி, "ஓ பிரபுவே! உம்மைப் பாராமல் என்னுடைய இந்திரியங்கள் சக்தியற்று இருளடைந்தன. இரவில் சந்திரன் அஸ்தமயத்தை அடைந்தபின் எப்படி பதார்த்தங்கள் கண்ணுக்குப் புலப்படவில்லையோ, அப்படி திக்குகள் தெரியவில்லை; மனத்திற்கு சந்தோஷமுண்டாகவில்லை" என்றான். இப்படி தாருகன் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது கருடத்வஜமுள்ள ரதமானது ஆகாயஞ் சென்றது. சக்கரம் முதலிய ஆயுதங்களும் அதன்பின் சென்றன. அதனைக் கண்ணுற்ற

தாருகன் மிகவும் ஆச்சரியமடைந்தான். அப்படிப்பட்ட தாருகனை நோக்கிக் கிருஷ்ணன், "ஓ ஸாரதியே! துவாரகா நகரத்திற்கு நீ போய் நம்முடைய பந்துக்களுக்குப் பலராமனுடைய மரணத்தையும், மற்றவர்களுடைய நாசத்தையும், என்னுடைய தசையையும் சொல்; நீங்கள் இனி துவாரகையில் வசிக்கவேண்டாம். என்றால் விடப்பட்ட துவாரகா நகரத்தைச் சமுத்திரம் ஜலத்தால் கவர்ந்துகொள்ளும். ஆனதால் அவரவர்களுடைய தனம் முதலியவைகளை யெடுத்துக்கொண்டு பந்துக்களுடன் அர்ஜுனரால் காப்பாற்றப்பட்டு நீங்களெல்லாரும் இந்திரப்பிரஸ்தத்திற்குப் போகவேண்டும். நீ என்னுடைய தர்மத்தை அடைந்து, இவை என்னுடைய மாயையால் செய்யப்பட்டவை யென்பதைத் தெரிந்துகொண்டு, ஞானநிஷ்டனாகிச் சாந்தியை அடையவேண்டும்" என்று ஆஞ்ஞாபித்தார். அதனைக் கேட்ட தாருகன் பகவானை விட்டுப் பிரிய மனமில்லாதவனானாலும் அவருக்குப் பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்து அடிக்கடி அவருடைய பாதங்களைத் தன் தலையில் வைத்துக்கொண்டு துவாரகா நகரஞ் சென்றான்.

# அத்தியாயம் 31

## பகவான் வைகுண்டம் சென்றது

1—41. பின்பு பிரம்மதேவரும், பார்வதியுடன் பரம சிவனும், இந்திரன் முதலிய தேவதைகளும், மகரிஷிகளும், பிரஜாபதிகளும், பிதிருக்களும், ஸித்தர்களும், கந்தர்வர்களும், வித்தியாதரர்களும், உரகர்களும், சாரணர்களும், யட்சர்களும், ராட்சதர்களும், கின்னரர்களும், அப்ஸரசுக்களும் பகவான் வைகுண்டஞ் செல்வதைப் பார்ப்பதற்காக மிகுந்த சந்தோஷத்துடன் அவ்விடம் வந்தார்கள். மேலுமவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அவதாரங்களைப்பற்றியும், சரித்திரங்களைப்பற்றியும் கானஞ் செய்தார்கள். புஷ்பங்களை வர்ஷித்தார்கள். ஆகாயம் அவர்களுடைய விமானங்களால் வியாபித்திருந்தது. இப்படி மிகுந்த பக்தியுடன் தேவர்கள் வந்து கூடினார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடைய விபூதிகளான அந்தத் தேவர்களைப் பார்த்துவிட்டு, தாமரை மலர் போன்ற நேத்திரங்களை மூடிக்கொண்டார். (ஒவ்வொரு தேவர்களும் தங்கள் உலகத்திற்குப் பகவானை அழைத்துப்போவதற்காக வந்திருப்பதால் சமாதி செய்வதென்ற வியாஜமாகக் கண்களை மூடிக்கொண்டாரென்று கருத்து.) ஆனால் யோகிகள் யோகதாரணையின் மகிமையால் சரீரத்தை யெரித்து உலகாந்திரத்தை அடைவதுபோலில்லாமல் பகவான் சகல உலகங்களுக்கும் இருப்பிடமான அழகிய தமது சரீரத்துடனேயே தமது உலகஞ் சென்றார். அப்பொழுது தேவ துந்துபிகள் முழக்கப்பட்டன. ஆகாயத்திலிருந்து புஷ்பமாரி பெய்தது; சத்யம், தர்மம், திருதி, கீர்த்தி, ஸ்ரீ ஆகிய இவைகள் ஸ்ரீ கிருஷ்ணன்பின் சென்றன. ஆகாயத்தில் செல்லுகின்ற மின்னலுடைய கதி எப்படி மனிதர்களுக்குத்

தெரியவில்லையோ, அப்படி பகவான் தம்முடைய தேஜஸில் பிரவேசித்தது பிரம்மா முதலிய தேவர்களுக்கும் தெரியவில்லை. பிரம்மா, ருத்ரன் முதலிய தேவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய யோக மகிமையைப்பற்றி ஆச்சரியமடைந்து அவரைப்பற்றிச் சிலாகித்துக்கொண்டு தங்கள் தங்கள் இருப்பிடஞ் சென்றார்கள். ஓ பரீக்ஷித்து மகாராஜனே! பரமாத்மாவாகிய பகவானுக்கு உற்பத்தியில்லை. அப்படிப்பட்ட பகவான் இந்த உலகத்தைப் படைத்து, அதில் தாம் அநுப்பிரவேசித்து, அத்துடன் விளையாடி, கடைசியில் அதனைச் சங்கரித்துத் தமது மகிமையிலிருக்கிறார். இப்படி பகவான் அவதரிப்பதும், உலோகாந்தரஞ் செல்வதும் நடன் (வேஷதாரி) வேஷம் போட்டுக் கலைப்பது போன்றதென்று தெரிந்துகொள்ளும். மனுஷ்யனாக அவதரித்த பகவான் யமலோகஞ் சென்ற ஆசாரியருடைய குழந்தையை அதே சரீரத்துடன் திருப்பிக் கொண்டுவந்தார். பிரம்மாஸ்திரத்தால் எரிக்கப்பட்ட உம்மைக் கர்ப்பத்தில் காப்பாற்றினார். யமனை ஜயித்தவரான ருத்திரனையும் (பாணஸுர யுத்தத்தில்) ஜயித்தார். ஜரனென்ற வேடனை இந்த மனித சரீரத்துடன் புண்ணிய லோகம் அனுப்பினார். இவ்வளவு மகிமையுள்ள பகவானுக்குத் தமது சரீரத்தைக் காப்பாற்றிக்கொள்வது பெரிய காரியமல்ல. ஆனாலும் மனித சரீரத்தால் என்ன பிரயோசனம் உண்டாகப்போகிறது; ஒன்றுமில்லையென்பதைக் காண்பித்துக்கொண்டு தமது சரீரத்தை மனுஷ்யலோகத்தில் வைக்கவில்லை. அவர் எல்லாச் சக்தியுமுள்ளவர்; சகல ஜகத்தையும் வேறு ஒத்தாசையின்றிப் படைத்துக் காப்பாற்றிச் சங்கரிப்பவர்; எவன் காலையில் எழுந்திருந்து சுத்தனாகிப் பக்தியுடன் பகவான் வைகுண்டஞ் சென்றதாகிய இந்தக் கதையைப் படிக்கிறானோ அவன் அந்தப் பகவானை அடைவான்.

15—21. தாருகன் துவாரகைக்குச் சென்று வசுதேவர், உக்கிரசேனர் இவர்களுக்கு நமஸ்காரஞ்செய்து ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுப் பிரிந்ததால் அழுதான். விருஷ்ணிகள் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டு மரணமடைந்ததையும், பகவான் வைகுண்டஞ் சென்றதையும் தெரிவித்தான். அதனைக் கேட்டு அவர்கள் மிக்க துக்கத்தை அடைந்து மனம் நடுங்கி, பந்துக்கள் மரணமடைந்திருக்குமிடத்திற்குச் சீக்கிரமாகச் சென்றார்கள். மரணமடைந்திருக்கும் பந்துக்களைப் பார்த்தார்கள். வசுதேவரும் தேவகியும் ராமகிருஷ்ணர்களைக் காணாமல் பிராணனை விட்டார்கள். ஸ்திரீகள் எல்லாரும் தங்கள் தங்கள் கணவர்களுடைய சரீரத்தைக் கட்டிக்கொண்டு உடன்கட்டையேறிச் சரீரத்தை விட்டார்கள். பலராமனுடைய பத்தினிகளும் அக்னியில் பிரவேசித்தார்கள். வசுதேவருடைய பத்தினிகள் அவருடைய சரீரத்தையும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய நாட்டுப்பெண்கள் பிரத்யும்னன் முதலியவர்களுடைய சரீரங்களையும் ஆலிங்கனஞ்செய்துகொண்டு அக்கினிப் பிரவேசஞ் செய்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனுடைய பத்தினிகளாகிய ருக்மிணி முதலியவர்கள் பகவானையே தியானஞ்செய்து தன்மயர்களாகி அக்னிப் பிரவேசஞ்செய்தார்கள்.

21—26. அர்ஜுனர் தம்மிடத்தில் மிக்க பிரியமுள்ள தோழராகிய பகவானை விட்டுப் பிரிந்து மிக்க துக்கத்தை அடைந்து அவரால் உபதேசிக்கப்பெற்ற கீதா வாக்கியங்களை நினைத்து, மனத்தைச் சமாதானஞ் செய்துகொண்டார். பின்பு மரணமடைந்த பந்துக்களுக்குப் புத்திரன் முதலியவர்களில்லாததால் தாம் அவர்களுக்கு உத்தரக் கிரியைகளை விதிப்படி செய்து முடித்தார். பகவான் வைகுண்டஞ் சென்றபின் க்ஷணத்திற்குள் துவாரகா நகரம் சமுத்திரத்தில் மூழ்கிவிட்டது.

பகவானுடைய அரண்மனையில் பகவானுடைய சான்னித்தியம் எப்பொழுதுமிருப்பதால் அது மாத்திரம் சமுத்திரத்தில் முழுகவில்லை. அந்தப் பகவானுடைய அரண்மனையை நினைத்த மாத்திரத்தில் சகல பாபங்களும் நிவர்த்தியாகின்றன; சகல க்ஷேமங்களும் கிடைக்கின்றன. பின்பு அர்ஜுனர், எஞ்சிய ஸ்திரீகள், சிறுவர்கள், வயது முதிர்ந்தவர்கள் ஆகிய இவர்களை இந்திரப்பிரஸ்தத்திற்கு அழைத்து வந்து வஜ்ரனுக்கு (வஜ்ரனென்ற ஒருவர் எஞ்சியிருந்தார்.) பட்டாபிஷேகஞ் செய்தார். பின்பு உம்முடைய பிதாமகர்களான தர்மபுத்திரர் முதலியவர்கள் அர்ச்சுன முகமாக பந்துக்களுடைய மரணத்தைக் கேட்டு உமக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்து உலோகாந்தரஞ் சென்றார்கள்.

27—28. தேவர்களுக்கும் தேவராகிய ஸ்ரீ மஹாவிஷ்ணு உலகத்தில் அவதரித்து நடத்திய சரிதங்களை சிரத்தையுடன் எவன் படிக்கிறானோ, அவன் சகல பாபங்களுமற்றுச் சுத்தனாவான். இப்படி பகவான் கிருஷ்ணனாக அவதரித்துச் செய்த பால்ய சரித்திரம் முதலிய சரிதங்கள் க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியவை; மிக்க அழகானவை; இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் சுகத்தைக் கொடுக்கக்கூடியவை; அவைகளைச் சிரத்தையுடன் படித்து, வாக்கினால் உச்சரிக்கும் மனிதன் பரமஹம்ஸர்களுடைய கதியை அடைவான்.

சுபம்!

Sri Mahabharatham Press, Kumbakonam. Feb. 1950

உ

|| ஸ்ரீகிருஷ்ணாய பரமாத்மனே நம: ||

# ஸ்ரீமத் பாகவதம்

(தமிழ் வசனம்)



## —: பன்னிரண்டாவது ஸ்கந்தம் :—

மொழிபெயர்ப்பாளர் :

இஞ்சிக்கொல்லை

பண்டிட், ஆர். சிவராம சாஸ்திரிகள்

ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ்

ஸ்ரீ வேதவிநாயகர் தெரு : : கும்பகோணம்

 [ விலை ரூ. 1—0—0

# பொருளடக்கம்

# ஸ்ரீமத் பாகவதம்

## ஸ்கந்தம் 12

### அத்தியாயம் 1

#### கலியில் உண்டாகும் அரசர்கள்

பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஓ மகரிஷியே! யது வம்சத்துக்கு அலங்காரமாகவிருந்த ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடைய உலகம் சென்றபின் பூமியில் யாருடைய வம்சமிருந்தது? அதனைச் சொல்லும்" என்று கேட்டார்.

2—19. [ஜராசந்தனுடைய புத்திரன் சகதேவன்; அவனுடைய புத்திரன் மார்ஜாரி என்பவன். அவனுடைய புத்திரன் சுருதசிரவஸ் என்று ஆரம்பித்து ரிபுஞ்ஜயன் வரையில் இருபது அரசர்கள் இனி உண்டாகப்போகிறார்கள் என்று ஒன்பதாவது ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டது. அதற்கு மேல் உண்டாகும் சந்ததிகள் இந்த அத்தியாயத்தில் நிரூபிக்கப்படுகின்றன.] பிருகத்ரதருடைய வம்சத்திலுண்டாகும் அரசர்களுக்குள் கடைசியான ரிபுஞ்ஜயருடைய மந்திரியாகிய சுனகரென்பவர் ரிபுஞ்ஜயரைக் கொன்று தம்முடைய புத்திரனை பிரத்தியோதனன் என்பவனை அரசனாகச் செய்யப்போகிறார். [ரிபுஞ்ஜயனுக்கே புரஞ்ஜயனென்றும் பெயருண்டு.] அவருடைய புத்திரன் அலகன். அவனுடைய புத்திரன் விசாகயூபனென்பவன் அரசனாவான். அவனுடைய புத்திரன் ஜனகனென்பவன் [ராஜகனென்று சில புத்தகங்களிலிருக்கிறது). அவனுடைய புத்திரன் நந்திவர்த்தர். அவருக்கு ஐந்து புத்திரர்கள். அவர்களுக்குப் பிரத்யோதனர்களென்று பெயர். மேற்காட்டிய அரசர்கள் 138 வருஷங்கள் ராஜ்யபாலனஞ் செய்வார்கள் (128-வருஷங்களென்று சில புத்த

கங்களிலிருக்கிறது). மேற்காட்டிய பிரத்யோதனர்களுக்குச் சிசுநாகரும், அவருக்குப் பக்ஷரும், அவருக்கு க்ஷேமதன்வாவும், அவருக்கு க்ஷேத்திரஜ்ஞரும், அவருக்கு அஜாதசத்ருவும், அவருக்கு விதிசாரரும், அவருக்குத் தர்ப்பகரும், அவருக்கு ஆஜேயரும், அவருக்கு நந்திவர்த்தனரும், அவருக்கு மஹா நந்தியும் புத்திரர்களாக ஜனிப்பார்கள். மேற்காட்டிய பத்து அரசர்களுடைய ராஜ்யபாலன காலம் முந்நூற்றறுபது (360) வருஷங்களென்று தெரிந்துகொள்ளும். மஹாநந்தியின் புத்திரர் நந்தரென்பவர். அவர் மிக்க பலமுள்ளவர்; அளவற்ற ஐச்வரியமுள்ளவர்; மஹாபத்மக் கணக்கான சைனியத்திற்கு அதிபதி; சூத்திர ஸ்திரீயின் கர்ப்பத்தில் ஜனித்தவர்; க்ஷத்திரிய குலத்தை நாசஞ் செய்பவர்; அதன் பின்வரும் அரசர்கள் அநேகமாக சூத்திரர்களாகவும், அதர்மபுத்தியுள்ளவர்களாகவு மிருப்பார்கள். அந்த நந்தரென்பவர் மஹாபத்மக் கணக்கான சைனியங்களுடன் தம்முடைய ஒரு குடையின் கீழ் பூமி களையும் பரிபாலிப்பார். அவர் இரண்டாவது பரசுராமனென்னவே யிருப்பார். அவருடைய சாஸனத்தை ஒருவராலும் மீற முடியாது. அந்த நந்தருக்குச் சுமாலி முதலிய எட்டுப் புத்திரர்கள் ஜனிப்பார்கள். அவர்கள் நூறு வருஷங்கள் ராஜ்யபாலனம் செய்வார்கள். அப்பொழுது ஒரு பிராம்மணன் (கௌடில்யன்= சாணக்கியன்) மிக்க பிரசித்தியுள்ள ஒன்பது நந்தர்களை (நந்த னையும் அவருடைய எட்டுக் குமாரர்களும்) நாசஞ்செய்வார். அதன்பின்பு மௌரிய வம்சத்திய அரசர்கள் பூமியைப் பரிபா லிப்பார்கள். அந்தப் பிராம்மணர் மௌரியர்களில் முதல்வ னாகிய சந்திரகுப்தருக்கு ராஜ்யாபிஷேகம் செய்விப்பார். அந்தச் சந்திரகுப்தருக்கு வாரிசாரரென்றும், அவருக்கு அசோகவர்த்தனனென்றும், அவருக்கு ஸுயசஸ் என்றும், அவருக்கு சம்யதனென்றும், அவருக்குச் சாலிசூகரென்றும், அவருக்குச் சோம சர்மாவென்றும், அவ ருக்குச் சததன்வாவென்றும், அவருக்கு பிருகத்ரதரென்றும்

புத்திரர்கள் ஜனிப்பார்கள். மேற்காட்டிய மௌரியர்களென்ற பத்து அரசர்களின் காலம் நூற்றுமுப்பத்தேழு வருஷங்கள். (மௌரியர்கள் ஒன்பது அரசர்கள்தான் மேலே காட்டப்பட்டிருக்கிறார்கள். ஆனாலும் சந்திரகுப்தனுடைய பிதாவைச் சேர்த்துப் பத்து அரசர்களென்று கணக்கிடப்பட்டிருக்கிறது; அல்லது சதரதர் என்று ஒருவர் அந்த வம்சத்தைச் சார்ந்தவரென்று பராசரர் முதலியவர்கள் சொல்லியிருப்பதால் அவரை யநுசரித்துப் பத்து அரசர்களென்று சொல்லப்பட்டிருக்கிறதென்று கருத்து.) பிருகத்ரதனுடைய சேனாபதியும், சுங்கனுக்கு புத்திரருமான புஷ்பமித்திரரென்பவர் தமக்கு யஜமானனாகிய பிருகத்ரதனைக் கொன்று தாம் அரசனாவார். அவருக்கு அக்னிமித்திரரும், அவருக்கு ஸுஜ்யேஷ்டரும், அவருக்கு வஸுமித்திரரும், அவருக்குப் பத்ரகரும், அவருக்குப் புளிந்தரும், அவருக்கு யோகரும், அவருக்குத் துவஜமித்திரரும், அவருக்குப் பாகவதரும், அவருக்குத் தேவஹூதியும் புத்திரர்களாக ஜனிப்பார்கள். மேற்காட்டிய சுங்கர்களென்ற பத்து அரசர்கள் 111-வருஷங்கள் பூமியை அநுபவிப்பார்கள். அதன் பின்பு இப்பூமியில் அற்ப குணமுள்ள கண்வர்களுடைய வம்சமிருக்கும்.

**20—21.** தேவஹூதியின் மந்திரியான வஸுதேவரென்பவர், தேவஹூதி ஸ்திரீயிடத்தில் ஆசைப்பட்டதால் அவனைக் கொன்று தாம் அரசனாவார். அவர் மிக்க புத்திசாலியாக இருப்பார். அவருக்குப் பூமித்திரரென்றும், அவருக்கு நாராயணனென்றும், அவருக்கு ஸுசர்மாவென்றும் புத்திரர்கள் ஜனிப்பார்கள். இவர்களே கண்வாயனர்களெனப்படுவார்கள். மேற்காட்டிய கண்வர்கள் கலியுகத்தில் முந்நூற்று நாற்பத்து ஐந்து (345) வருஷங்கள் இந்தப் பூமியை அநுபவிப்பார்கள்.

**22—28.** ஸுசர்மாவின் வேலைக்காரனும் மிகவும் அஸத்தும் சூத்திரனுமான பலியென்ற ஆந்திர ஜாதியில் பிறந்தவன்

(தெலுங்கு ஜாதி) ஸுசர்மானைக் கொன்று சொற்ப காலம் அரசனுவான். அவனுடைய சகோதரராகிய கிருஷ்ணரென்பவர் பலிக்குப் பின்பு அரசனுவார். அவருக்குச் சாதகர்ணரென்றும், அவருக்குப் பௌர்ணமாசரென்றும், அவருக்கு லம்போதர ரென்றும், அவருக்கு மேகசுவாதி யென்றும், அவருக்குத் தண்டமானரென்றும், அவருக்கு அரிஷ்டகர்மா வென்றும், அவருக்கு ஹாலேயரென்றும், அவருக்குப் புரீஷசேது வென்றும், அவருக்கு சுதர்சனரென்றும், அவருக்குச் சகோரரென்றும், அவருக்குக் கோமதியென்றும், அவருக்குப் புரீமானென்றும், அவருக்கு வேதரென்றும், அவருக்குச் சிவரென்றும், அவருக்கு ஸ்கந்தரென்றும், அவருக்கு யக்ஞசீலரென்றும், அவருக்கு சிதரென்றும், அவருக்கு அசிதரென்றும், அவருக்குச் சுருதஸ்கந்தரென்றும், அவருக்கு யக்ஞசத்ருவென்றும், அவருக்கு விஜயரென்றும், அவருக்குச் சத்திரபீஜரென்றும், அவருக்கு சுலோமதியென்றும் புத்திரர்கள் ஜனிப்பார்கள். மேற்காட்டிய முப்பது அரசர்கள் 456-வருஷ காலம் பூமியைக் காப்பாற்றுவார்கள்.

29—31. அதன்பின்பு ஏழு ஆபீரர்களும், அவர்களுக்குப் பின்பு பத்து கர்த்தபிகளும், மிக்க ஆசையுள்ள பதினாறு கங்கர்களும், அதன்பின் எட்டு யவனர்களும், பதினான்கு பர்பரர்களும், பதின்மூன்று முருண்டர்களும், பதினொன்று மௌனர்களும் அரசர்களாவார்கள். மேற்காட்டிய (மௌனர்கள் தவிர) அறுபத்து எட்டு அரசர்களுடைய ராஜ்ய காலம் 1099-வருஷங்கள். மௌனர்கள் முந்நூறு வருஷங்கள் பூமியைப் பரிபாலிப்பார்கள்.

32—42. அவர்களுக்குப் பின் பூதநந்தன், யவஹரன், சிசுநந்தி, அவருடைய சகோதரராகிய யசோநந்தி ஆகிய இவர்கள் கிலிங்கிலாவென்ற நகரத்திலிருந்து 106-வருஷங்கள் பூமியை அநுபவிப்பார்கள். அவர்களுக்குப் பதின்மூன்று புத்திரர்கள்

ஜனிப்பார்கள். அவர்களுக்குப் பாஹ்லீகர்களென்று பெயர். அதில் புஷ்யமித்திரனென்று ஒருவன் தர்மமித்திரனென்று புத்திரனுடனிருப்பான். மேற்காட்டிய பாஹ்லீகர்கள் முதலியவர்கள் ஒரே காலத்தில் அரசர்களாக இருப்பார்கள். அவர்களிடமாக ஏழு ஆந்திரர்களும், ஏழு கோஸலர்களும், நிஷத தேசத்து அரசர்களும், வைதூர்யத்து அரசர்களும், மகத தேசத்து அரசர்களும் ஜனிப்பார்கள். விசுவஸ்பூர்ஜியென்று ஒருவன் மகத தேசத்திற்கு அரசனாவான். அவன் புரஞ்சயனைவிட மிக்க பிரசித்தியுள்ளவனாவான். மேலுமவன் மிலேச்சர்கள் போன்ற புளிந்த, யது, மத்திரனென்று பெயருள்ள ஜாதிகளை ஸ்தாபிப்பான். அவனுடைய காலத்தில் பிரஜைகள் பெரும்பாலும் பிராம்மண பக்தியில்லாதவர்களாக இருப்பார்கள். அந்த அரசன் மிக்க பலமுள்ளவனானதால் பத்மவதியென்ற நகரத்திலிருந்து கங்கா துவாரம்முதல் பிரயாகம் வரையிலுள்ள பூமியைப் பரிபாலிப்பான். ஸௌராஷ்டிரம், அவந்தி, ஆபீர, அற்புதம், மாளவம் முதலிய தேசத்திலுள்ள பிராம்மணர்கள் உபநயனம் முதலிய சம்ஸ்காரமில்லாமல் விராத்யர்கள்போல் இருப்பார்கள். மேலும் அந்தக் காலத்தில் சமுத்திரக்கரைகளிலுள்ள தேசங்களையும், சந்திரபாகா நதியின் கரையிலுள்ள தேசங்களையும், காஞ்சி பட்டணத்தையும், காச்மீர தேசத்தையும், வேதாசார சூன்யர்களான சூத்திரர்களும், அவர்களுக்கும் தாழ்ந்த ஜாதியார்களும் அநுபவிப்பார்கள். மேற்காட்டிய இவ்வரசர்கள் ஒரே காலத்திலிருப்பவர்கள். பெரும்பாலும் மிலேச்சர்கள் போன்றவர்கள். அதர்மம், பொய் இவைகளில் நோக்கமுள்ளவர்கள்; சொற்பமாகக் கொடுப்பவர்கள்; மிக்க கோபமுள்ளவர்கள்; ஸ்திரீகள், சிறுவர்கள், பசுக்கள், பிராம்மணர்கள் ஆகிய இவர்களை இம்சிப்பார்கள். பரஸ்திரீகளிடத்திலும், பிறருடைய பணத்திலும் ஆசைப்படுவார்கள். சொற்ப காரியத்தில் சந்தோஷத்தை அடைவார்கள்; சொற்ப காரியத்தில்

கோபத்தையுடையவர்கள் ; அற்ப பலமுள்ளவர்கள் ; அற்பாயுள் உள்ளவர்கள் ; உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்களற்றவர்கள் ; அநுஷ்டானமற்றவர்கள் ; ரஜோகுணம், தமோகுணம் இவைகளால் வியாபிக்கப்பெற்றவர்கள். இப்படி துஷ்டர்கள் அரசர்களாகவிருந்து ஜனங்களுடைய பணம் முதலியவைகளைப் பிடுங்கிக்கொண்டு பிரஜைகளை உபத்திரவிப்பார்கள். அவர்களுடைய ராஜ்யத்திலுள்ள ஜனங்கள் அவர்களுடைய ஸ்வபாவத்தையும், ஆசாரத்தையும் அநுசரித்து அவர்களுடைய வார்த்தையையே சொல்லிக்கொள்வார்கள். மேலும் அவர்கள் அரசர்களால் உபத்திரவத்தை அடைவதுடன் ஒருவருக்கொருவர் உபத்திரவித்துக்கொண்டு கெடுதியை அடைவார்கள்.

## அத்தியாயம் 2

### கலியில் நடப்பவை

பின்பு கலியுகத்தில் தர்மம், சத்தியம், பொறுமை, தயை, ஆயுள், தேக பலம், ஞாபகம் ஆகிய இவைகள் நாளுக்கு நாள் குறையும். கலியில் பணமுள்ளவனே மேலான குலத்தில் பிறந்தவனாவான்; பணமுள்ளவனே ஆசாரமுள்ளவனாவான் ; பணமுள்ளவனே குணமுள்ளவனாவான். தர்மம், நியாயம் இவைகளின் நிர்ணயத்தில் பலமே காரணமாகும். மணஞ் செய்துகொள்வதில் அவரவர்களுடைய இஷ்டமே காரணமாகும். (குலங் கோத்திரங்களைக் கவனிக்கமாட்டார்களென்று கருத்து.) கொடுத்தல் வாங்கல் முதலியவைகளில் பேசுந்திறமையுள்ளவனே ஸமர்த்தனாவான். (கபடமில்லாமல் பேசுவதில்லை என்று கருத்து) ஆண் ஆனாலும், பெண் ஆனாலும் நல்ல குலத்தில் பிறந்திருப்பது, நல்ல ஆசாரமுள்ளவர்களாக இருப்பது ஆகிய குணங்களைக்கொண்டு சிறந்தவர்களாகிறதில்லை. போகத்தில் சாமர்த்தியமுள்ளவர்களானால் அவர்களே சிறந்தவர்களாவார்கள். பிராம்மணனுக்கு யக்ஞோபவீதமே அடையாளமாக-

